உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

[நாகார்ஜுன மலைச் சிறபம் – கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
படம் உதவி: நேஷனல் மியூஸியம், புதுதில்லி.]

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பாபா பரீது

மூலம்

பால்வந்த்சிங் ஆனந்து

தமிழில்

மா. இராமலிங்கம் ["எழில் முதல்வன்"]



சாகித்திய அக்காதெமி

Baba Farid. Tamil translation by Professor M. Ramalingam
("Ezhilmudalvan") of Balwant Singh Anand's monograph in English
Sahitya Akademi, New Delhi (1994)


First Published 1994
ISBN 81-7201-518-6

**சாகித்திய அக்காதெமி**
இரவிந்திர பவன், 35, பெரோஸ் ஷா சாலை,
புது தில்லி 110 001.

'சுவாதி' மந்திர் மார்க், புதுதில்லி–110 001.

ஏ.டி.ஏ. ரங்கமந்திர, 109 ஜெ.ஸி. ரோடு, பெங்களூர்–560 002.

'குணா பில்டிங்ஸ்', 304–305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை–600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா–700 053.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலயா சாலை,
தாதர், பம்பாய்–400 014.

விலை ரூ. 15/–

உதயம் ஆப்செட்ஸ், சென்னை - 600 002.

உள்ளே....

# முன்னுரை

செய்கு பரீது—உத்—தீன் அவர்களின் எண்ணூறாவது ஆண்டுவிழா 1973—74—ஆம் ஆண்டின் மழைக்காலத்தில் தில்லியில் கொண்டாடப்பட்டது. அக்காலகட்டத்தில் தில்லியில் நடந்த எத்தனையோ நிகழ்ச்சிகளுக்கிடையே இது நாம் நினைவுகூரத்தக்கதாக இருந்தது. இந்நிகழச்சியை ஏற்பாடு செய்த பெருமை பாட்டியாலாவில் உள்ள பஞ்சாபி பல்கலைக்கழகத்திற்கே உரியது. அப்போது பாபா பரீது பற்றிய அனைத்துலக அளவிலான கருத்தரங்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. வரலாற்றாசிரியர்கள், அறிஞர்கள், பரீதின் பாடல்களில் ஈடுபாடு கொண்டோர் எனப் பலரும் 'இந்தியா இண்டர்நேஷனல்' மையத்தில் ஒருங்கு கூடினர்.பரீதின் வாழ்க்கை பற்றியும் அவரது படைப்புகள் பற்றியும் மூன்று நாட்கள் விவாதித்தனர். அக்கூட்டம் ஒத்த கருத்துடைய அறிஞர் பெருமக்களின் கூட்டமாக அமைந்தது. அந்நிகழ்ச்சி இந்திய நாட்டு, வெளிநாட்டு அறிஞர்களுக்கிடையே நட்புணர்வை வலுப்படுத்திக்கொள்ள உதவுவதாக அமைந்தது. பாபா பரீதின் சுலோகங்களில் வியப்பார்வம் கொண்ட நாங்கள் அவற்றை அடிக்கடி பாடி மகிழ்ந்தோம்; அதுவரை நாங்கள் அதிகம் அறிந்திராத பரீதின் பாடல்களில் காணப்பட்ட சூஃபிசத்தின் பல கூறுகளையும் புரிந்து கொண்டோம். நாங்கள் ஒருநாள் மதிய உணவிலும் கலந்துகொண்டு மகிழ்ந்தோம். அந்நிகழ்ச்சி குவாஜா நிஜாமுத்தீன் சிஸ்டியைச் சார்ந்த கல்லறை மாடத்தின் பக்கத்தில் உள்ள சிஸ்டி பண்பாட்டு மையத்தில் நடந்தது; உணவுக்குமுன்னர், விருந்துகொடுத்தோர் ஒரு நிகழ்ச்சிக்கும் ஏற்பாடு செய்திருந்தனர். அதில் மறைந்த ஞானியர்களுக்கு அஞ்சலி செய்யும் வகையில் வழிபாடு நடத்தப்பட்டது. சிஸ்டி சில்சிலா பாடல்களைக் காவலிகள் உணர்ச்சிமயமாகப் பெருங்களிப்பு நிலையில் பாடி மகிழ்வித்தனர். நடத்தப்பட்ட கருத்தரங்கும் அதையொட்டிய விழாக்களும் பலதரப்பட்ட கலாச்சாரப் பிணைப்பு நிறைந்த இந்திய நாட்டிற்கு பரீது அளித்த கொடைபற்றிய நனவுணர்வை மேலும்மேலும் மிகுவிப்பதாய் அமைந்தன.

கருத்தரங்கு முடிந்த சில நாட்களுக்குள் சாகித்திய அக்காதெமியிடமிருந்து எனக்கு ஒரு மடல் வந்தது; பாபா பரீது பற்றி

சிறிய அளவில் ஒரு நூலை எழுதி அளிக்குமாறு கேட்டிருந்தனர். இதைவிட வேறு மகிழ்ச்சி என்ன இருக்க முடியும்? உண்மையில் அது எனக்கு அளவிறந்த மகிழ்ச்சியையே அளித்தது. ஆனால் இந்நூலை எழுதி முடித்தற்கு அகாதமியினர் எனக்குக் கொடுத்திருந்த காலக்கெடு சில உடனடித்தேவையை உருவாக்கிற்று. எனினும் இப்பணியை ஏற்றுக்கொள்வதில் நான் மகிழ்ச்சியடைந்தேன். பரீதின் வாழ்க்கை பற்றிய ஆதாரப்பூர்வமான தகவல்கள் சிறிதளவே இருந்தன; இது முதல் இடர்ப்பாடு. இரண்டாவதாக இப்போது கிடைக்கும் பரீது பாடல்களின் மொழிபெயர்ப்புக்கள் மூல நூலுக்கு நியாயம் செய்வதாய் இல்லை. பொதுவாகவே கவிதை என்பது ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு எளிதாகப் பெயர்க்கக்கூடியதன்று. உணர்ச்சி வளம்மிக்க—கருத்தளவில் நயநுட்ப வேற்றுமைகள் கொண்ட கவிதைகளையும் அவை வேரூன்றி நிற்கும் பண்பாட்டு சமூகப் பின்னணியையும் சரிசமமாக நாம் இன்னொரு மொழியில் வேறு சமன்பாடுகளால் எடுத்துக்காட்ட முடியாது. அதுவும் ஒரு மொழி கீழைநாட்டு மொழியாக இருந்த மற்றொன்று மேலைமொழியாக அமையுமாயின் அது இன்னும் முடியாதுபோய்விடும். பரீதின் கவிதைகள் மெக்காலிஃப் என்பவராலும், கோபால்சிங் என்பவராலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. முன்னவர் செய்த மொழிபெயர்ப்பு சொல்லுக்குச் சொல் செய்யப்பட்ட மொழிபெயர்ப்பு எனலாம். அதன்கண் நாம் சமய ஆன்மீக ஆழ்பொருள்களை முழுமையாகக் காணமுடியவில்லை. கோபால்சிங்கின் மொழிபெயர்ப்பை நாம் ஒப்பீட்டுநிலையில் பார்த்தால் மிகவும் கற்பனையானதாகவும், மிகுசுதந்திரம் எடுத்துக்கொண்டது போலவும் தோன்றுகிறது. சில தனிச்சிறப்புக் கூறுகள் மொழிபெயர்ப்பில் விடுபட்டுள்ளன. குஷ்வந்த் சிங்கும், குருபச்சன்சிங்கும் சில செய்யுட்களை மொழிபெயர்த்திருக்கின்றனர். அவர்களது மொழிபெயர்ப்புக்கள் முன்னவற்றைவிடச் சற்றே மேம்பட்டவை. எனினும் மொழிபெயர்க்கப்படவேண்டியவை இன்னும் பல உள; அனைத்தையும் மொழிபெயர்த்து அனைவர்க்கும் கிட்டும் வகையில் இனிமேல் தான் அவர்கள் செய்தாக வேண்டும். எனவே, நான் குறையுடையது என்று கருதினாலும் வேறுவழியின்றி மக்காலிஃப்பின் மொழிபெயர்பையே பெரிதும் சார்ந்திருக்க வேண்டியிருந்தது. பாட்டின் அடியிழையாக ஓடும் இன்னோசையையும் ஆழ்ந்த அர்த்தங்களையும் படிப்போர் ஓரளவு புரிந்துகொள்வரென்றே கருதுகிறேன்.

அராபிய பாரசீக நாடுகளில் ஸூஃபிசம் தோன்றியதையும் அது ஸூஃபி சில்சிலா வடிவில் இந்தியாவுக்கு வந்தமையையும் இந்நூல் சுருங்கக் கூற முயல்கிறது. செய்கு பரீதின் வாழ்க்கை விவரங்களைச் சொல்வதோடன்றி சீக்கியர்களின் புனிதநூலாகிய குருகிரந்த சாகிபில் இணைக்கப்பட்டுள்ள அவரது பாடல்களை ஆராய்ந்து மதிப்பீடு செய்யவும் இந்நூலில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இச்சிற்றேடு பாபா பரீதின் ஆளுமையையும் படைப்புக்களையும் பற்றி ஓரளவுக்கு விவரங்களைத் தரும் என்னும் நம்பிக்கையுடையேன்.

41, பச்சிமி மார்க், பல்வந்த்சிங் ஆனந்து
வசந்த் விகார்,
புதுதில்லி.

## இயல் : ஒன்று

# வரலாற்றுப் பார்வை

அனுபூதி நிலை என்பது எல்லாச் சமயங்களிலும் அவற்றின் மைய உள்ளீடாகவும் பிழிவாகவும் விளங்குகிறது. அனைத்தையும் கடநத இறைநிலை மெய்ம்மையோடு இரண்டறக் கலந்து ஒன்றி நிறக மனித மனம அவாவியதன் விளைவாகவே அது தோன்றிற்று. ஆழ்நத சமய நாட்டமுடையோர்க்கு அனுபூதி நிலை கிட்டாத சமய அனுபவம் வெறும் பொருளற்ற ஒன்றேயாம். வழிபடுதல், நோன்புகள் நோற்றல், திருத்தல யாத்திரை மேற்கொள்ளல் போன்ற ஆசார நெறிகளில் மடடுமே அவர்கள் நிறைவு பெறுவதில்லை. அவர்களது ஈடுபாடு இன்னும் ஆழமானது; வீறுடையது. எனவே, அவர்கள் அனுபூதிச் சிந்தனைகளையும் அனுபவங்களையும் தேடுகின்றனர். அனுபூதி நிலை என்பது ஏனைய சமயங்களில் உள்ளது போலவே இஸ்லாம் சமயத்திலும் ஆழமாக வேரோடி நிற்கிறது; எனினும் அது இறைத்தூதர் நபிகள் பெருமானாரால் சமயத்தின் ஒரு உள்ளார்நத கூறாக உருவாக்கப்படவில்லை; அது பின்னாளில் ஏற்பட்ட தொடர்ந்த வளர்ச்சியே ஆகும். இஸ்லாமிய அனுபூதி எனபது 'சூஃபிசம்' (Sufism) என்னும் சொல்லால் சுட்டப்படுகிறது. இஸ்லாத்தில சூஃபிசத்தின் தோற்றத்தையும், வளர்ச்சியையும் அது இந்திய மண்ணிற்குச் சில்சிலா வடிவில் வந்ததையும் சரியாகப் புரிந்துகொள்ள இஸ்லாத்தின் சில அடிப்படைக் கோட்பாடுகளையும் சட்டங்களையும் நாம் தெரிந்திருத்தல் வேண்டும். அனுபூதிச் சிந்தனைக்கு அழைத்தேகும் வகையில் இஸ்லாத்தில் காணப்படும் சில அடிப்படை நெறிகள், ஈரான நாட்டில் அறிஞர்கள் கவிஞர்களிடையே அது ஏற்றுக்கொள்ளப்பட்டு பரவலாகப் போற்றப்பட்ட நிலை, பின்னர் அது மவுலிகள், உலமாக்கள், சூஃபிகள் வழியே இந்தியாவுக்குப் படிப்படியே இஸ்லாம் கொண்டுவரப்பட்ட நிலை — அனைததையும் நாம் அறிந்ததாக வேண்டும். இவறறையெல்லாம் முழுமையாக விரித்துரைக்க முன்றால் அது தொலைதூர நாடுகளை உள்ளடக்கிய சுமார் ஆயிரமாண்டுக்கால வரலாறாக நெடிது விரியக் கூடும்; அப்போதுதான் அவற்றை முழுமையாக விளக்க முடியும். எனினும் சூஃபிக் கவிஞர்களின படைப்பில் வெளிபபடும் சூஃபியிசத்தை — அனுபூதி நிலையை ஓரளவு அறிநதுகொள்ள உதவும் வகையில

பின்னணியாகச் சில கருத்துக்களை இங்குச் சுட்டிக்காட்டுவது மிக மிக அவசியமாகும்.

இஸ்லாம் எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஒரு சமயம். அது பேசாத பொருளில்லை. ஆன்மீகம், சமுதாயம், அரசியல், பொருளாதாரம் என வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் பற்றி அது பேசுகிறது. "திருக்குர்ஆனின் நுவல்பொருள் முழுமையான மனிதனேயாவன்; அவனுடைய நம்பிக்கைகள், அவன் ஏற்றிப் போற்றும் விழுமியங்கள், வழிபாட்டு முறை, நடத்தைபற்றிய விதிகள், சமுதாயச் சட்டங்கள், அரசு நெறிகள், பொருளாதாரம் தொடர்பான வரன்முறைகள் அனைத்துமே இஸ்லாத்தில் இரு பெரும் அடிப்படை கொள்கைகளின் விளைவாகவே எழுந்தது. ஒன்று: கடவுள் ஒருவரே என்னும் கொள்கை; மற்றொன்று: அவரே வானுலகையும் மண்ணுலகையும் படைத்தார் என்னும் நம்பிக்கை. இறைவன் ஒருவரே என்பதால் அவர் ஒருவரே அனைத்துயிர்க்கும் மேலானவர்; எல்லாரினும் மேம்பட்டவர். அவர் விதிக்கும் சட்டங்களும் தீர்ப்புகளுமே முடிந்த முடிபானவை. இஸ்லாம் சிறுதெய்வங்களை ஏற்பதில்லை; எனவே, இறைவனின் நியாயத் தீர்ப்பில் குறுக்கிடும் உரிமை யாருக்கும் இல்லை. அவரே உலகைப் படைத்தவர்; அவர் ஒருவரே தானேயாய் நிற்கும் தனிப்பொருள். மற்ற அனைத்தும் அவரால் படைக்கப்பட்டனவே; அவருடைய விருப்பத்திற்கு உட்பட்டு நிற்பனவே. இறைத்தூதர்களும் மனிதர்களே; அவர்களும் இறைவனின் ஆணைக்குக் கட்டுப்பட்டவர்களே. அவர்கள் இறைவனின் அன்புக்கும் அருளுக்கும் பாத்திரமானவர்கள். இறைவனின் நற்செய்தியைப் பரப்பும் கருவி என்னும் அளவிலேயே அவர்கள் முக்கியத்துவம் பெறுகிறார்கள். அதனாலேயே அவர்கள் மதிக்கப்படுகிறார்கள்; பின்பற்றப்படுகிறார்கள்.

படைப்போன், படைக்கப்படும் பொருள் ஆகிய இரண்டிற்குமிடையே, தெள்ளத் தெளிவான வரையறையைக் கண்டுள்ளது இஸ்லாம். அவர்கள் வெவ்வேறு உலகங்களில் வாழும் பேறு பெற்றவர்கள். இறைவன் வானுலகில் உள்ளார்; மக்கள் மண்ணுலகில் வாழ்கிறார்கள்; மரணத்திற்குப் பின் துறக்கத்திற்கோ நரகத்திற்கோ செல்கிறார்கள். இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே கூட்டுறவோ, கலப்போ இல்லை; எல்லைக்கு உட்பட்ட ஒன்று எல்லையற்ற ஒன்றோடு கலப்பதில்லை.

இஸ்லாம் மற்ற சமயங்களைப் போலன்று; அங்கே மூடி மறைக்கப்பட்ட இரகசியங்கள் எதுவும் இல்லை. இஸ்லாம் திறந்த புத்தகம் போன்றது. நபிகள் பெருமானார்க்கு இறைவன்

அவ்வப்போது இறக்கிய நற்செய்திகளே குர்ஆனில் உண்டு. எப்போதெல்லாம் இறைவாக்குகள் இறக்கப்பட்டனவோ அப்போதெல்லாம் பெருமானாரின் கட்டளையால் அவை எழுதிவைக்கப்பட்டன. எனவே, குர்ஆன் என்பது இறைவனின் திருவசனங்களின் தொகுதியே. எனவே, இஸ்லாமியர்க்கு வழிகாட்டுகிற மேல்வரிச்சட்டமாக அது திகழ்கிறது. உலகியல் நிலையிலும் ஆன்மீக நிலையிலும் பின்பற்றத்தக்க சட்டங்களை நாம் இதில் காணலாம். இச்சட்டங்கள் நடைமுறையில் பின்பற்றப்படத்தக்கனவாக இருந்தன; பிறருக்கு எடுத்துரைக்கத்தக்கனவாக இருந்தன. மக்களின் சமூக—அரசியல் வாழ்வின் ஒரு கூறாக ஆயின. அயல்நாடுகட்கும் பரப்பப்படவேண்டிய நற்செய்திகளாயின. எல்லாவற்றிற்கும் மேலாக இறைவன் முகம்மதுநபி [சல்] அவர்கட்கு இறக்கிய திருவசனங்களாக அவை இருந்தமையாலும் மக்கள் அனைவர்க்கும் அவற்றின் உட்பொருளை விளக்கிக் கூறும் கடப்பாடு சமயத் தலைவர் என்னும் நிலையில் அவர்க்கு இருந்தமையானும் அது அவரது கடமையாயிற்று. பெருமானார் தம் கடமையை ஈடுபாட்டோடும் உறுதியோடும் நிறைவேற்றினார். அவர் ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்கினார்; குர்ஆனில் கூறப்பட்டுள்ள சட்டங்களின்படியே ஒரு புதிய சமுதாய ஒழுங்கை ஏற்படுத்தினார். உண்மையில் அராபியர்களின் வாழ்க்கையை முழுதுமாக மாற்றியமைத்த புரட்சியாளர் அவர்; அவருடைய அறிவுரைகளால் புத்துணர்வு பெற்றே அராபியர்கள் பல நாடுகளை வெற்றிகொண்டனர். தொலைதூர நாடுகளில் இஸ்லாத்தைப் பரப்பினர். இஸ்லாத்தினைத் தாங்கி நிற்கும் பெரும்தூணாக அவர்கள் குர்ஆனைக் கொண்டதில் வியப்பேதும் இருக்க முடியாது.

குர்ஆனின் வரும் சிற்சில குறிப்புகள், குட்டிக்கதைகள், பெருமானாரோடு உடனிருந்தோர் தம் பிற்காலத்தோருக்கு வாய்மொழியாக விட்டுச்சென்ற சில மரபுகள் [ஹதீது] ஆகியனவே நாம் பெருமானாரைப் பற்றி அறிவதற்கு அடிப்படையாக உள்ளன. இம்மரபுகள் வரையறுத்துக் கூறும் ஓர் எடுத்துக்காட்டான நல்வாழ்வே இஸ்லாத்தில் 'சுன்னா' என்று கூறப்படுகிறது.

குர்ஆனும் இம்மரபுகளும் இணைந்த நிலையே இஸ்லாமிய ஷரியாவின் மூலம் எனலாம். இவற்றில் கூறப்படும் சட்டங்களும் வரன்முறைகளுமே ஒரு முஸ்லீமின் முழு வாழ்வையும்

நிர்ணயிக்கின்றன எனலாம். குர்ஆனும் சுன்னாவும் மனித வாழ்வின் ஆன்மீக அம்சங்களை மட்டுமன்றி அவனது மொத்த சமூக நடத்தைகளையும் உள்ளடக்கியதாக இருக்கின்றன.

மனிதன் முழுமையான நிலையை அடைய வேண்டியவன்; எனவே, படைக்கப்பட்ட உயிரிகளுள் அவன் மிக உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான். அவன் அறிவாண்மையும் விரும்பியதைத் தேர்ந்தெடுக்கும் திறனும் உடையவனாகப் படைக்கப்பட்டிருக்கிறான்; இவையே அறிவைத் தேடவும் அவற்றின் வாயிலாக எல்லையற்ற பேராற்றலைப் பெறவும் அவனுக்கு உதவுகின்றன. அறிவாண்மையே இயற்கையின் சக்தியைப் புரிந்துகொள்ளவும், அதைத் தன் நன்மைக்காகப் பயன்படுத்திக் கொள்ளவும் அவனுக்குத் துணைபுரிகிறது. மனிதன் பகுத்தறியும் திறன் படைத்தவன். நன்மை தீமை எனும் இரண்டனுள் எந்த ஒன்றையும் அவன் தேர்ந்தெடுத்துக்கொள்ள முடியும். மனிதனின் ஆற்றல்கள் அனைத்தும் இறுதி நிலையில் அவன் மெய்ஞ்ஞானம் அடையவே [தஸவ்வபு] உதவுகின்றன. ஷரியாவின் கடைசி முடிவு இதுவே. இறைவனிடம் நேயம் கொள்ளவும், அவனது வல்லாண்மையை ஏற்றுக்கொள்ளவும், வழிபடவும், எளிவந்த தன்மையனாய் அவன் முன்னே மண்டியிட்டு நிற்கவும் அவன் உரியனாகிறான்.

இந்த உலக வாழ்க்கைக்குப் பின் மனிதன் என்னவாகிறான்? அவன் வாழ்வு என்னவாகும்? இவ்வினாக்களுக்கு விடை எளிதே. இஸ்லாமியக் கோட்பாடு இதைத் தெளிவுபடுத்துகிறது. மீட்டெழுப்பு நாளன்று இறைவனின் நியாயத்தீர்ப்பின்படியே அவனது வாழ்வு அமைகிறது. மரணத்திற்குப் பின் உயிர்த்தெழும் நாளில் ஆண்டவனின் தீர்ப்புக் கிடைக்கும்வரை மனிதன் இடைப்பட்ட நிலையிலேயே இருந்து வருகிறான். அதன்பின் சொர்க்கத்தில் கடவுளோடு தோழமையுறவு கொள்கிறான். இந்தக் கூட்டுறவுநிலை வேதாந்திகள் கூறும் கடவுளோடு ஒன்றும் அத்துவைத நிலையன்று; கூடி வாழும் நிலையே. நிர்வாணமடைதல் என்னும் வேதாந்தக் கொள்கை — எல்லைக்குட்பட்ட ஒன்று எல்லையிகந்த ஒன்றோடு இணைந்து ஒன்றாவது என்னும் கொள்கை — இஸ்லாத்துக்கு உடன்பாடன்று.

குர்ஆனின் ஆணையை மீறாத நிலையில் அமையும் சமயவாழ்வு பற்றி ஓரிரு சொற்கள் கூறியாதல் வேண்டும். அது கலிமாவோடு

தொடங்குகிறது. "லாஇலாக இல்லல்லாகு முகம்மதுர் ரசூலுல்லாகி'. கடவுள் ஒருவரே: நபிகள் பெருமானார் அவரது தூதரே. ஓர் இஸ்லாமியர்க்கு நம்பிக்கையின் அடிப்படையாக அமைவது இவ்விரண்டுமே எனலாம். இறைவனோடு கூட்டுறவு கொள்வதும் நபிகள் பெருமானை இறைத்தூதராக ஏற்பதும் ஆகிய இரண்டுமே அவர் கொள்ளும் நம்பிக்கை ஆகும். உயிர்த்தெழுதல், இறுதிநாள் தீர்ப்பு ஆகிய இரண்டனையும் நமபவேண்டியவர்களாகவே முஸ்லீம்கள் இருந்தனர். இம்மைக்கும் மறுமைக்கும் இந்நம்பிக்கைகள் தேவைப்பட்டன. கடவுள்மீது [இமாம்] நம்பிக்கை வைப்பதோடன்றி ஒரு நாளைக்கு ஆறு தடவை தொழுகை நடத்துதல், தம் வருவாயில் ஒரு குறிப்பிட்ட பகுதியை வழங்குதல் [ஜகாத்], ரமலான் மாதத்தில் நோன்பு நோற்றல், வாழ்வில் ஒருமுறையாவது மெக்காவுக்குப் புனிதப் பயணம் போதல ஆகிய கடமைகளும் ஓர் இஸ்லாமியனுக்கு வரையறுக்கபபட்டன. அறநெறியினின்றும் வழுவாத நேரிய வாழ்வு வாழந்து இவை கடைப்பிடிக்கபபடும் போதே அவை முக்கியம் பெறுகின்றன. அவ்வாறன்றி வெறும் சடங்குகள் இறைவனின திருமுன தகுதியற்றவையாய் ஒழிகினறன.

இனி இஸ்லாததுககும் அனுபூதி நிலைக்கும் உள்ள உறவுமுறைக்கு வருவோம. இஸ்லாமிய அனுபூதியம் அல்லது சூஃபிசம் முதலில துறவியலில பேசப்பட்டது. தொடக்க காலச் சூஃபிகள் கடும் நோனபு நோறகும் துறவிகளாயிருந்தனர். நபிகள் பெருமானாரின் தோழாகள் சிலர், இவவுலக வாழவை இழித்துரைத்தனர். நோனபு வாழ்வே மேறகொணடனா உலக இன்பங்களைக் கைவிட்டதுமனறி வறுமை வாழவை அவர்களே விரும்பி மேறகொண்டனர் சூஃபியின வாழ்வில தனனையே ஒறுத்துக்கொள்வது போனற கடுநதுறவு ஒரு முககிய பண்பாயிற்று. அவர்கள பிழைகளைப பொறுககுமாறு இறைவனை வேண்டிக் கொண்டனர். [இதனைத 'தவபா' எனபர்.] இறைவனிடம தம் முழு நமபிககைகயையும வைததனா [இதனைத 'தவககல' என்பர்.] இறைவனின அப்பாலுக்கப்பாலாம தனமை எனனும கோட்பாட்டினால் எழுச்சி பெறறனர் ஹிஜிரி இரண்டாம நூற்றாண்டின் அளவில சூஃபிசம எனபது ஒரு கடவுட கோட்பாடாக உருவாயிற்று. இறைவனைப பற்றிய அசசமும, நியாயத் தீர்ப்புநாள் பற்றிய சிந்தனைகளும் சூஃபிசத்தின முனைப்பான கூறுகளாக இருந்தன. போகபபோகத துறவிகள்

இறைநேயத்தை வற்புறுத்தினர். இவ்வழிபாடு பெண் அனுபூதியாளரான ராபியின் [பி. 185/801] பின்வரும் கூற்றில் வெளிப்படுகிறது. அவர் கூறினார்: "உன் உள்ளத்தில் வேறு எந்த ஒன்றின் மீதும் விருப்போ வெறுப்போ தோன்ற முடியாத அளவுக்கு நான் இறைநேயத்தால் ஆட்கொள்ளப்பட்டுவிட்டேன்". தெய்வக்காதல் (Devine Love) என்னும் கோட்பாடு அவர் பெயரோடு இணைத்துப் பேசப்படுகிறது. அனுபூதியாளர், அவரால் நேசிக்கப்படும் இறைவன் ஆகிய இருவர்க்குமிடையே உள்ள உறவைப் பற்றிப் பேசும் அவரது பாடல்களில், மானிடக் காதல் சார்ந்த குறியீட்டு மொழிகளை அவர் பயன்படுத்தினார். இப்போக்கு பின்நாட்களில் அராபியம் பாரசீகம் முதலான மொழிகளில் பேரளவில் தழுவிக்கொள்ளப்பட்டன.

இங்கே இன்னொன்றையும் குறிப்பிட்டாக வேண்டும்: இஸ்லாமியச் சட்டங்கள், விதிமுறைகள் எப்படி இருந்தாலும், ஊக்கமும் எழுச்சியும் உடைய ஆன்ம தாகத்தினர் சத்தியத்தைக் காண விழைந்தனர். அப்பாலை மெய்ம்மையோடு (Ultimate Reality) நேரடியான தனிப்பட்ட உறவு கொள்ள அவாவினர். அவர்கள் அனுபூதிச் சிந்தனைகளையும் அனுபவங்களையும் ஆன்மீக உள்ளொளி விளக்கத்திற்கு மூல ஊற்றாகக் கருதி நாடினர். வழிபாடு, உண்ணாநோன்பு, திருத்தல யாத்திரை முதலியவற்றை வற்புறுத்தும் குர்ஆன், ஹதீது [அறவுரை] முதலியவற்றை ஓதுவதிலும், பின்பற்றுவதிலும் இன்பம் கண்டனர். நாம் ஒன்றை இங்கே தெளிவுபடுத்திக்கொள்ள வேண்டும். சூஃபிகள், சமயம் வலியுறுத்தும் ஆசார அனுஷ்டானங்களை விலக்கவில்லை; மறுக்கவில்லை. அவர்கள் சமய நெறிக்கண் நின்றோரேயாவர். எனினும், அவர்கள் அறம் ஒழுக்கம் சார்ந்த நெறிகளில மட்டும் நிறைவு பெற்றோராய் அமைந்துவிடவில்லை. அப்பாலைநிலை மீதும், இயற்கை இறந்த நிலைமீதும் நாட்டம்கொண்டு நினறனர். புலனடக்கம், உளத்தூய்மை முதலியவற்றைப் போற்றினர்; மேலும், மதகுருமார்கள் விதிக்கும் தடையாணைகளோ விலக்குகளோ மட்டும் இறைவனோடு ஒன்றிக் கலந்து நிற்க உதவா என்று கருதினர். ஐம்புல ஒடுக்கத்தால் மட்டுமே உய்த்துணரத்தக்க முற்றிலும் மாறான ஓர் இருப்புநிலை பற்றி அவர்கள் ஆராய்ந்து காண விழைந்தனர். இம்மை வாழ்வைவிட நிறைவும் வலிவும தரவல்ல ஓர் உள்ளுலக அனுபவங்களில் அவர்கள் நிறைவு கண்டனர். அவர்கள் காண விழைந்தது எல்லையற்ற பரம்பொருள் பற்றிய ஞானமே எனலாம்.

முழுமையற்ற ஆன்மா பரம்பொருளோடு இணைந்து நிற்கும் நிலை அது; அப்பாலை மெய்ம்மை தன்னுள் நிறைந்து நிற்பதால் உணரும் நிலை இது. ஆம், அது கலப்பற்ற கழிபேருவகை போன்ற நிலை; அனைத்தும் கடந்த பெரிய பொருளோடு ஒன்றாக நிற்க விழையும் ஆசையின் நிறைவேற்றம். தணியாத ஆன்ம வேட்கையின் இறுதி நிலைப்பாடு; அது இத்தன்மைத்தானது எனறு சொல்லுதற்கரிய அனைத்துப் படைப்புகளிலும் அளாவி நிற்கும் ஒரு நிலைபேறான தன்மையே ஆம்!

மேலே செல்லும் முன், நாம் ஒரு விளக்கத்தை இங்கே நினைவுகூர்தல் நலம். சூஃபி என்னும் சொல் 'கம்பளி' என்னும் பொருளுடைய 'சூஃப்' என்னும் அராபியச் சொல்லிலிருந்து வருவிக்கப்பட்டது. அராபிய ஈரான் நாடுகளில் வாழ்ந்த சமயத் துறவிகள், பட்டு, பருத்தி ஆடை போன்றவற்றை அணியாமல கம்பளி ஆடைகளை அணிந்து வந்தனர். பாபா பரீது தம்முடைய சுலோகம் ஒன்றில் தன்னைக் கம்பளி ஆடையணிந்த துறவியாகவே வருணித்துக் கொள்கிறார். வேறு சிலர் இன்னொரு வகையான விளக்கம் தருகின்றனர். சூஃபி என்பது கிரேக்கச் சொல்லாகிய 'சோஃபோஸ்' என்பதிலிருந்து வநதது. அச்சொல்லுக்கு 'மறைவியல் ஞானம்' அல்லது 'ஆன்மீக ஞானம்' எனபதே பொருள் என்று விளக்குகின்றனர். எனவே, சூஃபி என்போர் ஆன்மீக ஞானத்தின் வாயிலாக இறைநிலையில் வாழும் சீவன் முக்தர் எனலாம். சூஃபி என்பதன் பொருள் தூய்மை என்பதாகும்; எனவே, அகத்தூய்மை பெற்றோர் சூஃபிகள் எனப்பட்டனர் என்பது மறறொரு விளக்கமாகும். இவ்விளக்கங்கள் அனைத்தினுள்ளும் பலராலும் ஒத்துக்கொள்ளத் தக்கது கம்பளி ஆடை அணிவது என்பதே. சூஃபிகள் எனப்படுவோர் உலக வாழவினின்று விலகித் தனிமையில் இருந்து இறைநிலையைத் தேடியவர்களே.

குர்ஆனும், நபிகள் பெருமானார் விளக்கிக கூறிய பலதரப்பட்ட அனுபவங்களுமே சூஃபிகளுக்கு அனுபூதியம் தருவனவாயின. பெருமானார் ஷரீஅத் [இறைவனை நெருங்குவதற்குரிய வழிகள்] என்னும் புறச்சடங்கினையே வற்புறுத்திப்பேசினரெனினும், குர்ஆனை நாம் நுணுகி ஆராய்ந்தால் தரீக்கத் [அனுபூதிய நெறி] பற்றியும் இஸ்லாமிய ஞானச் செல்வர்கள் பின்பற்றிய ஹகீகத் [மறையியல் ஞானம்] பற்றியும் கூறுகிற சில வசனங்கள் ஆங்கே காணப்படுவதை நாம் அறியலாம். இறைவன், அவனது வரம்பில்

ஆற்றலுடைமை, அவனது திருவாணை, அண்டம் முழுவதையும் ஓர் ஒழுங்கிற்கு உட்படுத்தி இயக்கிவரும் ஆட்சித்திறம் அனைத்தையும் பற்றிப் பேசும் சில திருவசனங்களும் குர்ஆனில் உள்ளன. மனிதகுலம் முழுவதையும் அப்படியே தழுவிக்கொள்ளும் பாங்கும், மனிதனைத் தன்னிடத்தே நெருங்கி வருமாறு அனுமதிக்கும் தன்மையும் இறைவனிடம் உள்ளன. உலகெலாம் சார்ந்த அப்பரம்பொருளோடு ஒன்றி நிற்கும் வழியைக் காட்டும் இறைவனது இயற்பண்புகளும் குர்ஆனில் பேசப்படுகின்றன. அனைத்தையும் விடப் பெருமானாரின் திருவெளிப்பாடுகளே இறைவனோடு நேரடியாகத் தொடர்புகொள்ளல் என்னும் எண்ணத்தைச் சூஃபிகளுக்கு ஊட்டின. இறைவன் பெருமானாரோடு பேசினாரெனில் பெருமானாரின் வழியைப பின்பற்றுவோரிடத்தும், அவரை நேசிப்போரிடத்தும் இறைவன் நிச்சயமாகப் பேசுவார் என்பதே அவர்கள் எண்ணம். சூஃபிகள் பெருமானாரின் விண்ணேற்றத்தில் [மிராஜ்] பெரும் நம்பிக்கை வைத்திருந்தனர். ஹதீதில் இச்செவிவழிச் செய்தி விரித்துப் பேசப்படுகிறது. நபிகள் பெருமானார் இறக்கைகள் கொண்ட 'புராக்' என்னும் குதிரைமீது ஏழாவது சொர்க்கத்திற்கு இவர்ந்தாரென்றும், அவர் இறைவன் திருமுன் அழைத்துவரப்பட்டார் என்றும் சொல்லப்படுகிறது.

ஹதீதின் மற்றொரு பகுதியில் இறைவனின் திருமுன் நபிகள் பெருமானார் ஓர் இரவைக் கழித்ததாகவும் கூறப்படுகிறது. சமயச் சட்டங்களை நிலைபெறுத்துவதற்காக உலகத்திற்குத் திரும்பிச் செல்லுமாறு இறைவன் பெருமானார்க்கு ஆணை வழங்கினாராம். இதுபோல் இறைவன் பெருமானாரோடு நேரடியாகப் பேசிய சநதர்ப்பங்கள் பல உண்டு. மனம் ஒன்றிய நேரடியான இவ்வுறவே சூஃபிகளுக்கு உள்ளார்ந்த எழுச்சியைத் தந்து சூஃபிசம் என்னும் கோட்பாட்டிற்கு வழி வகுத்திருக்க வேண்டும்.

இஸ்லாமிய சூஃபிய வரலாற்றைப் பார்த்தால் தொடக்க காலத்தில் சூஃபிகளும் ஏனைய இறையியலாளர்களும் கிரேக்கச் சிந்தனைகளின் செல்வாக்கிற்கு ஆட்பட்டிருந்ததைக் காணலாம். புதிய—பிளாட்டோனிசத்தின் இரு முக்கிய கோட்பாடுகள், இயல்வனயாவும் இறையுருவே என்பதும், ஆன்மநேய ஒருமைப்பாடுமேயாம். அனைத்திறைக் கொள்கை என்பதும் ஆன்மநேயமும், அண்டத்தில் தெய்வீகம் வெளிப்படுவதுமே ஆகும். இதனை 'வகாதத்—உல்—வாஜுத்' என்றும் 'ஷாபுது' என்றும் கூறுவர்.

கடவுள் அனைத்தினுள்ளும் நிறைந்திருக்கிறாரென்பதால், அவர் மனிதனிடத்தும் கலந்து நிற்கிறார். எல்லாப் பொருள்களிலும் இறை நிலையைக் காண்பதே சூஃபிசத் தத்துவத்தின் பெருஞ்சிறப்பாகும். பெருங்கவிஞர்களான ரூமியும் , அத்தாரும் தம் படைப்புகளில் இக்கருத்துகளை நன்கு வெளிப்படுத்தியுள்ளனர்.

சூஃபிச வரலாற்றில் பயாசித் புஸ்தாமி என்பாரின் பெயர் மிக முக்கியமானது. தஸவ்வபு [இறைநேயம் ] என்னும் கொள்கைக்கு ஒரு புதிய திருப்பத்தைத் தந்தவர் ஆவர். இறைநேயத்தில் கழிபேருவகை என்னும் மனநிலையை அவர் புகுத்தினார். ஆன்மீக ஆற்றலாய் விளங்கும் அன்பு பற்றிய புதிய—பிளாட்டோனியக் கருத்து பாரசிக சூஃபிகள் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் விளைவாகப் பல அரிய கவிதைப் படைப்புக்கள் உருவாயின. ஆனால், பயாசித் புஸ்தாமி இவ்வன்பு வழிபாட்டில் உணர்ச்சி நலம் கெழுமிய புலனின்பப் போக்கிற்கு வழிகண்டார். அகப்பாடலில் வரும் நாயக—நாயகி பாவம் கடவுட்பாட்டில் கலந்தது. ரபியாவின் பாடல்களில் மனிதக் காதல், குறியீட்டு நிலையில பேருணர்ச்சிப் பெருக்காக வெளிப்பட்டது. இது நேசிப்பதும் நேசிக்கப்படுவதும் ஒன்றும் கழிபேருவகை நிலையைக் காட்டுவதாக இருந்தது. காதல், வழிபாட்டு நிலைக்கு உயர்ந்து நின்றது. கழிபேருவகை, தியானமாயிற்று. இந்த மீமகிழ்ச்சி நிலையை அடைவதற்காகவே சூஃபிகள் தம் வழிபாட்டு நெறியில் குழுப்பாட்டிற்கும் ஆட்டத்திற்கும் இடமளித்தனர். காதலர்களின் சந்திப்பு, பிரிவு, அவர்விடும ஆழ்ந்த பெருமூச்சுக்கள், சிந்தும் கண்ணீர், ஆசைகள், அவற்றின நிறைவேற்றம், உடல் உறுப்புக்களைச் சிற்றின்பத் தோய்வு கலநத படிமங்களில் வருணித்தல் — இன்னும் இவைபோன்ற அனைத்திற்கும் ஆன்மீக நிலையில் விளக்கம் தந்தனர். இவ்வாறாக மானிடக் காதலுணர்வு ஆன்மீக நிலைக்கு உயர்த்தப்பட்டது. நாயக—நாயகி பாவம் கடவுள் நிலையை அடைய உதவும் மனநிலை ஆயிற்று.

மரபு வழுவாத இஸ்லாமியர்கள் இவ்வணுகுமுறைகளை ஏற்கவில்லை; இவ்வணுகுமுறையில் பயாசித் போன்றோர் அனைத்திறைக்கோட்பாட்டை ஏற்கும் பக்தர்களாயினர். அவர்கள் உலகப் பொருள்கள் அனைத்தினுள்ளும் ஆண்டவனைக் கண்டனர். "என் மேலாடைக்குள் கடவுளையன்றி வேறு யார் இருக்கிறார்கள்? நான எனககே போற்றி கூறுகிறேன்! என் பெருமை

எத்தகையது!" என்று அவர் கூறினார். பயாசித் புஸ்தாமி அவரது ஊரிலிருந்து பிரஷ்டம் செய்யப்பட்டார். பயாசித்தின் சிந்தனைகள் ஹுசைன் இப்ன் மஞ்சூர் அல்—ஹலாஜ் என்பாரால் மேலும் விரிவாக்கப்பட்டன. அவரது 'நானே கடவுள்' என்னும் கூற்று பெர்சிய இந்திய நாடுகளில் ஏற்பட்ட அனுபூதிய வளர்ச்சியில் ஒரு முக்கியக் கூறாக ஆயிற்று. எல்லாம் கடந்த அப்பாலுக்கப்பாலான இறைவனின் நிலையை – அப்பாலை நிலையை – ஹலாஜ் உறுதிப்படுத்தினார். இறைவனின் இயற்பண்புகளில் பல்வேறான தன்மையை நிர்ணயிப்பது தெய்வீக அன்பின் வெளிப்பாடே என அவர் நம்பினார். பரிபூரணம் பெற்ற மனிதனின் [இன்சான்—இ—கமால்] இயற்கை தொடர்பான கொள்கைக்கு இதுவே அடித்தளமாக அமைந்தது. இதனையே இருபதாம் நூற்றாண்டில் டாக்டர் முகம்மது இக்பால் புதுப்பித்தார். எனினும் காலிப்—அல்—முக்தாதிர் ஆட்சிக் காலத்தில் இக்கொள்கைகளைப் பேசியமைக்காக ஹலாஜ் கண்டனம் செய்யப்பட்டார்; தண்டனை வழங்கப் பெற்றார். கடவுள் வழிபாட்டில் கூட்டமாகவோ தனியாகவோ ஆடுவதையும் பாடுவதையும் பழமைவாதிகள் ஏற்க மறுத்தனர்; ஞான நெறியில் காமத்தையும் உணர்ச்சியையும் கலப்பதை அவர்கள் ஏற்கவில்லை.

இவைபோன்ற பல்வேறு கவர்வழிகளுக்கிடையேதான் சூஃபிசம் என்னும் சிந்தனையும் வாழ்க்கைப் போக்கும் பிறந்தன. இது ஷரீஅத் என்னும் வாழ்க்கை முறையோடு ஒட்டியது; ஆனால் அதே நேரத்தில் ஷரீஅத் தரீக்கத்திற்கும், தரீக்கத் மரீஃபத்திற்கும் மனிதனை இட்டுச் செல்லும் என்று அவர்கள் நம்பினர். எனவே, பரிபூரணத்துவம் என்பது அல்லது – கடவுளோடு கூடிநிற்றல் என்பது ஷரீஅத் இன்றி இயலாது; ஆனால் அதே நேரத்தில் இறைவனோடு கூடும் நினைவற்ற வெறும் ஹரீஅத்தும் பொருளற்றதாகும். எனவே, வழிபாடு, உண்ணா நோன்பு, திருத்தலப் பயணம் முதலியவற்றை வற்புறுத்தும்போது சூஃபிகளின் வாழ்க்கை தவ்பாவுடன் [பாவமன்னிப்பு கேட்டல்] தொடங்கிற்று. சூஃபிகள் பாவ வாழ்வை வெறுத்தனர்; இறைத்தொண்டிற்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டனர். இதன்பொருட்டு அவர்கள் உலகியலிலிருந்து ஒதுங்கி நின்று தனிமை வாழ்வை மேற்கொண்டனர். அவர்கள் இறைவனிடம் முழுநம்பிக்கையும் வைத்தனர்; அவர்கள் இறைவன்மீது அச்சவுணர்வு கொண்டு ஒழுகினர்; இதுவே அவர்களது இறைநாட்டத்தை மேலும் வலுவாக்கிற்று. இறைவன் தமக்கு

வேண்டிய அனைத்தையும் வழங்குவாரென்று கருதி அவர்கள் இறைவனிடம் முழுநம்பிக்கையும் வைத்தனர்; அவர்கள் வாழ்வு உளநிறைவு மிக்க வாழ்வாக அமைந்தது. மனஒருமைப்பாட்டிற்காகவும் தியானத்திற்காகவும் அவர்கள் பெரும்பாலான நேரங்களில் மௌனத்தை மேற்கொண்டனர். கடவுளின் தொண்டராகவே அவர்கள் தம்மைக் கருதிக் கொண்டனர். இறைவனின் அளப்பரிய பெருங்கருணைக்காக நன்றி செலுத்தினர். ஒழுக்க நெறிப்பட்ட வாழ்வே ஆன்மீக மலர்ச்சிக்கு அடிப்படை என்று நம்பினர். மனிதனின் பரிபூரணத்துவம் என்பது இறைவனை உள்ளன்போடு போற்றுதல், தியானத்தின் வழியே அவனை நினைதல், மறை ஞானத்தின் வழியே [மரீஃபத்] அவனை உணர்தல் ஆகியன வாயிலாகவே கிட்டவல்லது என்று அவர்கள் உறுதியாக நம்பினர். சூஃபிகள் அடைய நினைத்த குறிக்கோள் வாழ்வு இதுவே.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பாரசீகம் இஸ்லாமிய உலகின் ஒரு பகுதியாக ஆயிற்று. அராபிய—இஸ்லாமியப் பண்பாடு, ஆரிய—ஈரானியப் பண்பாடு ஆகிய இரு பண்பாடுகளும் இணைந்தன. இதன் விளைவாகப் பாரசீகத்தில் சூஃபிசம் விரிவடைந்தது; விரைவில் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. சூஃபிசம் காலூன்றி வளர்ந்து பேரளவில் மலர வளமான சூழ்நிலை ஏற்பட்டது. சூஃபிசம் விழுமிய அறநெறிகட்கும் மென்மையான நுண்பொருள் ஆய்வுக்கோட்பாட்டிற்கும் மனிதனை வழிநடத்திச் சென்றது. எல்லாவற்றிற்கும் மேலாக இலக்கியப் படைப்பிற்கும் அது தூண்டுகோலாயிற்று. ஈரானிய இலக்கியம் சூஃபி கொள்கையால் உரம் பெற்றது; முருகியலும் கற்பனை வளமும் உடைய அம்மொழி மேதைகள் பாரசீகக் கவிதைக்கு ஒரு பெருமிதம் மிக்க எழுச்சியையும் மலர்ச்சியையும் ஊட்டினர்.. பாரசீகச் செவ்வியல் கவிதைகள் உள்ளடக்கத்தாலும், உந்தெழுச்சியாலும் சூஃபி தத்துவத்திற்குக் கடன்பட்டுள்ளன.

இதன்விளைவாக கி.பி. ஒன்பது பத்தாம் நூற்றாண்டுகளில் அராபிய, பாரசீக மொழிகளில் சூஃபிசக் கொள்கைபற்றி எண்ணற்ற ஆய்வுரைகள் எழுதப்பட்டன. ஈரானிலும் ஆப்கானிஸ்தானிலும் பாரசீக இலக்கியங்களின் வழியே இது பரவத் தொடங்கிற்று. பதினோராம் நூற்றாண்டில் பல குழுக்கள் ஆங்காங்கே உருவாக்கப்பட்டன. இக்குழுக்கள் பாரசீகத்திலும் ஆப்கானிஸ்தானிலும் அனுபூதி இயக்கம் கால்கொள்ள உதவின.

அவர்களே அனுபூதியக் கோட்பாடுகளைக் காப்பதற்கும், துறவியர் மடங்களிலும், [காங்குபா], பள்ளிவாசல்களிலும் [ஜமாத்கானா] வாழ்வோர் கடைப்பிடித்தற்குரிய நெறிகள் இவையிவையென வகுப்பதற்கும் உதவினர். இவ்வகையில் சூஃபிகளுக்குரிய ஞானவழிப் பட்டயங்கள் [சில்சிலாக்கள்] முறைப்படுத்தப்பட்டன. அவற்றுள் குறிப்பிடத்தக்கன நான்கு. சிஸ்டியா, சுகரவர்த்தியா, நக்ஷ்பண்டியா, குவாத்திரியா என்பனவே அவை. சிஸ்டியா எனப்படும் சில்சிலா சிஸ்ட என்னும் பெயரினடியாக வழங்கப்பட்டது. அது ஆப்கானிஸ்தான் நாட்டிலுள்ள ஹாரத் என்னும் நகரினருகே இருந்த சிற்றூர் ஆகும். இக்கொள்கையைக் கண்டறிந்தவர் க்வாஜா அப்—இஷாக் என்பாராவார். இவர் பன்னிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஆவர். இக்கொள்கையின் முழுவரலாறும் நமக்குப் புலனாகவில்லை; அது இந்தியாவில் க்வாஜா முயி—உத்—தீன் ஹாசன் சிக்சி என்பாரால் அறிமுகப்படுத்தப்பட்டது. அவர் பிருதிவிராசன் காலத்தில் இந்தியாவுக்கு வந்தார். ஆஜ்மீர் நகரத்தைத் தாம் தங்குவதற்கு ஏற்ற இடமாகத் தேர்ந்தெடுத்தார். இருவேறு சிஸ்டியா மையங்கள் ஒன்று தில்லியிலும் மற்றொன்று நாகரிலும் தோற்றுவிக்கப்பட்டன தில்லியில் மையத்தைத் தோற்றுவித்தவர் பக்தியார் காகி; நாகரில் மையம் கண்டவர் ஹமீத்—உத்—தீன். பரீது—உத்—தீன் என்பார் பக்தியார் காகியின் சீடர்; அவர் அஜோதான் என்னும் இடத்தில் கடுந்துறவை மேற்கொண்டு வாழ்ந்தார்; சூஃபிச ஒழுக்கத்தில் நிலைநின்று புகழ் பெற்றவர் நிஜாம்—உத்—தீன் அவுலியா ஆவர். அவர் காலத்து இஸ்லாம் சமூகத்தில் அவர் பெரிதும் போற்றப்பட்டு மதிப்பிற்குரியவராக விளங்கினார். அவரது துறவுமனை தில்லியில் இருக்கிறது; இன்றும்கூட ஆயிரக்கணக்கானோர் அவரது கல்லறை மாடத்திற்குச் சென்று வழிபட்டு மனஅமைதி பெறுகிறார்கள்.

சுகரவர்த்தி நெறி என்பது ஷேக் அபு நஜீப் கபீர் சுகரவர்த்தி என்பாரால் தோற்றுவிக்கப்பட்டது. பாக்தாத்தில் வாழ்ந்த அவரது மருமான் ஷிகாப்—உத்—தீன் சுகரவர்த்தி என்பாரால் விரிவுபடுத்தப்பட்டது. பாரசீகத்திலும் ஈராக்கிலும் ஏற்பட்ட தொல்லைகளால் அவரைப் பின்பற்றியோர் பலர் இந்தியாவிற்குக் குடியேறினர். அவர்களுள் ஒருவராகிய பகா—உத்தீன் சக்காரியா பதின்மூன்றாம் நூற்றாண்டில் இந்நெறியை இந்தியாவில் உருவாக்கினார். முல்தான் நகரத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டார். அவர் இல்டுமிஷ் என்பாரோடு நல்லுறவை

வளர்த்துக்கொண்டார்; அதனால் அவரது உறைமனை செல்வச் செழுமை மிக்கதாக விளங்கிற்று.

நக்ஷ்பண்டியா நெறி மற்றொரு முன்னைய நெறியினின்றும் உருவாக்கப்பட்டது; இதனைத் தோற்றுவித்தவர் க்வாஜா அகமது. நடுஆசியாவில் அவர் பலராலும் அறியப்பெற்ற சமயத் தலைவராக விளங்கினார். துருக்கியர் பலரை இஸ்லாமியராக அவர் மாற்றினார் என்பர். துருக்கிஸ்தானத்தில் சூஃபித் தத்துவம் செல்வாக்குப் பெறுவதற்கும் பரவுவதற்கும் அவரே காரணமாக இருந்தார். பக்ஷ்பண்டியர்கள் பாபரின் ஆதரவைப் பெற்றிருந்தனர். அக்பர் காலத்தில் முகம்மது பாகிபில்லா என்பாரால் அது நிறுவப்பட்டது.

குவாதிரியா சில்சிலா என்பது பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஈராக் நாட்டில் ஷேக் அப்துல் காதிர் ஜிலானி என்பாரால் நிறுவப்பட்டது. அவர் ஒரு புகழ்பெற்ற அனுபூதியாளர்; ஞானி; உபதேசியார். இந்தியாவிலும் முகம்மது காத் ஏன்பவரால் இது அறிமுகப்படுத்தப்பட்டது; 1482–இல் உச் என்னும் இடத்தில் அவர் தம் தங்குமனையை அமைத்துக் கொண்டார். பதினேழாம் நூற்றாண்டில் அது பரவலான வரவேற்பைப் பெற்றது. முகம்மது மீர் அதன் தலைவராகத் திகழ்ந்தார். இந்த நவீன காலத்தில் இந்தியாவில் இந்த நெறியே பெரிதும் பரவும் நெறியாக இருந்துவருகிறது.

இந்தியாவிற்கு இஸ்லாம் மதம் வந்தமைக்கும் சூஃபிச நெறியின் வருகைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. கஜினி முகம்மது தாம் கி. பி. 998–இல் அரியணை ஏறிய பிறகு பன்முறை இந்தியாவின் மீது படையெடுத்தார். இந்தியாவின் வரலாற்றில் பல மாற்றங்கள் உருவாக இது காரணமாயிற்று. அவர் இந்தியாவிற்குள் நுழைந்து இங்கே இருந்தோரின் ஒற்றுமை இன்மையை நன்கு பயன்படுத்திக கொண்டார். இந்தியாவில் துருக்கியரின் ஆட்சி உருவாகக் கால்கோள் விழா நடத்தியவர் இவரே. இதுவே பின்னாளில் தில்லியில் சுல்தான்களின் ஆட்சி உருவாகக் காரணமாயிற்று. கோரிமுகம்மது கி. பி. 1186–ஆம் ஆண்டு லாகூரின் மீது படையெடுத்து வென்றார். வட இந்தியாவில் முஸ்லீம்களின் ஆதிக்கம் உருவாக இவரே காரணம் எனலாம்; பஞ்சாபில் காஸ்னாவிட் ஆட்சிக்கும் அவர் முடிவு கட்டினார். காஸ்னாவிட்டுகள் துருக்கியராக இருந்தபோதிலும் அவர்தம் தாய்மொழி பாரசீகமே. அவர்கள்

ஆட்சியில் லாகூர் இரண்டாவது தலைநகரம் ஆயிற்று. அவர்கள் அதனை "சிறிய கஜானா" என்று கூறினர். பாரசீக மொழி, படித்த இஸ்லாமியரின் மொழியாக ஆனதும் இந்த நிலையிலேயாம். அல்லாதீன் ஜகன்சோவ் என்பாரால் கஜினி முகம்மது தோற்கடிக்கப்பட்டு உயிரோடு எரிக்கப்பட்டார்; லாகூர் அறிவாண்மையரின் முக்கிய நகரமாயிற்று. குஸ்ருமாலிக்கின் ஆட்சிக்காலத்தில் அதன் முக்கியத்துவம் மேலும் மேலும் கூடிற்று. அதனால் அங்கே ஆப்கானிஸ்தான் அறிஞர்களும் கவிஞர்களும் மன்னரின் அவைக்களத்தோடு தொடர்புகொண்ட நிலையில் அடிக்கடி கூடினர். கி.பி. 1193—இல் மன்னர்களின் அவைக்களம் தில்லிக்கு மாற்றப்பட்டது. அதற்குப் பின் முகம்மதியர்களின் ஆட்சிக் கால இறுதிவரை. தில்லி நகரம் இந்தியத் துணைக்கண்டத்தில் பாரசீகக் கவிதை செழித்து வளரும் கழனியாக விளங்கி வந்தது.

வரலாற்றுப் போக்கில் ஏற்பட்ட எத்தனையோ நிகழ்ச்சிகள் இறுதியில் பல மாற்றங்களை விளைவித்தன. பதினோராம் நூற்றாண்டின் இறுதியில் நடு ஆசியாவிலுள்ள மங்கோலியரின் கை ஓங்கியபோது எண்ணற்ற அகதிகள் இநதியாவிற்கு வந்தனர். கி.பி. 1214—இல் செங்கிஸ்கான் பீக்கிங் நகரத்தைக கைப்பற்றினான். அதன்பின் மேற்கு முகமாகத் திரும்பி துருக்கிஸ்தானம், பாரசீகம், ஆர்மீனியா லாகூர் வரையிலுள்ள வட இநதியப் பகுதி அனைத்தையும் வென்றான். நடு ஆசியாவில் இஸ்லாமிய அரசு சீர்குலைநதது; அவர்களது உயிரும் உடைமையும் மங்கோலியரால் அழிக்கப்பட்டன. அதன் விளைவாக அகதிகள் தம் உடைமைகள் சொத்து அனைத்தையும் விட்டுவிட்டு இந்தியாவிற்குள் நுழைந்தனர். படையெடுத்தோரின் சினத்திற்குத் தப்பி இந்தியாவில் அடைக்கலம் புகுந்தனர். தில்லி மாநகரம் அறிஞர்களையும் மேதைகளையும் கவர்ந்திழுக்கும் காந்தக் கவர்ச்சியை உடையதாயிருநதது. தில்லிக்கு வந்து சேர்நத இறையியலாளர்கள் மிகப்பலர் எனலாம். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள்: ஷேக் அப்துல ஹாசன் அல்—ஹுஜவாரி, க்வாஜா—முன்—தீன சிஸ்டி, ஷேக ஜலால்—உத்—தீன்—தபரீஸ், சையத் ஜலால்—உத்—தீன் புகாரி, குத்புதீன் பக்தியார் காகி. இவர்களில் பெரும்பாலோர் அங்கேயே தங்கி தம் உறைமனைகளில் இருந்தவாறு மக்களுக்கு உபதேசம் புரிந்து வந்தனர். பெர்சியாவில் செங்கிஸ்கான் படையெடுபபு நிகழ்வதற்கு முன்பிருந்தே இந்தியாவிற்கு குடியேற்றம் நடநதது

என்னும் உண்மை இங்கு குறிப்பிடத்தக்கது. கி.பி. 1153–இல் குரிஸ்தானத்தில் முடிவு பெறாது நீண்ட போர்கள் அடிக்கடி நடைபெற்று வந்தன. கஸ் வழியினர் சாகர் சுல்தான்களுக்கு எதிராகப் போர் தொடுத்தனர். குரிஸ்தானத்தையும் அதையொட்டிய மாகாணங்களையும் அடியோடு அழித்தனர். அவர் கஜினியை வென்றார்; அதன் பின்னர் இந்தியாவில் அடைக்கலம் தேடவேண்டியிருந்தது. கஜினிக்கும் காபூலுக்கும் நடந்த இடையறாத போர்கள், நடு ஆசியாவில் திரும்பத் திரும்ப நிகழ்ந்த சண்டைகள், மக்களை இந்தியாவிற்குள் வரத் தூண்டின. இவர்களுக்கு முன்னரே துருக்கியர்கள் இங்கு வந்து ஆட்சியமைத்துக் கொண்டு ஆண்டுவந்தனர். காபூல் நகரிலிருந்து இந்தியாவிற்கு வந்த அகதிகளுள் காசி சாஹிப்பும் ஒருவர்; அவர் ஒரு மேதை; அவர் நிரம்பப் படித்து அறிஞராக மட்டுமன்றி சமயத் துறையிலும் ஈடுபாடு கொண்டவராக விளங்கினார். அவர் தம் மூன்று மக்களோடு கி.பி. 1173–இல் லாகூருக்கு வந்து சேர்ந்தார்; இவரே பரீது சாஹிப்பின் பாட்டனாராவார். காசி சாஹிப் இந்தியாவிற்கு வந்து 16 ஆண்டுகள் கழிந்த பின்னர் பரீது கி.பி. 1173–இல் பிறந்தார்.

# இயல் : இரண்டு

# வாழ்க்கையும் போதனையும்

காசி சாஹிப்பின் குடும்பம் பற்றி நாம் பெரிதாக எதையும் அறிய முடியவில்லை. சியார்–உல்–அவுலியாவின் வழியே நாம் அறியக்கூடிய செய்திகள் சிலவே. சாஹிப் காபூலை ஆண்ட அரச குடும்பத்தைச் சார்ந்தவர். காபூல் நகரம் பருக் ஷாவின் ஆட்சிக்காலத்தில் மிகவும் உச்சநிலையில் திகழ்ந்தது. ஆனால், காஸ்னாவித்துகள் ஆட்சிக்கு வந்தபோது பருக் ஷா தம் ஆட்சியை இழந்தார். அக்குடும்பம் மதிப்பிற்குரிய இடத்தை இழந்தது. ஆனால் வரலாற்றேடுகளில் பருக் ஷாவின் பெயர் ஏனோ குறிப்பிடப்படவில்லை; எனவே, இது அவரது சீடர்களால் புனைந்துரைக்கப்பட்ட கதை என்பதே தகும். மற்றொரு **வரலாற்றாசிரியர்** சாஹிபின் பரம்பரையை ஆராய்ந்து காலிப் அமீர்–உல்–முமின் உமர் பருக்கோடு தொடர்புபடுத்துகிறார். அது எவ்வாறாயினும், சாஹிபின் பரம்பரையில் வந்தவர் என்பதில் ஐயமில்லை. அவர் இஸ்லாமிய இலக்கியத்தில் ஆழங்காற்பட்ட புலமையுடையவர் என்பதும், ஆப்கானிஸ்தானத்தை விட்டு வருவதற்கு முன் அவர் அரசவையில் ஏதோ ஓர் உயர் பதவியில் இருந்திருக்க வேண்டும் என்பதும் உண்மையே.

சாஹிபு துறவியாய் வாழ்ந்தவர்; அரணமனை வாழ்வின் பகட்டோ, லாகூர் நகரத்து மகிழ்ச்சி மிக்க போகவாழ்வோ அவரைக் கவரவில்லை. அவர் இறையியலை ஆழ்நது கற்பதிலேயே ஆர்வம் கொண்டவராக விளங்கினார். லாகூருக்கு வந்த கொஞ்ச நாட்களுக்குள்ளேயே அவர் காதூருக்குச் சென்றார். காதூர் நகரத்து குவாசி, சாஹிபின் குடும்பம் பற்றி நன்கு அறிந்தவர். அரச குடும்பத்தைச் சேர்ந்த இவ்வறிஞரின் வருகையை அவர் சுல்தானுக்குத் தெரிவித்தார். சுல்தான் அவரை உயர்பதவியில் அமர்த்த முன்வந்தார். சாஹிபோ அதை வேண்டாமென்று மறுத்துவிட்டார். அரசவை வாழ்வையும் உயர்பதவிகளையும் அடையும் நாட்டம் தமக்கில்லை என்று கூறிவிட்டார். எனினும்

பஞ்சாப்பில் முல்தான் மாவட்டத்தின் குவாசி கொத்தவாலாக அவர் நியமிக்கப்பட்டார். அவ்வூரில்தான் சாஹிப் தம் எஞ்சிய வாழ்நாளைக் கழித்தார்.

சாஹிப்புக்கு மூன்று மகன்கள்; அவர்களுள் ஒருவர், செய்கு லாஜிப்-உத்-தீன் கோகேண்டியின் மகளை மணந்துகொண்டார். அவர்களுக்கு மூன்று பிள்ளைகள்; இசூத்-தீன், பரீத் மசீது, நஜிப்-உத்-தீன். பரீத் மசீது 1173-இல் பிறந்தார். ஒரு ஞானி என்னும் நிலையிலும், சிஸ்டி சில்சிலாவின் தலைவர் என்னும் முறையிலும் அவர் செய்கு பரீத்-உத்-தீன்-கஞ்சி ஷாகர் என அழைக்கப்பட்டார். பரீத்-உத்-தீன் என்னும் சிறப்பு அடைமொழி அவருக்கு இருந்த ஆன்மீக நாட்டத்தினை அங்கீகரிக்கும் முறையில் வழங்கப்பட்டதாகும். சூஃபி ஞானி பரீத்-உத்-தீன் அத்தாருக்குப் பின் இவரே சிறந்த ஞானியாக விளங்கியதால் இப்பட்டம் இவருக்கும் வழங்கப்பட்டது. அவர் கஞ்சி ஷாகர் எனவும் அழைக்கப்பட்டார். அப்பெயருக்கு 'சர்க்கரைக் கருவூலம்' என்று பொருள். அவரது வாழ்வில் பல அற்புதங்கள் நடந்தன; அவரேயும் சில அற்புதங்களை நிகழ்த்தினார். அதனால் இப்பெயரும் அவருக்கு இடப்பட்டது.

பரீதின் இளமைக் காலததில ஓர் அறபுதம நடநதது; அது சுவைபயக்கும் கதையாகப் பலராலும் பேசபபட்டது பரீதின தாய் பக்தி நிறைநதவர். பரீதிடம் நல்ல பழககங்களை உருவாகக விழைந்தவர். அவர் மகனிடம எந்தக் குழநதை கடவுளை ஒழுஙகாக வழிபடுகிறதோ அக குழந்தைக்குக கடவுள் சர்ககரையைத தருவார் என்று கூறினார். அநத நமபிககையைப பலபபடுத்தும வகையில, ஒவ்வொரு நாளும் பரீதின் தலையணைக்கடியில ஒரு சர்ககரைப பொட்டலத்தை வைப்பது வழக்கம. சிலகாலம கழிதது அவர் சர்ககரைப் பொட்டலத்தை வைப்பதை விடடுவிட்டார். அதில என்ன வியப்பெனில் தலையணைககடியில் ஒவ்வொரு நாளும் சர்ககரை இருந்ததாகத் தாயிடம பரீது சொன்ன செய்திதான. இந்தமாதிரி வேறு யாராவது வைத்திருபபார்களோ என்னும் ஐயம அந்த அம்மையாருக்கு வநதது. பலரையும விசாரித்தார் யாரும் அவ்வாறு செய்யவில்லை எனறு தெரியவநதது. இநத அறபுதம தெய்வ ஆற்றலால்தான நடநதிருககக முடியும் எனனும முடிவுககு வநதார். ஒருக்கால், அச்சமயத்திலதான அம்மையார் அவருககு கஞ்சி ஷாகர் என்னும பெயரை வழங்கியிருககவேண்டும எனலாம்.

பரீது இறைவனை நோக்கி இயற்றிய தவம் தொடர்பாக இரண்டாவது கதையும் ஒன்று உண்டு. அவர் பல நாட்கள் உண்ணா நோன்பு நோற்றார்; அவரது உடல் மிகவும் இளைத்து மெலிந்துபோய்விட்டது. ஒருநாள், அவர் தம் குருவைப் பார்க்கப்போனபோது வழியில் அவர் சேற்றில் வழுக்கி விழுந்து விட்டார். அப்போது சிறிய அளவு களிமண் அவர் வாயில் பட்டுவிட்டது. அது உடனடியாகச் சர்க்கரையாக மாறிவிட்டதாம். அவர் தம் குருவின் இல்லத்தை அடைந்தபோது அவர் பின்வருமாறு கூறினாராம்: "பாபா பரீத் உத்—தீன்—மசீது! உன் வாயில் பட்ட மண் சர்க்கரையாக மாறிவிட்டது; இறைவன் உன்னையே முழுதும் சர்க்கரைக் கருவூலமாக மாற்றி என்றென்றும் இனிமையாகவே வைத்திருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை''.

பரீது நிகழ்த்தியதாகச் சொல்லப்படும் ஓர் அற்புதமும் உண்டு. ஒருநாள் ஒட்டகங்களின்மீது சர்க்கரை ஏற்றிக்கொண்டு செல்லும் வணிகர்கள் சிலரை அவர் சந்தித்தார். அவர்கள் என்ன ஏற்றிக்கொண்டு செல்கிறார்கள் என்று விசாரித்தார். ஷேக் தம்மிடமிருந்து சிறிதளவு சர்க்கரையைக் கேட்டாலும் கேட்கக் கூடும் என்று அஞ்சி, அவர்கள் உப்பினை ஏற்றிச் செல்வதாகக் கூறினர். அவ்வளவுதான், அத்தனை சர்க்கரையும் உப்பாக மாறிவிட்டதாம். அவ்வணிகர்கள் போய்ச் சேர வேண்டிய இடத்திற்குப் போன பின்னர்தான் இவ் உண்மையைக் கண்டுபிடித்தனர். அவர்கள் பரீதிடம் திரும்பி வந்தனர். தாங்கள் பொய் கூறியமைக்காக மன்னிப்பு வேண்டினர். பரீது அவர்களுக்காக இரக்கப்பட்டார். அவர்களுக்கு நல்லறிவு புகட்டினார்; உப்பினைத் திரும்பவும் சர்க்கரையாக மாற்றினார். இச்செய்தி நாலாபக்கமும் பரவிற்று; மக்கள் அவரை கஞ்சி ஷாகர் என்று போற்றினர்.

இன்னொரு கதையும் உண்டு. ஒருமுறை பரீதுக்குப் பெரும்பசி ஏற்பட்டபோது அவர் தம் வாயில் சில கூழாங்கற்களைப் போட்டுப் பசியைத் தணித்துக் கொண்டார். உடனடியாகக் கூழாங்கற்கள் சர்க்கரையாக மாறின. இதுபோன்ற பல அற்புதங்களை பரீது நிகழ்த்தியதாகச் சொல்லப்படுகிறது. அவருடைய வாக்கின் இனிமை, அவர் செயலில் புலப்பட்ட கழிவிரக்கம், தாம் சந்தித்த ஒவ்வொருவரிடமும் அவர் காட்டிய அன்பு ஆகிய அனைத்துமே அவருக்கு 'கஞ்சி ஷாகர்' என்னும் பெயரை ஈட்டித் தந்திருக்க வேண்டும். பாபா பரீது என்னும் பெயரினாலேயே அவர் பயபக்தியோடு அழைக்கப்பட்டார்; எல்லாராலும் நன்கு அறியப்பட்ட

பெயர் இதுவே.

கொத்தவாலில் பரீது தம் இளமைக், கல்வியைப் பெற்றார்; அங்கு அவர் பாரசீக அராபிய மொழிகளையும் இஸ்லாமிய சமயக்கல்வியின் சில அடிப்படைகளையும் கற்றுக்கொண்டார். பதினெட்டாம் வயதில் அவர் முல்தான் நகருக்குச் சென்று, மௌலானா மின்ஹஜ் உத்—தீன் திரிமிதி மதூதியில் நடந்த பள்ளியில் சேர்ந்தார். அங்கு குர்ஆனையும், இஸ்லாமியச் சட்டவியலையும் மற்றும் அவை தொடர்பான பாடங்களையும் பயின்றார். குர்ஆன் முழுவதையும் அவர் அப்படியே மனப்பாடம் செய்தார் என்றும் ஒவ்வொரு நாளும் ஒருமுறை அதனை ஓதிவந்தார் என்றும் சொல்லப்படுகிறது. இறையியல் கற்பதில் அவர் காட்டிய தளரா ஊக்கமும் ஈடுபாடும் அவரது ஆசிரியர்களால் பெரிதும் பாராட்டப்பட்டன. அவர் வழிபாட்டில் காட்டிய ஈடுபாட்டினால் அவரைச் சிலர் "குவாசி பச்சா திவானா" என்று செல்லப் பெயரிட்டு அழைத்தனர். "காசியின் செல்வமகன்" என்பது அதன் பொருள். அதற்கு முன்னரே அவர் வளர்ந்து வரும் ஓர் அனுபூதிமானாக அந்நகரத்து மக்களால் அறியப்பட்டிருந்தார். செய்கு பஹாஉத்—தீன் சக்காரியாவின் நெருங்கிய கூட்டாளியான செய்கு ஜலால் உத்—தீன் தப்ரிஸ் அவர்களும், க்வாஜா குத்புதீன் பக்தியார் காகி அவர்களும் அவரை நேரில் காணும் அளவுக்கு அவர் புகழ் பரவிற்று. செய்கு ஜலால், பரீதுக்கு ஒரு மாதுளம் பழத்தைத் தம் அன்பின் அடையாளமாக அளிக்க நினைத்தார்; எனினும் பரீது உபவாசம் இருந்தமையால் அதை உண்ணமுடியவில்லை. பின்னர் பரீது தம் முன் ஒரு மாதுளங்கனியின் ஒரே ஒரு விதை மட்டும் இருப்பதைக் கண்டார். அதை வாயிலிட்டபோது ஏதோ பிரகாசமான ஒன்று தன்னுள் திடுமெனத் தோன்றியது போல் அவர் உணர்ந்தார். பின்னர் அந்நிகழ்ச்சியைத் தம் எதிர்கால குருவான குவாஜா குத்புதீன் பக்தியார் காகி அவர்களிடம் சொன்னபோது அவர் கூறினார்: "அந்த ஒரு விதையில்தான் எல்லா ஆன்மீக அருளும் நிறைந்திருந்தது. உனக்கென்றே இருந்தது உன்னை அடைந்தது; அதைத் தவிர அப்பழத்தின் மற்ற பகுதிகளில் ஏதும் இல்லை".

அவர் முல்தான் நகரத்து மதூதியில் படித்துக் கொண்டிருந்தபோதுதான் தம் எதிர்கால குருவான குவாஜா குத்புதீன் பக்தியார் காகி அவர்களைச் சந்தித்தார். பக்தியார் காகி அவர்களைச் சந்தித்தபோது தன்னுள் ஏதோ ஒரு மாற்றம் நிகழ்வதாக உணர்ந்தார். ஒத்த கருத்துடைய இரு உள்ளங்களின்

சந்திப்பு அது. ஆன்மீகப் பாதையில் தம்மை வழிநடத்த வல்ல ஒரு வழிகாட்டியாகவே அவரைக் கருதினார். அவர் பாதங்களில் சிரம் தாழ்த்தி வணங்கி ஏற்றருளுமாறு வேண்டினார். அவர் பக்தியார் காகியுடன் தில்லிக்கு உடன் வரும் தம் ஆசையை வெளிப்படுத்தினார்; தம்மை அவரது தங்குமனையில் ஏற்றருளுமாறும் வேண்டிக்கொண்டார். ஆன்மீக ஆராய்ச்சியில் பரீதுக்கு இருந்த பேரார்வத்தைக் கண்டு அவரது எதிர்கால குரு மனம்நெகிழ்ந்து போனார். அவரைத் தம் சீடராய் ஏற்றுக்கொள்வதாக உறுதியளித்தார். எனினும், இப்போது படிப்பில் கவனம் செலுத்துமாறு அறிவுரை புகன்றார். படிப்பு முற்றுப்பெற்ற பின் தில்லிக்கு வருமாறும், ஏனெனில் சூஃபிசத்தின் உயர்நிலைப் பயிற்சிக்கு அத்தருணமே ஏற்றதென்றும் கூறினார். முல்தான் நகரில் படிப்பு முடிந்தபின், பரீது காந்தார் நகருக்கு மேற்படிப்புக்காகச் சென்றார். அங்கே ஐந்தாண்டுக் காலம் தங்கியிருந்தார். அதன்பின், அவர் ஈரான், ஈராக், குரசான் முதலிய நாடுகளில் பரவலாகப் பயணம் செய்தார்; மெக்காவுக்கும் சென்று வந்தார். ஓர் அனுபூதிமானின் வாழ்க்கையில் பயணம் என்பது முக்கியத்துவம் வாய்ந்த பகுதியாகும். ஞானிகள், சாதுக்கள், பக்கீர்கள், அனுபூதிமான்கள் பெரும்பாலும் பயணம் மேற்கொள்வோராகவும், அங்குமிங்கும் அலைந்துகொண்டே இருப்போராகவும் இருந்தனர். சமய முக்கியத்துவம் வாய்ந்த இடங்களுக்கு அவர்கள் சென்றனர். குறிப்பாகப் பெருவாரியான மக்கள் ஒன்றுகூடும் திருவிழா நாட்களில் சென்று வழிபட்டனர். மக்களின் உளவியலை நன்கு அறிந்துகொள்ள அப்பயணங்கள் பயன்பட்டன. பலதரப்பட்ட இன, குழு மக்களோடும் நெருங்கிய தொடர்புகொள்ள அவை பயன்பட்டன. இறையியல் வல்லுநர்களையும், ஆன்மீகத் தலைவர்களையும் சந்தித்து சமயத் தொடர்பான கருத்துகளைப் பரிமாறிக் கொள்ள அவை பயன்பட்டன. மேலே காட்டிய காரணங்களைத் தவிர வேறு முக்கியமானவும் இப்பயணங்களில் இருந்தன. அலைதல் என்பது பற்றின்மையைத் தோற்றுவிக்கிறது; சாதுக்களும் அனுபூதிமான் களும் இந்த உலகிற்கு உரியவர்களே என்றாலும் அவர்களை ஒரே இடத்தில் கட்டிப் பிணைத்துவைப்பது பொருந்தாது; இப் பரந்துபட்ட உலகம் முழுதுமே அவர்தம் செயற்களம் எனலாம். அவர் விரும்பிய இடத்திற்குச் சென்று ஆன்ம அமைதி பெற அவர்க்கு உரிமை உண்டு.

விளக்க முடியாததும், இன்னதெனக் கூறமுடியாததுமான ஒன்றைத் தேடி அலையும் அவரை ஒத்த ஒத்திசைவுடைய மனங்களைத் தேடி அவர்கள் தொடர்பு கொள்கிறார்கள். இந்த வகையில்தான் பரீதும் பல தொலைதூர இடங்களில் அலைந்தார்; சமயத்தலைவர்களையும் அருளியலாளர்களையும் சந்தித்தார். படிப்பு முடிந்து, நீண்ட பயணத்தை மேற்கொண்டு அவர் இந்தியாவிற்குத் திரும்பினார். அப்போது சுல்தானின் அவைக்களத்தில் பெரும் பதவிகளை வகிப்பதற்கு அவர் தகுதியுடையவராக இருந்தார் என்பதைக் கூறவும் வேண்டுமோ? ஆனால் பரீதின் எண்ணங்கள் இவற்றை நாடவில்லை; அவர்க்கு பதவியோ, உலகச் செல்வங்களோ தேவைப்படவில்லை. அவருள் ஆன்மீக வேட்கையே நிரம்பி வழிந்தது. தில்லிக்கு வந்தால் அவர் நேராக குவாஜா குத்புதீன் பக்தியார் காகியின் உறைமனைக்குச் சென்றார். ஒரு சீடருக்குரிய எளிய வாழ்வை மேற்கொண்டார்.

ஒரு சூஃபி என்னும் நிலையில் பரீதின் ஆன்மீகப் பயிற்சியைப்பற்றி பேசத் தொடங்கும் முன் அவரது வாழ்வை உருவாக்கிய முத்திறக் கூறுகளை நாம் குறிப்பிட்டாதல் வேண்டும். முதற்கண் குறிப்பிடத்தக்கவர் அவரது அன்னையார் குவார்சம் பீபி ஆவர். முன்னர் குறிப்பிட்டதுபோல், அவர் சமய ஈடுபாடு நிறைந்தவர். ஒழுங்கான கால நெறி வழுவாத வழிபாட்டின் முதன்மையை அவர் பரீதின் நெஞ்சில் படியுமாறு செய்தார். அந்த அம்மையார் தம்மோடு தொடர்புகொண்டோரிடத்து செலுத்திய செல்வாக்குப் பற்றிப் பல கதைகள் கூறப்படுகின்றன. ஒரே கதை மட்டும் போதும். ஒருநாள் இரவு சில திருடர்கள் அவர் வீட்டில் புகுந்தனர். அப்போது அவர் ஆண்டவரின் திருப்பெயரை உச்சரித்தவாறே ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருந்தார். திருடர்கள் அவரைப் பிடித்தபோது, அந்த அம்மையாரிடமிருந்து ஏதோ ஒரு நெருப்புச் சுடர் அவர்களைப் பற்றிக்கொள்வதுபோல் உணர்ந்தனர். நெடுஞ்சாண்கிடையாய்க் காலில் விழுந்தனர்; தம் செயலுக்கு மன்னிப்புக் கேட்டனர். இனி, நேரிய வாழ்வு நடத்துவதாக வாக்குறுதி தந்தனர். அத்திருடர்களில் ஒருவர் பின் நாட்களில் ஒரு ஞானியாக மாறினார்; அவர் மக்களால் பல்லாண்டுக் காலம் நினைவிலிறுத்திப் போற்றப்பட்டார். ஆன்மீக அமைதி விரும்பும்

பலர் அவரது கல்லறையை நாடிச்சென்று வழிபட்டனர். குவார்சம் பீபி பரீதின் மனத்தில் ஆழ்ந்த சமய உணர்ச்சியையும், வழிபாட்டுணர்வையும் ஊட்டி வளர்த்தார். ஞான வாழ்வு வாழவேண்டும் என்னும் எண்ணம் பரீதின் மனத்தில் ஆழமாகப் பதிந்ததற்கு அவரது அன்னையாரே காரணம். ஞானவாழ்வின் வேட்கையே பரீதின் வாழ்வில் இறுதிக் குறிக்கோளாயிற்று; அக்குறிக்கோளை அடையும் முயற்சியே வாழ்வின் இலக்காக ஆயிற்று.

இரண்டாவதாகக் குறிப்பிடத்தக்கது அவரது தந்தையார் ஜமாலுத்தீன் ஆவர். அவர் குர்ஆனில் ஆழ்ந்த புலமையுடையவர் குவாசி கொத்தவாலாக இருந்தவர். படிக்கும் ஈடுபாட்டையும், இஸ்லாமியச் சமயக் கல்வியில் பேரார்வத்தையும் அவர் பரீதிடம் ஊட்டி வளர்த்தார். பரீதின் வீடு பக்தி, புலமை இவற்றின் உறைவிடமாய் விளங்கிற்று. வாழ்வு எளிமையுடையதாக விளங்கினும், சமயப் பின்னணி, இறையியல் ஆய்வு இவற்றால் செழுமை உடையதாகப் பொலிந்தது. சூஃபிகள், இறையியல் முனைவர்கள், இஸ்லாமியச் சட்டவியலில் ஆர்வமுடையோர் ஆகியோரே அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி வந்தனர். பிறவியிலேயே அமைந்துகிடந்த ஆன்மீக நாட்டம் இச்சூழலால் மேலும் வலிவு பெற்றதில் வியப்பென்ன இருக்கமுடியும்? இறையியல் ஆய்வுக்கே அவர் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்.

மூன்றாவதாகக் குறிக்கத்தக்கவர் அவரது குருவாக விளங்கிய குவாஜா குத்புதீன் பக்தியார் காகி. தம் பயணம் முடிந்ததும் பரீது இவரது தங்குமனைக்குத்தான் வந்து சேர்ந்தார். பக்தியார் காகி அவர் காலத்தில் புகழ்பெற்றுவிளங்கிய அனுபூதிமானாவார். அவர் தில்லியில் தம் தங்குமனையை அமைத்துக்கொண்டு வாழ்ந்தார். அவர் ஆப்கானிஸ்தான் நாட்டைச் சேர்ந்த ஆஷ் என்னும் ஊரினர்; அவ்வூர் மஞ்சூர் அல் ஹலாஜ் அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட சூஃபி மையமாகத் திகழ்ந்தது. அவர் பாக்தாத்திலும் கல்வி பயின்றார். பாக்தாத் இஸ்லாமிய ஆய்வு மையமாகவும், புகழ்பெற்ற அனுபூதிமான்களின் வாழிடமாகவும் திகழ்ந்தது. இங்குதான் அவர் செய்கு முன் உத்தீன் சிஸ்டி அவர்களைச் சந்தித்தார்; அவரால் ஈர்க்கப்பெற்று அவருடைய சீடரானார். சிஸ்டி இந்தியாவுக்குச் சென்ற பின்னர் பக்தியார் காகியும் அவரைப் பின் தொடர்ந்தார். அவர் தில்லியை அடைந்தபோது அப்போதைய சுல்தானாகிய

இல்துமிஷ் என்பார் அவரது சிறப்பினை அங்கீகரிக்கும் வகையில் அவருக்கு செய்கு-உல்-இஸ்லாம் என்னும் பதவியைத் தர முன்வந்தார். ஆனால் அவர் அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். தாமே ஒரு துறவுமனையை அமைத்து, சூஃபிசத் தத்துவத்தைப் பரப்புவதற்கு ஆர்வம் கொண்டார். இங்குதான் பரீது அவர்தம் சீடர்களோடு வந்து சேர்ந்தார்.

துறவகம், அல்லது சமயநோன்பினர் மனை என்பது ஏறத்தாழ ஒரு விடுதி போன்றது; அங்கு வாழ்வோர் கடுமையான வரன்முறைகளைக் கடைப்பிடித்து வாழ்வர். அவர்தம் வாழ்வு மூன்றுவகைப்படும். முதல்வகை வாழ்வு எப்படிப்பட்டது? துறவகத்தில் அனுபூதிமான்களுக்கும் பார்வையாளருக்கும் தனித்தனியான அறைகள் இருக்கும். இரண்டாவதாக ஜமாத் கானாஸ் என்னுமிடத்தில் சீடர்கள் அனைவரும் சேர்ந்து உறைவர். மூன்றாவதாக சாவியாஸ் என்னும் பெயரிய சிறு வீடுகளில் அனுபூதிமான்கள் உலகை மறந்து தனித்து வாழ்வர். துறவகத்தில் உறைவோர் மூன்று வகையினராகப் பிரிக்கப்பட்டனர்; உள்ளொளி விளக்கம் பெற்றோர், உடனுறைவோர், பணியாளர்கள் என்போரே அப்பிரிவினர். துறவகத்திற்கு வரும் விருந்தினர் மூன்று நாட்கள் மட்டுமே அங்குத் தங்குவதற்கு அனுமதிக்கப்பட்டனர். அங்கு நீண்டகாலம் தங்க விரும்பினால், அவர்கள் பணியாளர்களாகத் தொண்டாற்ற வேண்டும். துறவகங்களில் வாழக் கடுமையான விதிகள் விதிக்கப்பட்டன. காலைமுதல் மாலைவரை ஒவ்வொரு செயலும் இப்படி இப்படித்தான் அமையவேண்டும் என்னும் வரன்முறை இருந்தது. உடையுடுத்தும் முறை, உணவுண்ணும் நேரம், விருந்தினரை வரவேற்கும் பாங்கு, ஷேக்குகளையும் முதியோரையும் விளிக்கும் பாங்கு, வழிபாடியற்றும் நேரம், இயற்றப்படும் நோன்புகளின் நெறிமுறை ஆகிய அனைத்தையும் பற்றிய விதிகள் அங்கு நடைமுறையில் இருந்தன. இவற்றிலிருந்து வழுவி நடப்போர்க்குத் தண்டனையும் குறிக்கப்பட்டது. மேலும் சமுதாய வாழ்வில் மூன்று வேறுவகையான கூறுகளும் இருந்தன. ஆன்மீக உந்துதலுக்காகப் பாட்டிசைத்தல் ஒன்று; மறைந்த ஆன்மீக ஞானியின் நினைவு நாட்களைக் கொண்டாடுவது மற்றொன்று. உணவைப் பங்கிட்டுக் கொள்ள விழைவோர்க்கு உதவும் வகையில் நடத்தப்படும் கூட்டுணவு ஏற்பாடு மற்றொன்று.

துறவக வாழ்க்கை என்பது 'செய்கு' [ஷேக்] எனப்படும் அமைப்பாளரை மையமாகக் கொண்டே இயங்கிவந்தது. அவரே அவ்விடத்தின் சமுதாய ஆன்மீக வாழ்விற்குரிய நெறிகளை

வகுத்தளிப்பார். இஸ்லாமியர்கள் மட்டுமன்றி இந்துக்களும் இத்துறவகத்தை நாடி வந்தனர்; தம் வாழ்வின் சிக்கல்களுக்கு ஆலோசனை பெற்றனர்; வாழ்த்துக்களைப் பெற்றனர். மற்ற சமயங்களைச் சேர்ந்த யோகிகளும் ஞானிகளும் இங்குவந்து இறையியல் சிக்கல்களை விவாதித்தனர். சூஃபிகள் இஸ்லாமிய சமயத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டனர். இறைத்தூதராம் பெருமானாரின் நற்செய்திகளைப் பரப்பினர்.

தரிசு நிலங்களைப் பயிரிடுவதன் மூலமோ அல்லது கேட்காமலே கிட்டும் நன்கொடைகள் மூலமோதான் சூஃபிகள் தம் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை ஈட்டிக் கொண்டனர். சீடர்கள் சில வேளைகளில் பிறரிடம் சிலவற்றை இரந்து பெறவும் அனுமதிக்கப்பட்டனர். பெறப்படும் அத்தனை கொடைப்பொருள்களும் துறவகத்தில் உறைவோரால் பகிர்ந்துகொள்ளப்பட்டன. இளவரசர்கள், பெரும் வணிகர்கள், முதலியோரிடமிருந்து பெறப்பட்ட பேரளவு நன்கொடைப் பொருள்கள் சேர்த்துவைக்கப்படவில்லை; உடனுக்குடன் ஏழைகளுக்கிடையே பகிர்ந்துகொள்ளப்பட்டன. நிலவுடைமைச் சொத்துக்களோ [அசையாத உடைமைப் பொருள்கள்], குறிப்பிட்ட கால இடையீட்டில் முறையாகத் தரப்படும் பணமோ ஏற்றுக்கொள்ளப்படவில்லை. சுகரவர்த்தியைத் தவிர வேறு சில்சிலாக்கள் அரசின் ஆதரவை மறுத்துவிட்டன. ஆன்மீக முன்னேற்றத்திற்காகக் கடும் நோன்புகளை வழுவாது பின்பற்றுவதும், வறுமையை ஏற்றுக்கொள்வதுமே துறவகத்தின் பொதுவான வாழ்க்கைப் போக்காக இருந்தது.

சூஃபிகள் ஒட்டுப்போட்டுத் தைக்கப்பட்ட மேலங்கிகளையே அணிந்தார்கள். தம் தலையை அடியோடு மழித்துக்கொண்டார்கள். செய்குகளின் [ஷேக்குகள்] மேலங்கி, வழிபாட்டில் பயன்படும் கம்பள விரிப்பு, பாத அணிகள், நடப்பதற்குப் பயன்படும் ஊன்றுகோல், செபமாலை முதலியவை புனிதமான சிறப்புரிமைச் சின்னங்களாக மதிக்கப்பட்டன. செய்குகள் இறக்கும் நிலையில், அவை அவருக்கு அடுத்த நிலையில் வரும் கலிபாவுக்கு வழங்கப்பட்டன. செய்குகள் தமக்குப்பின் வருவோர்க்குத் தாம் விட்டுச் செல்லும் கொள்கைகளை பரப்பவும் அவை நிலைபெறவுமான பணிகளைச் செய்கிற உரிமைகளைப் பட்டயமாக்கி வழங்குவர். இதன் வாயிலாக சில்சிலாக்கள்

தொடர்ந்து வாழ்வு பெறும். புதியவர்கள் வேறு சில இடங்களில் பணிமையங்களைத் திறக்கவும், தம் எடுத்துக்காட்டான தொண்டாலும் தன்னல மறுப்பாலும் சூஃபிசக் கொள்கைகளைப் பொதுமக்களிடையே பரப்பவும் கேட்டுக்கொள்ளப்படுவர்.

மேலே கூறப்பட்ட விதிமுறைகள் எல்லாம் துறவக வாழ்க்கையின் புறவரையறைகள் போன்றவை. செய்குகளின் ஆளுமையும் எடுத்துக்காட்டான தூய வாழ்வுமே துறவக வாழ்விற்கு உயிர்ப்பூட்டும் இரத்தமும் சதையுமாக அமைந்தன. அவரே பக்தி உணர்வை எழுப்பும் வேர்முதலாக விளங்கினார். அவரால் துறவகம் முழுதும் ஆன்மீக வேட்கை நிரம்பி வழிந்தது. இம்மை இன்பங்களைத் தாமே விரும்பித் துறக்கும் உணர்வு அங்கு உறைவோர்க்குத் தாமாகவே உண்டாகும். இறைவனோடு ஒன்றும் நிலை [வாசில்] என்பது அங்கு உறைவோரின் மனத்தில் ஒவ்வொரு கணமும் நினைவில் தங்கும். வாசிலீன்கள் மேற்கொள்ளும் முயற்சிகள் அனைத்தும் அதனை நோக்கியதாகவே இருககும். துறவக உறைநர் ஒவ்வொருவரின் அகமனத் துடிப்பும் இறையுணர்வோடு ஒன்றி நிற்கும்.

பரீது துறவகத்தில் சேர்ந்தபின் பக்தியார் காகியின் வழிகாட்டலில் ஒரு அனுபூதிமானுக்குரிய கடுமையான பயிற்சிகளில் ஈடுபட்டார். அவரது இளமைக்கால வாழ்க்கை ஆன்மீக குருவால் விதிக்கப்படும் கடுமையான பயிற்சிகளை ஏற்கும் வகையில் அவரைப் பக்குவப்படுத்தியிருந்தது. அவர் இரவு நேரங்களில் நீண்டநேரம் தனிமையில் இருந்து வழிபாட்டினை மேற்கொண்டார். ஆன்மீக இலக்கை அடைவதற்கு இத்தகு நோன்புகள் அவரால் இயற்றப்பட்டன. கடும்நோன்புகளையும், உபவாசத்தையும், மெய்வருத்தத்தையும் அவர் விரும்பி மேற்கொண்டார்.

சூஃபிகள் இந்திய நாட்டு யோகிகளிடமிருந்து ஒரு சிந்தனையைக் கடன் வாங்கிக் கொண்டிருந்தனர்; ஆன்மீக மலர்ச்சிக்காகத் தன்னைத்தானே ஒறுத்துக் கொள்வதன் மூலம் தன்னடக்கத்தை உருவாக்கிக் கொள்வதே அது. இவைபோன்ற பயிற்சிகள் அனுபூதி உலகில் தீக்கை [தீட்சை] பெற்றோர்க்கும் இன்றியமையாதன என்று கருதப்பட்டன. மூச்சுப் பயிற்சி, பொறிபுலன்களை அடக்குதல், நனவுலகினின்று தன்னை

விடுவித்துக்கொள்ளுதல், மனஒருமைப்பாட்டை உருவாக்குதல் முதலான அனைத்திற்கும் முறையான பயிற்சிகள் இருந்தன. யோகிகள் தியானத்தில் தொடங்கி சமாதி நிலையில் பயிற்சியை முடித்தனர். தியானம் என்பது ஏதேனும் ஒன்றை மையமாகக்கொண்டு தம் கவனம் அனைத்தையும் அதன்மீது குவித்தலாகும். ஆழ்ந்த மனஒருமைப்பாடு என்பது புறஎண்ணங்கள் அடியோடு ஒழிந்த வெறுமை நிலையாகும். ஆனால், தியானம் என்பது அதனினும் உயர்ந்த நிலையாகும். அங்கே இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்றுகாலங்களும் மறையும்; கால இயக்கம் ஓயும்; எல்லையற்ற ஒன்றும் எல்லைக்கு உட்பட்ட ஒன்றும் ஒன்றுபடும். இருப்பு நிலையும் வளர்நிலையும் ஒன்றிலொன்று இணையும். தனித்த நிலையில் இருக்கும் ஒன்று அந்நிலை மாறி உலகளாவிய ஆன்மாவின் ஒரு பகுதியாக மாறும். இதன் விளைவாக நிலைபேறான அமைதி பொலியும். மனத்தில் ஒரு புத்தொளியின் வெளிச்சம் பரவும்; அச்சம், மனப்பதற்றம், உடல் உபாதைகள் அனைத்தும் மறையும். இதுவே எல்லா அனுபூதிமான்களும் தேடும் ஆன்மீக அனுபவமாகும். நோன்பு தியானம் ஆகியவற்றின் வாயிலாக பரீது காணவிழைந்த அனுபவமும் இதுவேயாம்.

பரீது தம் அறைக்குள்ளேயே தனித்து இருந்தார். ஒவ்வொரு நாளும் அவரது தியானநேரம் மிகுதியாகிக்கொண்டே வந்தது; அவரது குரு அறிவுறுத்திய நெறிப்படியே ஒரு குறிப்பிட்ட நிலையில் அமர்ந்து அல்லாவின் திருநாமத்தை அவர் திரும்பத் திரும்ப ஓதினார். சில்லா [தனித்திருந்து இறைத் தியானம் செய்தல்] என்று கூறப்படும் நெறியில் நின்றார். அதாவது இறைவனின் திருப்பெயரை நினைந்தவாறே நாற்பது நாட்கள் அவர் தனித்திருந்தார். சில்லா—இ—மாகுதூக் என்னும் நெறியையும் அவர் மேற்கொண்டார் என்று சொல்லப்படுகிறது; சில்லா—இ—மாகுதூக் என்பது தலைகீழாகத் தொங்கியபடியே தவம் செய்தலாகும். நாற்பது இரவுகள் இதுபோல் தவமியற்றவேண்டும். தவத்தில் ஈடுபடுவோர் ஒவ்வொரு இரவும் தலைகீழாகத் தொங்குவர். இது உண்மையா அல்லது பரீதின் சீடர்கள் பரவவிட்ட புனைகதையா என்று சொல்வது கடினம். இந்த நிமாசு—இ—மகுதூக் தொடர்ந்து ஆறு மாதங்கள் நிகழ்ந்தது என்கின்றனர் சிலர்; இப்படியும் சில கதைகள்

உண்டு; வேறு சிலர் பத்து ஆண்டுகள் இவ்வாறு தவமியற்றியதாகவும் கூறுவர். இந்தக் கால அளவு எதுவாயிருப்பினும் சரியே. அவர் 'உச்' என்னும் ஊரில் மசிது—இ—ஹாஜியின் மதுதிக்கு அருகிலிருந்த கிணற்றில் அவர் சில்லா—இ—மகுதூக் என்னும் தவத்தை இயற்றினார் என்று அவரது அன்பர்கள் கூறுவர். பரீது தம் ஆன்மீக முயற்சியில் காட்டிய மனவுறுதி அவரது நோன்புப் பயிற்சியில் அவர் வெளிப்படுத்திய விடாப்பிடி, அனைத்தும் அவர் சில்லாவினை நிகழ்த்தினார் என்றே நம்மை நம்பச் செய்கிறது. அவரது செய்யுட்கள் சில குரு கிரந்த சாகிபில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள்ளும் இதற்கான அகச்சான்றுகள் காணப்படுகின்றன. அதிலுள்ள இரு திருவசனங்கள் [90, 91] இங்கே எண்ணிப்பார்க்கத் தக்கன.

> பரீது, என் உலர்ந்த உடல் எலும்புக் கூடாக ஆகிவிட்டது.
> என் கையின் குழிந்த பகுதிகளை அண்டங்காக்கைகள்
> அலகால் கொத்துகின்றன.
> இந்த வினாடிவரை கடவுள் எனக்கு உதவ வரவில்லை
> அவரது பணியாளனுக்கு நேர்ந்த அவலத்தைப்
> பார்த்தாயா?
> ஓ! அண்டங்காக்கைகளே, நீங்கள் என் எலும்புக்கூட்டைத்
> தேடுகிறீர்கள்!
> என் சதைகள் அனைத்தையும் உண்டு விட்டீர்கள்!
> ஆனால் என் விழிகள் இரண்டையும் விட்டுவிடுங்கள்,
> ஏனெனில் என் நேயத்திற்குரிய இறைவனை
> அவற்றினாலன்றோ பார்க்க எண்ணுகிறேன்.

பரீது கிணற்றில் தலைகீழாகத் தொங்கவிடப்படுகிறார்; பறவைகள் அவரது உடம்பில் கூடுகள் கட்டுகின்றன. எனினும் கடவுளைத் தேடும் அவரது நாட்டம் முடிவுபெறவில்லை. அடுத்து வரும் திருவசனத்தில் அவர் பறவைகளை நோக்கித் தமக்கு விழிகளைத் தருமாறு பரிவோடு கேட்கிறார். விழிகள் இருந்தாலல்லவா இறைவனைக் காணமுடியும்? பரீது மேற்கொண்ட நோன்பின் கடுமை/கொடுமை எத்துணை பெரிது! அவரது வாழ்வில் எந்தக் குறிப்பிட்டகாலத்தில் இது நிகழ்ந்தது என்பதெல்லாம் அவ்வளவு முக்கியமுடையதன்று; தம் குறிக்கோளில் வெற்றிபெற அவர் கடும் நோன்புகளை ஏற்கவேண்டியிருந்தது என்னும் ஒன்றே நாம் அறியவேண்டுவதாகும்.

தன்னடக்கத்தையும் ஆன்மீகக் கட்டுப்பாடுகளையும் பெறுவதற்குக் கடும் நோன்பு ஒருவகையில் துணைபுரிந்தாலும் அதனளவில் அது ஒரு எதிர்மறை ஒழுக்கமேயாகும். கடும்நோன்புகள் வாழ்வினின்று ஒதுங்கி நிற்கும் ஒரு மனோபாவத்தை உருவாக்குகின்றன. எனினும் அது தெய்வசிந்தனையோடு இணையும் போதுதான் சமனப்படுகிறது. பரீதின் துறவொழுக்கம் இருவகையான இறைசார்ந்த உடன்பாட்டுத் துடிப்பார்வத்தை உடையது. "நான் உனக்காக வாழ்கிறேன்; உனக்காகவே இறக்கிறேன்" என்னும் சொற்களே அவர் வாய்திறக்கும்போதெல்லாம் வெளிப்பட்டது. சில யோகியர் உலக வாழ்வை அடியோடு துறக்க விழைவர்; பரீது அக்கருத்தினரல்லர். உலகைத் துறப்பதோ கடுந்தவம் இயற்ற காட்டுக்குப் போவதோ அவருக்கு உடன்பாடன்று. அவர் எம்மக்களின் நலன்களை நாடினாரோ அம்மக்களுக்குத் தொண்டாற்ற விழைந்தார். அவர்களை ஆன்மீகத் தகவுகளின் அடிப்படையில் உயர்த்தினார். கடவுளோடு ஒன்றுதல், பொதுமக்களுக்குத் தொண்டாற்றுதல் ஆகிய இரண்டும் பரீதின் வாழ்வில் காணப்பட்ட இருபெரும் குறிக்கோள்களாக இருந்தன.

பக்தியார் காகியின் மனையில் அவர் தங்கி இருந்த காலத்தில் அவர்தம் வழிபாடுகள் உபவாசங்கள் முதலியவற்றால் ஒரு ஞானிக்கே உரிய புனித நிலையை அடைந்துவிட்டாற்போல் காணப்பட்டார். ஒருமுறை சிஷ்டி சில்சிலாவை இந்தியாவில் தோற்றுவித்த குவாஜா முனிஉத்—தீன் பக்தியார் காகியின் உறைமனைக்கு வருகை புரிந்தார். அப்போது அவர், "பக்தியார் காகி அவர்களே! நீங்கள் ஒரு வல்லூறைப் பிடித்திருக்கிறீர்கள்; சொர்க்க மரத்திலல்லாமல் அது வேறெங்கும் கூடுகட்டாது. பரீது ஒரு விளக்குக் கம்பம் போன்றவர்; அவர் சில்சிலா நெறியை உலகனைத்துக்கும் புலப்படுத்துவார்" என்று கூறினார். முனிஉத்—தீன் பக்தியாரை நோக்கி அவரை வாழ்த்துமாறு பணித்தார். தம் குருவே அருகிருக்கும்போது அவர் வாழ்த்தாமல் தாம் வாழ்த்துவது எவ்வாறு பொருந்தும் என்று எண்ணித் தயங்கினார். மிகுந்த மதிப்புணர்வோடு மெல்ல மறுத்தார். அதன்பின் இரு ஞானியருமே பரீதை ஒருசேரப் போற்றி ஆசி வழங்கினர். கலீபு அகமது நிசாமி இந்த அசாதாரண நிகழ்ச்சியைப் பற்றிப் பேசும்போது பின்வருமாறு எழுதிச் செல்கிறார்: "சிஸ்டி

சில்சிலாவின் வரலாற்றில் இது ஒரு முக்கியமான நிகழ்ச்சி எனலாம். ஏனெனில் இதற்கு முன்போ பின்போ வேறு எந்த மார்க்க ஞானியும் இவ்வாறு தம் குருவாலும் பரமகுருவாலும் ஒரே நேரத்தில் வாழ்த்தப்படவில்லை". குவாஜா நிஜாம் உத்–தீனின் சீடர் அமீன் குர்து இதுபற்றி எழுதும்போது பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

இரு ஞானியரும் உனக்கு இரு உலகங்களை வழங்கினர்.
இக்கால மார்க்கப் பேரரசர்களிடமிருந்து நீ ராஜ்யங்களைப் பெற்றிருக்கிறாய்
இம்மையும் மறுமையும் உனக்கே உரியது.
சொல்லப்போனால் இந்த அண்டம் முழுமையும் உன்னிடத்தில் ஒப்படை செய்யப்பட்டுவிட்டது.

பக்தி, துறவு, வழிபாடு முதலியவற்றால் பெற்ற பெருங்கீர்த்தியும் மிகச் சிறிய ஆளுமையும் உடையவராகிய பரீதின் புகழ் மக்களிடையே மிக விரைவாகப் பரவியதில் வியப்பென்ன இருக்கிறது? குத்புதீன் மனைக்குத் திரண்டுவந்த மக்கள் கூட்டம் பரீதிடம் தமக்காகத் தாயத்துக்களைத் தருமாறும் தங்களுக்காகப் பிரார்த்தனை செய்யுமாறும் அவரைக் கேட்டுக்கொண்டனர். அத்தகைய தாயத்துக்கள் தங்களைத் துன்பத்தினின்று காக்கும் என்பது கிராமப்புறத்து மக்களின் பொதுவான நம்பிக்கையாய் இருந்தது. தொடர்ந்து பல மக்கள் அவரைத் தேடிவந்தனர். தம்மை நாடி வந்தோர்க்குத் தாயத்து வழங்குவதிலேயே அவரது நேரம் கழிந்தது. அவர் வழிபாடியற்றவோ, தியானங்கள் செய்யவோ நேரம் கிட்டவில்லை. அவர் தம் குருவாகிய குத்புதீனிடம் ஆலோசனை கேட்டார். அவர் ஒரு சூஃபியின் பாணியிலேயே பதிலுரைத்தார்: "இதோ பாருங்கள் இவையெல்லாம் நம் கையில் இல்லை. நாம் வெறும் கருவிகளே. இறைவனின் திருப்பெயர் எழுதப்பட்ட உங்கள் தாயத்து அவராகவே இருந்து துனபங்களைக் களைகிறது. எனவே, நீங்கள் அதை எக்காரணம் கொண்டும் நிறுத்திவிடாதீர்கள்" என்றார். தேவைப்பட்டவர்கட்குத் தாயத்தினைத் தயாரித்துத் தரும் பணியை பரீது தொடர்ந்து செய்தார் என்பதைக் கூறவும் வேண்டுமோ? பரீதின் சீடர் நிஜாம் உத்–தீன் ஒருமுறை இதுபற்றி சலித்துக்கொண்டபோது, அவர் "நீ தாயத்து எழுதுவதற்கே இப்படி களைத்துப்போய் விடுவாயானால், உன்னை நோக்கி உன்வழிபாட்டிற்காக மக்கள் கூட்டம் நெருங்கும்போது நீ என்ன ஆகப்போகிறாயோ?" என்று பதிலுரைத்தார்.

அனுபூதிமான்களுக்குரிய பயிற்சிகள் முழுமையாக நிறைவுபெற்ற பின் குத்புதீன் பக்தியார் காகி, ஹான்சி நகருக்குப் போய் ஒரு பணிமையத்தை நிறுவும்படி பரீதுக்கு அறிவுரை கூறினார். ஹான்சி அமைதி நிறைந்த ஊர் என்பதால் அங்குள்ள ஏழைகளுக்கு எவ்வெவ்வகையிலெல்லாம் உதவ முடியுமோ அவ்வாறு உதவுவதுடன், தில்லி நகரத்தின் கூட்டத்திலிருந்து தப்பி நீண்ட நேரம் தியானம் செய்ய இயலும். பரீது ஹான்சிக்குப் புறப்படுவதற்கு முன் குத்புதீன் பாத்திஹா ஓதி தனக்குப்பின் பரீது தம்மைத் தொடர்வோராக இருப்பாரென்று கூறி, அவருக்கு வழிபாட்டுக் கம்பளத்தையும் அலுவலர் குழாத்தையும் அளித்தார். இவை தவிர்ந்த ஏனைய சிறப்புரிமைச் சின்னங்கள் அவரது மறைவுக்குப் பின் பரீதுக்கு அளிக்கப்படவிருந்தன.

ஹான்சி, பரீது கற்பனை செய்திருந்த அளவுக்கு மிகப்பிற்பட்ட இடமில்லை. அது ஹிஸ்ஸார் மாவட்டத்தில் இருந்தது. அமைதியான ஊர்; படைவீரர்கள் தங்கி இருக்கும் பகுதி அது. துருக்கியருக்கும் ராஜபுத்திரர்களுக்கும் போர் நடந்த காலத்தில் அது வரலாற்று முக்கியத்துவம் பெற்றது. பரீது அங்குப் பல ஆண்டுகள் தங்கி இருந்தார். சிலர் பன்னிரு ஆண்டுகள் என்றும் சிலர் இருபது ஆண்டுகள் என்றும் கூறுகின்றனர். மனிதநேய நோக்குடைய பரீது ஹான்சியிலும் பக்கத்து ஊர்களிலும் வாழ்ந்த மக்களுக்குத் தம்மாலான தொண்டுகளை அன்போடும் பக்தியுணர்வோடும் செய்துவந்தார். இஸ்லாமியத் திருத்தொண்டர் வரலாற்றை எழுதிய சில ஆசிரியர்கள் இங்கு வாழ்ந்த காலத்தில் பரீது பல அற்புதங்களை நிகழ்த்தியதாகக் குறிப்பிட்டுள்ளனர். இவ்விருபதாம் நூற்றாண்டில் மாக்ஸ் ஆர்தர் மெக்கான்லிப் எழுதிய நூலிலும்கூட அற்புத நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன. ஆனால், பரீது போன்ற ஞானிகள் தங்கள் ஆன்மீக மேம்பாட்டைக் காட்டுவதற்கு அற்புதங்களை நிகழ்த்தவேண்டும் என்கிற தேவையில்லை. இறைநேயராகவும் மக்களால் மதிக்கப்படுகிற மனிதராகவும் வாழ்வதற்கு அவர் எல்லாவகையான ஒழுக்கத் தகுதிகளையும் பெற்றிருந்தார். இந்த ஒழுக்கத் தகுதிகளுக்கு செய்கு முனி—உத்—தீன் சரியான விளக்கம் தந்துள்ளார். "பெருக்கெடுத்தோடும் ஆற்றைப்போல் தாராள மனமும், கதிரவனைப்போல் கருணையும், நிலத்தைப்போல் விருந்தோம்பும் பண்பும்" உடையவர்களையே இறைவன் தம் அன்புக்குரியவராக ஏற்றுக்கொள்கிறார். பரீது மிகக் கொடிய வறுமையில் வாழ்ந்தபோதும், உணவுப் பற்றுக்குறையால் அடிக்கடி உபவாசம் மேற்கொள்ள நேரிட்ட போதும் அவரது

தங்குமனைக்கு வரும் யாரும் ஒருபிடியேனும் உண்ணாமற் சென்றதில்லை. இஸ்லாமிய மதத்தோர் மட்டுமன்றி ஏனைய சமய நெறிக்கண் நின்றோரும் அவரது நல்வாழ்த்துக்களைப் பெறவும் தமக்கு ஏற்படும் ஐயங்களையும் அச்சங்களையும் அகற்றிக்கொள்ளவும் அவ்வப்போது அங்கே வந்து போவதுண்டு. யோகிகளும் சாதுக்களும் தம் ஆன்மீகச் சிக்கல்களை விவாதிக்கவும் ஆன்மீக விளக்கம் பெறவும் வந்து சென்றனர். அவர் முஸ்லீம்கள் இந்துக்கள் எனப் பகுத்துப் பார்த்ததில்லை. மரபு வழுவாத வலிமாக்கள் இஸ்லாமியரல்லாதாரைக் காஃபிர்கள் என்று அழைப்பதை அவர் ஏற்கவில்லை. யாராவது இஸ்லாத்தைத் தழுவவேண்டும் என்று விருப்பம் தெரிவித்தால் அவர்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள். பரீது குர்ஆன் சட்டங்களையே போற்றி வாழ்ந்தார். சமயத்துறையில் கட்டாயம் என எதுவும் இருக்கக்கூடாது என்பதே அவர் கருத்து. இறைவனோடு நேயம் பாராட்டல், சகோதரத்துவத்தைப் போற்றுதல், பக்திநெறி நிற்றல், தூய ஒழுக்கத்தினராதல், கருணையோடும் அன்போடும் இனபேதமின்றி மனிதகுலத்திற்குத் தொண்டு செய்தல் ஆகிய காரணங்களால் கவரப்பட்டு ஆயிரக்கணக்கான இந்துக்கள் இஸ்லாத்தைத் தழுவினர். குறிப்பாகக் கீழ்சாதியைச் சேர்ந்தோர் — பல தலைமுறைக் காலமாக — இழித்தும் பழித்தும் பேசப்பட்டோர் இஸ்லாத்திற்கு வந்து சேர்ந்தனர். சமயப்பொறை, வெவ்வேறு நெறியில் நிற்போரையும் சரியான கோணத்தில் புரிந்துகொள்ளுதல் ஆகிய பண்புகளின் குறியீடாக பரீது திகழ்ந்தார். ஒருமுறை யாரோ ஒருவர் அவரிடம் கத்தரிக்கோல் ஒன்றைக் கொடுத்தபோது, "இது எனக்கெதற்கு? என்னிடத்தில் ஊசியைக் கொடுங்கள்; தைக்கிறேன். நான் எதையும் வெட்ட விரும்பாதவன்" என்றாராம். இக்குறிப்பு அம்ரிஹாசன் என்பார் எழுதிய நூலில் காணப்படுவதாகும். மாற்றாரின் நம்பிக்கைகளை மதித்துப் போற்றும் வகையில் அவர் மக்களையெல்லாம் ஒருங்கிணைக்க விரும்பினார். மதத்தில் உயர்வு தாழ்வு கற்பித்து முரண்பாடுகளை உருவாக்குவதை அவர் அடியோடு வெறுத்தார். பரீது தரீக்கத்துக்கு அடிப்படையாய் அமையும் ஷரீஅத்தைப் போற்றினார். இந்த நெறியையே அவர் வாணாள் முழுவதும் பின்பற்றினார்; சூஃபிச பண்பாட்டின் அடிப்படையும் அதுவே. இது இறைவன்மீது கொள்ளும் பக்திமட்டுமன்றி, அனைத்து உயிர்களிடத்தும் கொள்ளுகிற நேயமுமாகும். இறையன்பு என்பது மனிதர்களிடத்தில் செலுத்தும் அன்பு வாயிலாகவே அடையத்தக்கது என்னும் கருத்தைத்தான் பரீது வற்புறுத்தினார். உட்பூசல், வேறுபாடு, முரண்கள், இனவெறுப்பு முதலியவற்றைக்

கடக்கவல்ல அன்பு வழியை அவர் உருவாக்க முனைந்தார். அவ்வகையில் அவர் ஹான்சியில் அன்புமயமான ஓர் சூழலை உண்டாக்கினார். மனிதாபிமானம், மனித இனம் முழுமைக்கும் உய்வு கிட்டவேண்டும் என்னும் பேரவா இவ்விரண்டும் சூஃபி ஞானியர்களின் கோட்பாடாக அமைந்து, இந்து முஸ்லீம் சீக்கியர் ஆகிய அனைவரையும் கவர்ந்தது. அக்காலத்தில் அரசியல், சமூகம் ஆகிய இரண்டு நிலைகளிலும் காணப்பட்ட நிலைப்பாடில்லாத துன்பக் காட்சிகளின் பின்னணியில் பரீது செய்த செயல்களை நாம் எண்ணிப் பார்த்தால் அவை ஒரு மகத்தான புரட்சியாக இருந்தமையை அறியலாம்.

இச்சமயத்தில் குத்புதீன் பக்தியார் காகி மரணமடைந்துவிட்டார் என்னும் செய்தி தில்லியிலிருந்து வந்தது. பரீது டில்லிக்கு விரைந்தார். அங்கு அவருக்கு குருமார்களுக்குரிய சிறப்புரிமைச் சின்னங்கள் வழங்கப்பட்டன. அவர் தம்மை சிஸ்டி சில்சிலாவின் தலைவராகப் பிரகடனப்படுத்திக் கொண்டார். தில்லி வாழ்க்கை ஹான்சி வாழ்க்கைக்கு முற்றிலும் வேறுபட்டதாக இருந்தது. சமூகப் பணிகள், சமய மாநாடுகள், நேரில் சந்திக்க வாய்ப்பு வேண்டுமென வற்புறுத்தும் உயர்மட்டப் பார்வையாளர்களின் வருகை, என தில்லி வாழ்க்கை பெரிதும் பரபரப்பாக அமைந்தது. கிழறுப்புக்கு இடம் தரும் அரசியல் சூழ்ச்சிகளும் தில்லியில் நிகழ்ந்து வந்தன. சமய குருமார்களும் அதில் சம்பந்தப்பட்டனர். நிலப்பிரபுத்துவம் அதன் இயல்பான முரண்பாடுகளோடும் சந்தர்ப்பவாதப் போக்குகளோடும் நிலைபெற்றிருந்தது. இஸ்லாமிய அரசில், சமயத்தின் ஒரு பகுதியாகவே சட்டமும் விளங்கியபடியால், அரசியலும் சமயமும் ஒன்றுகலக்க நேர்ந்தது. சமயத் தலைவர்களும் அரசியல் தலைவர்களுக்கு ஆமாம் சாமிகள் ஆயினர். மரபு மீற விரும்பாத இறையியலாளர்கள் அரசை அணுகிய முறைக்கும் சூஃபிகள் அரசியலை அணுகிய முறைக்கும் உள்ள வேறுபாட்டினை இங்கு அறிவது பயன்தரும். சூஃபிகளுக்கும் உலமாக்களுக்கும் இடையே காணப்பட்ட எதிர்ப்பிற்குச் சமய அடிப்படையில் காரணங்கள் இருந்தன. சூஃபிகள் கடவுளை நேரில் தரிசிக்கலாம் என்று கூறினர்; ஆன்மீக முயற்சிகள் வாயிலாக இந்த உலகிலேயே, இந்த வாழ்விலேயே இறைவனோடு ஒன்றுகூடும் முயற்சியை அவர்கள் மேற்கொண்டனர். உலமாக்கள் நியாயத் தீர்ப்பு நாளில் நம்பிக்கை வைத்தவர்கள்; அன்று வழங்கப்படும் நரகம் சொர்க்கம் போன்ற ஊதியங்களில் உறுதி கொண்டார்கள். அவர்கள் கடவுளை நேரே

தரிசித்தல் என்னும் கொள்கையை மறுத்தனர். எந்த வகையிலும் இறைவனை நெருங்க முடியாது என்றும் அவர்கள் கருதினர்; அவ்வாறு நெருங்கும் உரிமை இறைத்தூதர் ஒருவருக்கே உண்டு என்பது அவர்கள் கொள்கை. எனவே, அவர்களைப் பொறுத்தவரை இறைதரிசனம், கடவுளைச் சந்தித்தல், அவரோடு ஒன்றுகூடல் என்பன போன்ற கருத்துக்களுக்கே இடமில்லை. அவர்கள் நம்பிக்கையோடு எதிர்கொண்டது கடவுளின் அளப்பரிய பெருங்கருணையும் சொர்க்கத்தில் கிட்டும் நிறைமகிழ்ச்சி நிலையுமேயாம். இறைதரிசனம் பெறாமல் தம்மால் இமைப்போதும் தரிக்கமுடியாது என்று கருதுவோரும் தம்மிடையே இருப்பதை சூஃபிகள் எடுத்துக்காட்டினர். மேலும், சூஃபிகள் செல்வர்களிடமும், சொர்க்கம் நரகம் போன்ற மறுஉலகக் கருத்துகளிலும் வேறுபட்ட கருத்துக் கொண்டிருந்தனர்.

இங்கே ஒரு கருத்தைக் குறிப்பிட்டதால் வேண்டும். சிஸ்டி சில்சிலா ஒன்றே அரசோடு தொடர்பு கொள்வதை அடியோடு வெறுத்தொதுக்கிற்று. ஆனால், அரசு என்னும் அமைப்பு பெரும்பலத்தோடு விளங்கும்போது, அதனோடு தொடர்பைத் துண்டித்துக்கொண்டு இயங்குவது கடினமாகவே இருந்தது. அரசாங்கத்தோடு பரீது எத்தகைய உறவு கொண்டிருந்தார் என்பதற்கு இருநிகழ்ச்சிகளை இங்கு உதாரணமாகக் காட்டலாம். பால்பன் சுல்தான் அவருக்கு ஒரு கிராமத்தையும் ஓரளவு ரொக்கப் பணத்தையும் ஒருமுறை நன்கொடையாக அளித்தபோது பரீது பணத்தைப் பெற்றுக்கொண்டு அதை அங்கிருந்த ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடுத்துவிட்டார். வழங்கப்பட்ட நிலத்தை வேண்டா என்றும் மறுத்து விட்டார். நான் இதனை ஏற்றுக்கொண்டால் ஜாகிர்தார் ஆக முடியுமே தவிர சூஃபியாக வாழமுடியாது என்று கூறினார். மற்றொரு சமயம் யாரோ ஒருவர் தொடர்பாக ஏதோ ஒரு வழக்கில் பரிந்துரை செய்ய நேர்ந்தபோது அவர் பால்பனுக்குப் பின்வருமாறு எழுதினார்: "நான் இந்த வழக்கை முதலில் கடவுளின் திருமுன்னும் அதன்பின் மன்னராகிய தங்கள் திருமுன்னும் எடுத்துரைக்கிறேன். இது தொடர்பாகத் தாங்கள் நடுநிலையான தீர்ப்பு வழங்கினால் தாங்கள் நன்றிக்கு உரியவர் ஆவீர்கள்; ஏனெனில் அத்தீர்ப்பு தங்கள் வழியாகவே வழங்கப்படுகிறது. ஆனால், உண்மையில் தீர்ப்பு வழங்குவதற்கு உரியவர் இறைவனே. தாங்கள் நடுநிலையான தீர்ப்பை வழங்க மறுத்தால், அதற்குக் காரணம் நீங்கள் என்று நான் கருதமாட்டேன்; ஏனெனில் அதற்கும்

காரணமாக இருப்பவர் இறைவனே". பரீது தம் சீடர்களுக்கு இந்த வகையில் கூறிய அறிவுரை ஒப்புயர்வில்லாதது. அவர் கூறினார்: "நீங்கள் ஆன்மீகத் தகுதிப்பாட்டில் உயர விரும்பினால் அரசர்களோடு தொடர்பு கொள்ளாதீர்கள்".

தில்லி நகர வாழ்விலும், அங்கு நடந்த அரசியல் நிகழ்ச்சிகளிலும் மனம் உளைந்து நின்ற பரீது ஹான்சிக்குத் திரும்பிவிட்டார். ஆனால் இங்கும் அவர் தேட அவாவிய அமைதி அவருக்குக் கிட்டுவதாயில்லை. அவர் செல்லுமிடமெல்லாம் மக்கள் கூட்டம் அவரை மொய்த்தது. அவரது பெரும்பாலான நேரமும் ஓய்வும் அருகின. ஹான்சியைவிட்டு வெளியேற வேண்டுமென்னும் உள்ளுணர்வு அவரை உந்திக்கொண்டே இருந்தது; எங்கேனும் அமைதியான தனி இடத்தில் அமர்ந்து தவம் செய்ய வேண்டுமென்பதே அவரது எண்ணமாகும். தியானம் மூலம் இறைவனைக் கூடுதலே அவரது அனுபூதி முயற்சியின் முடிந்த முடிபாக இருந்தது. தம் சீடர் ஒருவரிடம் ஹான்சி மனையை ஒப்படைத்துவிட்டு பாகிஸ்தானிலுள்ள மாண்ட்கோமரி மாவட்டத்தில் இருந்த அஜோதான் என்னும் இடத்தை அடைந்தார். அந்த இடம் பின்னாளில் 'பாக்புத்தான்' என அழைக்கப்பட்டது.

பரீது அஜோதானில் ஊருக்குப் புறத்தே யாரும் புழக்கமில்லாத் தனி இடத்தைத் தேர்ந்தெடுத்து மரங்கள் நிறைந்த இடத்தில் தமக்கெனச் சிறிய குடிசையைக் கட்டிக்கொண்டார். பல மைல் தூரம் அங்கே மணற்குன்றுகளும் வளர்ச்சிகுன்றிய மரங்களுமே இருந்தன. அந்த இடத்தில் பாம்புகளும் கொடிய விலங்குகளும் நிறைந்திருந்தன. கொஞ்சகாலம் பரீது வழிபாட்டிலும் தியானத்திலும் ஈடுபட்டிருந்தார். பின்னரே பார்வையாளரை வரவிடுத்தார்.

ஞானியர்களின் உறைவிடங்கள் ஏதோ ஒருவகையான காந்தக் கவர்ச்சிக்கு ஆளாவதும் அவரை நோக்கி எண்ணற்ற மக்கள் கூட்டம் தேடிவருவதும், விரைவிலேயே அவ்வூர்கள் வளர்ச்சிபெற்றுப் பெருநகரங்களாய் மாறுவதும் நாம் அறிந்ததே. அதில் வியப்பென்ன இருக்கமுடியும்? தொலைதூரத்திலிருந்து பரீதை வழிபடுவதற்கு மக்கள் கூடினார்கள். அவரது புகழும் பெருமையும் அஜோதான் நகரத்து காசிமின் மனத்தில் அழுக்காற்றைத் தூண்டின. அவர் உள்ளூரிலிருந்த மிட்டா

மிராசுகளையும் அரசு அலுவலர்களையும் அவருக்குத் தொல்லைதருமாறு தூண்டிவிட்டார். ஓர் ஆளை அமர்த்தி யாருமறியாமல் அவரைக் கொலை செய்யத் தூண்டுமளவிற்கும் சென்றார். ஆனால் அது நடக்கவில்லை. செய்கு நிஜாமுத்தீன் அவுலியாவின் கூற்றுக்கிணங்க காசிம் அவர்களின் உள்நோக்கத்தைப் பரீது எப்படியோ உய்த்தறிந்துகொண்டார். விபரீதமாக எதுவும் நிகழ வாய்ப்பு ஏற்படவில்லை. காசிம் அந்த வட்டாரத்து ஆளுநரிடம் பரீதின் துறவுமனையில் இஸ்லாமிய வழக்கிற்கு மாறான ஆட்டபாட்டங்கள் நடப்பதாக முறையீடு செய்தார். அவர் பரீதிற்கும் அவரது பிள்ளைகட்கும் தொல்லை தந்தார்; எனினும் தம் பொறுமையாலும் சகிப்புத்தன்மையாலும் பரீது வெற்றிகொண்டார்.

அஜோதானில் இருந்த நாட்களில் பரீது மணம்புரிந்துகொண்டு ஒரு பெரிய குடும்பத்தை வளர்த்து உருவாக்கினார். பரீதிற்கு மூன்று மனைவியர்களென்றும் அவருள் ஒருவர் சுல்தான் பால்பனின் மகள் என்றும் சொல்லுவர். எனினும், இது அவரது வரலாற்றில் உறுதியாகச் சொல்லப்படவில்லை. மேலும் சுல்தான்களோடும் அரசு அதிகாரிகளோடும் எந்த உறவும் வைத்துக் கொள்ள விரும்பாதவர் அவர். எனவே, அவர் ஒருபோதும் இளவரசியை மணக்க இசைந்திருக்கமாட்டார். அதுமட்டுமன்றி, அவர் சுல்தானின் மருமகனாக இருந்தால் பெரும் வறுமையில் உழன்றிருப்பாரா? இவையெல்லாம் ஜவாகிர்—இ—பரீது என்னும் நூலில் அலி அஸ்கார் சிஸ்டியின் கற்பனையில் பிறந்தனவே. அந்நூலில் பேசப்படுவன பெரும்பாலும் அற்புதச்செயல்களும் நடந்திருக்க முடியாதனவுமே. பரீதுக்கு பிள்ளைகள் பலர்; பேரன் பேத்திகளும் மிகப் பலர். எந்த வடிவில் அன்பளிப்புகள்—நன்கொடைகள் வரினும் அவற்றை எல்லார்க்கும் பகிர்ந்து அளித்துவிடுவதே சூஃபிகளின் நடைமுறையாகும். அதையேதான் பரீதும் செய்தார். ஆதலின் அவர் வறுமையிலும் துன்பத்திலும் வாழநேர்ந்தது. ஆனால், பாபா பரீது அவற்றையெல்லாம் தமக்கு நேரும் இன்னலாகக் கருதவில்லை. கடவுளின் ஆணையாகவே கருதி ஏற்றுக்கொண்டார். தம் பெரும்பாலான நேரத்தை வழிபாட்டிலும் உபவாசத்திலும் கழித்தார்.

பாபா பரீதின் புகழும் செல்வாக்கும் பெருகின. பலதரப்பட்ட மக்களும் அவரை நாடி வந்துகொண்டேயிருந்தனர். அவரது சீடர்களேயன்றி அறிஞர்கள், வாணிகர்கள், அரசு அலுவலர்கள், தம்

தொழில்களைத் தற்காலிகமாகவோ நிரந்தரமாகவோ விட்டுவிட்டு வந்தவர்கள் என மிகப்பலர் அவரது துறவுமனையில் உடனுறைந்தனர். புகழ்பெற்ற பெரிய மனிதர்களும்கூட அங்கு வந்து எளிமைக்கோலத்தில் தொண்டாற்றினர்; அத்தொண்டில் அவர்கள் தேடியலைந்த அமைதியைத் தரிசித்தனர். இவையெல்லாம் அவரது வரலாற்றிலிருந்து பெறப்படும் செய்திகளாகும்.

பரீதின் பெரும் புகழுக்குக் காரணங்கள் யாவை? எல்லா இடங்களிலுமே ஞானியர் புகழோடுதான் விளங்குகின்றனர். அவர்களது ஞானநிலையும் ஆன்மீகச் சாதனையும் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டால் கூடிய விரைவிலேயே அவரைப் பின்பற்றுவோரின் தொகை பெருகுகிறது. இந்தியாவைப் பொறுத்தவரை இந்த ஞானியர் திருக்கூட்டத்திற்கு மிகப் பழமையான ஒரு மரபு உண்டு. மனிதர்கள் எண்ணற்ற துன்பம் துயரம் இன்னல் முதலானவற்றிற்கு ஆளாகிறார்கள். அவர்கள் எதிலாவது மனஅமைதி கிட்டுமா என்று தேடுகிறார்கள்; எதைஎதையோ தேடித்தேடி அடைய முயல்கிறார்கள். எங்கு நோக்கினும் உலகம் அவர்களோடு முரண்பட்டு நிற்பதை உணர்கிறார்கள். கடைசியாக ஞானிகளையும் சூஃபிகளையும் சென்றடைகின்றனர். ஏனெனில் அவர்களிடம்தான் இவர்களது வினாக்களுக்கு விடை கிடைக்கிறது; போதிய உலகியற் செல்வங்களைப் பெற்ற சிலர் திடுமென செல்வ வேட்டையின் பயனின்மையை உணர்கிறார்கள். பகட்டின்பம் மிகுந்த வாழ்வின் உள்ளீடின்மையை அறிகிறார்கள். மனித வாழ்வின் நிலையாமை அவர்களுக்குப் புலனாகிறது; அவர்களும் இத்தகைய ஞானியரிடத்தே வந்து ஆன்மவேட்கைக்கு வழிகாட்டுதல்களைப் பெறுகிறார்கள். ஞானியர் சாதுக்களின் உறைவிடங்களையன்றி அவர்கள் வேறு எந்த இடத்தைத் தேடிச் செல்ல இயலும்? பரீது சிஸ்டி சில்சிலாவின் தலைவராய்த் திகழ்ந்த நிலை, பக்தி, நோன்பு வழிபாடு முதலியவற்றால் அவர் பெற்ற பெருமை, என்றென்றும் பிறரை வரவேற்பதற்காகவே திறந்துகிடக்கும் அவரது வீட்டின் அடையா நெடுங்கதவம் ஏழை எளியோர்க்கு உதவவும் அவர்களுக்காக வழிபாடாற்றவும் தம்மைத் தலைப்படுத்திக்கொண்ட பண்பு, இவையெல்லாவற்றையும்விட அவரது எளிமை கனிவு அனைத்தும் அவரைப் பலராலும் நேசிக்கப்படும் இந்திய நாட்டின் ஒப்பற்ற இஸ்லாமிய ஞானியருள் ஒருவராக ஆக்கின.

உருது மொழியின் தொடக்ககால வடிவமான இந்திவி என்னும்

மொழியையும் முல்தானி பஞ்சாப் மொழிகளையும் அவர் எளிதாகப் பயன்படுத்தியதால் பொதுமக்களோடு மிகவும் நெருக்கம் கொண்டவரானார். உலமாக்கள் பாரசீக மொழியையே தம் தொடர்புமொழியாகக் கொண்டனர். பரீது பொதுமக்கள் பேசும் அவர்கள் மொழியிலேயே எளிதாக உறவாடினார். பரீது பஞ்சாபி மொழியின் முதற்கவிஞருமாவர். ஆன்மீக வேட்கை நிறைந்த பாடல்களைப் பொதுமக்களின் மொழியில், கிராமிய சுற்றுச் சூழல் தொடர்பான படிமங்களைப் பயன்படுத்தி அவர் பாடினார்; அப்பாடல்கள் பொதுமக்களிடையே அவருக்குப் பெருமதிப்பினைத் தேடிக் கொடுத்தன. மக்கள் அவரது பாடல்களை மனமுருகப் பாடி அவ்வனுபவத்தில் தோய்ந்து திளைத்தனர்.

கவாலிப் பாட்டுகள், கஜல்கள், பல்வேறு சந்தர்ப்பங்களில் பாடப்பட்ட பல குழுப் பாடல்கள் பொதுமக்களைக் கவர்ந்தன. அவர்கள் அவற்றைப் பாடும்நிலையில் மெய்ம்மறந்து குரு—சீடர்—பொதுமக்கள் என்னும் பேதங்களையெல்லாம் கடந்து ஒரு நிறைபேரின்ப அனுபவத்தைப் பெற்றனர். அப்பேரின்ப அனுபவம் அவர்களைக் கடவுள்நிலைக்கு இட்டுச்செல்வதாக அமைந்தது. நம்பிக்கை வேட்கை என்னும் அடிப்படையில் தாங்கள் வேறுபாடற்றவர்கள்; ஒரே நிலையினர் என்று உணர்ந்தனர். இங்குதான் பேதம் கடந்த சர்வசமய சமரச நிலை உருவாயிற்று.

பரீது ஒரு பேரறிஞர்; நல்லாசிரியர். தொலை தூரத்திலிருந்து அவரைத் தேடி வருவோர் அவருடன் இறையியல் தொடர்பான செய்திகளை விவாதித்து, கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டு, சிக்கல்களுக்கெல்லாம் தெளிவு காண்பர்; ஓர் ஆசிரியர் என்னும் நிலையில், அவர் மாணவர்களின் மனத்தில் மரியாதைக்குரிய இடத்தைப் பெற்றிருந்தார். அவரை நோக்கி மாணவர்கள் பலர் தீக்கைபெற வந்துகொண்டேயிருந்தனர். ஒருவகையில் அவர் கடுமையானவர்தான்; ஆனாலும், அவர் எதை மற்றவர்க்குப் போதித்தாரோ அதையே தம் வாழ்வில் வழுவாது பின்பற்றுபவராகவும் விளங்கினார்.

பரீது இந்திய நாட்டின் பொதுமக்களோடு மட்டுமன்றி இந்திய மயமாக்கப்பட்ட சூஃபிசக் கொள்கைகளோடும் தம்மை அடையாளம் காட்டிக் கொண்டார். அவர் மற்ற சூஃபிகளைப்போலவே வேதாந்தம், பௌத்தம், பல்வேறு பக்தி இயக்கங்கள் முதலானவற்றிடமிருந்து

சில கூறுகளைக் கடன் வாங்கிக் கொண்டார். இந்திய யோகிகளை முன்மாதிரியாகக் கொண்டு சூஃபிகளும் மிகக் கடுமையான நோன்பு நெறியில் நின்றனர். பௌத்த சமயத் துறவிகளைப்போல், அவர்கள் வீடுவீடாகச் சென்று தமக்கு வேண்டிய உணவை இரந்து பெற்றனர். பக்தி இயக்கத்தின் அடியார் திருக்கூட்டத்தவர் போல், அவர்கள் இறைவனை நினைந்து பாடினர்; ஆடினர். மேலும் பொதுமக்களின் எளியமொழியையே தம் ஊடகமாகக் கொண்டு கருத்துக்களைப் பரப்பினர். பக்தி இயக்கத்தவர்போலவே அவர்களும் சாதி, கொள்கை, நாடு முதலாய பேதங்களை மறந்து கீழ்மட்டத்து மக்களையும் இருகரம் விரித்து தழுவிக்கொண்டனர். சூஃபிசத்திற்கும் பக்தி இயக்கத்திற்கும் இன்னொரு ஒற்றுமையும் உண்டு. சூஃபிகள் திருமணம் என்னும் அமைப்பில் நம்பிக்கை வைத்தவர்கள். அவர்கள் மணம் புரிந்து கொண்டார்கள்; மக்களை ஈன்றார்கள். அவர்கள் மேற்கொண்ட கடுந்துறவு உலகை வெறுத்து ஓடுவது போன்றதன்று. உலக வாழ்விலிருந்து ஓய்வுபெற்று விலகிவிடுவதுமன்று. அவர்கள் கடவுளை நேசித்தனர்; மக்களையும் நேசித்தனர். இந்த இருவகை நேயமும் அவர்களது ஆன்மீக வாழ்விற்கு அடிப்படையாயின. அவர்கள் வாழ்வியல் முறையைத்தான் வற்புறுத்தினரேயன்றி, எந்தத் தத்துவத்தையும் போதிக்கவில்லை; மண்டையைப் பிய்த்துக்கொள்வது மாதிரி எந்த வியாக்கியானங்களையும் விரித்துப் பேசவில்லை. பக்தி இயக்கம் போலவே சூஃபிசமும் உலகத் துறவு, இறைநேயம் ஆகிய இரு கூறுகளையும் ஒன்றிணைக்கும் முயற்சியில் ஈடுபட்டது. கடவுளோடு ஒன்றுதல், எல்லையிறந்த ஒன்றுடன் எல்லைக்குட்பட்ட ஒன்றுகூடிக் கலத்தல் என்னும் பழைய வேதாந்தக் கொள்கையை அவர்கள் உறுதிப்படுத்தினர். அவர்கள் வழி [தரீகத்] அன்பு வழியாக இருந்தது; அவர்கள் காணவிழைந்த சாதனம் தெய்வீகக் காதலேயாகும்.

பரீதின் இறுதி நாட்கள் மிகக் கடுமையான வறுமையில் கழிந்தது. அவரைப் பின்பற்றுவோர் பலர் இருந்தும், துறவகத்திற்கு [காங்குபா] வந்த வருவாயும் நன்கொடைகளும் கரைந்துபோயின. எப்படிக் கரைந்தன என்று விளக்கம் தரமுடியவில்லை. கடைசி காலத்தில் பரீதுக்கும் அவர் குடும்பத்தாருக்கும் ஒருவேளை உணவுகூடக் கிடைக்கவில்லை; பெரிதும் துன்பப்பட்டனர். ஆனால், இந்நிலை அவர்தம் அன்றாட வழிபாட்டிற்கோ, பிற ஒழுகலாறுகளுக்கோ தடையாக இல்லை. கி.பி. 1265–ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15–ஆம் நாள் பாபா பரீதின் உலக வாழ்வு முடிவுற்றது. அன்று அவர்

மும்முறை தொழுகை நடத்தினார்; அதன் பின்னரே மரணம் அவரை நெருங்கிற்று. அத்தறுவாயில் அவரது உதடுகள் "ஓ! என் வாழ்முதலே! அழியாத பெரும்பொருளே" என்று முணுமுணுத்தன. அத்துறவியின் வாழ்வு நிறைவுபெற்றது.

பரீதின் போதனைகள் மூன்று அடிப்படைக் கொள்கையிலிருந்து ஊற்றெடுத்தன. 1. இறைநேயம், 2. மனத்தூய்மை, 3. செல்வம் மற்றும் உலகியல் முன்னேற்றத்தினின்று ஒதுங்கி நிற்றல் ஆகியவையே அவை. கடவுள்மீது கொள்ளும் பக்தி மானிட சமூகத்தின் மீது கொள்ளும் காதலாகிறது. அதுவே அன்பு, தாராள மனப்பான்மை, நற்செயல்களாக வெளிப்படுகின்றன. மனம் தூய்மை பெறுகிறபோது முனைப்பு, செருக்கு, சினம், காமம், பேராசை முதலியனவற்றிலிருந்து விடுபடுகிறது. புறஉலகின் கவர்ச்சிகளிலிருந்து உள்ளார்ந்த அமைதியை நோக்கி மனத்தைத் திருப்பிவிடுகிறது. ஆன்மீக நிறைவேற்றத்தின் முதற்படி அது கடவுளைப்பற்றிய அச்சம் நமக்கு இருக்கவேண்டும் என்று பரீது வற்புறுத்தினார். அவ்வச்சமே தன் செயல்களை மதிப்பீடு செய்துகொள்ளவும், நியாயத் தீர்ப்புநாள் பற்றி நினைவுகூரவும் செய்கிறது. சொல்லப்போனால், அறவாழ்விற்கு அதுவே பின்தளமாக அமைகிறது. அறம் அறவியல் வாழ்வு பற்றிய ஆழ்ந்த நனவுநிலை இல்லாது போனால் அனுபூதிய வாழ்வு தொடங்காது. ஒழுக்கவியல் பற்றிய உணர்வும், அனுபூதியமும் இணைந்தே இயங்கும். வறுமை வாழ்வை ஏற்றல், பொருளை மறுதலித்தல், உலகநாட்டங்களி லிருந்தும் பேராசைகளிலிருந்தும் தன்னை விலக்கிக் கொள்ளுதல் முதலிய்வற்றை பரீது தொடர்ந்து வலியுறுத்தி வந்தார். உலகப்பற்று துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் முடிவற்ற தளைகட்கும் காரணமாகிறது. இவை மரணம் வந்தாலொழிய மனிதனைவிட்டு விலகுவதில்லை. வாழ்வின் இறுதி இலட்சியம் இறைவனோடு ஒன்றுவதே என்பதை பரீது ஒரு கணமும் மறந்ததில்லை. எனவே, அவர் அன்பு வழியையே மக்களுக்கு நினைவூட்டினார். அவ்வழி ஒன்றே குறிக்கோளை எட்டச் செய்வது. அவர்தம் மாணவர்கட்கு வறுமையை விரும்பி ஏற்றுக்கொள்ளுமாறு போதித்தார்; ஏழை எளியவர்கட்குத் தொண்டாற்றுவதன் வாயிலாக உங்கள் இறைநேயத்தை வெளிப்படுத்துங்கள் என்று வேண்டினார். பரீது தம்முடையதாக எந்த ஒரு மெய்ப்பொருள் தத்துவத்தையும் உபதேசிக்கவில்லை; அவர் வாழ்வில் சில விதிமுறைகளைக் கடைப்பிடிக்குமாறு வற்புறுத்தினார்; அவ்வளவே. ஷரீஅத்

விதிகளை ஒழுங்காகக் கடைப்பிடிப்பதுடன் தொடங்கிய அவர் படிப்படியே தரீகத், மரீபத், ஹகீகத் ஆகிய நிலைகளை அடைந்தார். இங்குக் கூறப்படுவன அனைத்தும் பக்தியின் ஒவ்வொரு படிநிலைகளே; ஒவ்வொரு படிநிலையிலும் ஒவ்வொரு வகையான ஒழுங்கும் கட்டுப்பாடும் தேவைப்படும். இவ்வாறாக, தூயவாழ்வையும், அனைத்தையும் கடந்த பரம்பொருள்மீது பக்தி கொள்வதையுமே அவர் மக்களுக்கு அறிவுறுத்தினார்.

எச்சமயத்தைச் சார்ந்தவராயினும் எக்கொள்கையைப் பின்பற்றுவோராயினும் கடவுள் முன்னிலையில் மக்கள் அனைவரும் சமமே என்று பரீது கூறினார். அவர் அறிமுகப்படுத்திய சமபந்தி முறையும் மக்களிடையே பேதங்களை நீக்கும் ஒரு நெறியாக இருந்தது.

அவருடைய போதனைகளில் நவீனத்தன்மை வாய்ந்த மற்றொரு பகுதியும் உண்டு. ஓய்வு நிறைந்த அந்தக் காலத்திலேயே பரீது காலத்தின் அருமைபற்றி எடுத்துரைத்தார். ஓர் அனுபூதிமானின் வாழ்வில் காலம் மதிப்பு மிகுந்த ஒன்று என்று அடிக்கடி கூறினார். வாழ்வு சிறிது; அனுபூதிமானின் ஆன்மீகப் பயணமோ நீண்ட நெடிய ஒன்று; எனவே, அவனுக்குக் கிட்டும் நேரத்தை எந்த அளவு பயன்கொள்ள முடியுமோ அந்த அளவு பயன்கொள்ள வேண்டும் என்றார். அவருடைய துறவகத்தில் கடுமையான ஒழுக்கக் கட்டுப்பாடுகள் நடைமுறையில் இருந்தன. பலதரப்பட்ட கடமைகளை நிறைவேற்றுவதில் அவர்கள் கால ஒழுங்கைச் சரியாகக் கடைப்பிடித்தனர்.

குர்ஆனில் கூறப்படும் ஜகாத் [தருமம்செய்தல்] என்னும் சட்டத்தை நாம் பின்பற்றவேண்டும் என்பதை பரீது கட்டாயமாக்கினார். ஒவ்வொருவரும் தத்தம் வருவாயில் குறிப்பிட்ட விழுக்காட்டினைத் தானதருமத்திற்கு என்று கொடுக்கவேண்டும். தருமம் செய்தலென்பது மிக உயர்ந்த ஒழுக்க நியதிகளுள் ஒன்று; தனக்கு உரியனவற்றை எல்லார்க்கும் வழங்குவதே மிகவுயர்ந்த அறமாகும்.

பாபா பரீது எடுத்துரைத்த—பின்பற்றிய—வாழ்வியல் ஒழுக்க விதிகள் ஒரு ஞானியின் வாழ்வு பற்றிய கண்ணோட்டத்தையும் ஞானத்தையும் சுருக்கமாய் எடுத்துக்காட்டுவதுபோல்

அமைந்துள்ளன. இதில் குறிக்கத்தக்கது என்னவென்றால், வினைவேறு சொல்வேறு என்று வாழாமல் அவர் தம் போதனைகளைச் சொந்த வாழ்விலும் வழுவாது கடைப்பிடித்து எல்லார்க்கும் உயரிய எடுத்துக்காட்டாய் இலங்கினார் என்பதேயாகும்.

## இயல் : மூன்று

# பரீது மசீதா? பரீது சானியா?

சமய வரலாற்றில் ஏற்பட்ட வழக்கத்திற்கு மாறான ஒரு வியத்தகு நிகழ்ச்சியே பாபா பரீதின் எழுத்துக்கள் தொகுத்துப் பேணப்படக் காரணமாயிற்று. அராபி பாரசீக மொழிகளிலும், உருது இந்திவி பஞ்சாபி போன்ற வட்டார இந்திய மொழிகளிலும், அவர் செய்யுட்கள் புனைந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால், அராபிய பாரசீக மொழிகளிலமைந்த சில உதிரியான கண்ணிகள் மட்டுமே இப்போது நமக்குக் கிடைக்கின்றன. சில ஆராய்ச்சியாளர்கள் இவையும்கூட இவர் எழுதியவைதாமா என்னும் ஐயத்தை எழுப்புகின்றனர். பேராசிரியர் கே. ஏ. நிஜாம் அவரெழுதிய "பரீது–உத்–தீன்–கஞ்சி ஷாகரின் வாழ்க்கையும் காலமும்" என்னும் பெயரிய வாழ்க்கைச் சரித்திரத்தில் ஒரு கருத்தைக் குறிப்பிட்டுச் செல்கிறார். செய்கு பரீது உத்–தீன் எழுதிய 'பவாதித் உஸ் சலாகின்' [குத்புதீன் பக்தியார் காகியின் உரையாடல்கள்], செய்கு பத்ருதீன் இஷக் எழுதிய பாபா பரீதின் 'முல்பாஸ் அஸ்ரர்–உல்–அவுலியா'. செய்கு நிஜாமுத்தீன் அவுலியா தொகுத்ததாகக் கூறப்படும் பாபா பரீதின் முல்பாஸ் ரபாதுல் குலாப் ஆகிய மூன்று நூல்களுமே பாபா பரீதின் வாழ்க்கையை அறிய உதவும் ஆதார நூல்கள் ஆகா. ஏனெனில் அவை சரியான தகவல்களைக் கொண்டவையல்ல என்பதே பேராசிரியர் கே. ஏ. நிஜாமியின் கருத்தாகும். பாபா பரீதின் சீட பரம்பரையில் வந்த யாருமே அவருடைய எழுத்துக்களைப் பேணிக்காக்கும் முயற்சியை மேற்கொள்ளவில்லை. எனினும், பாபா பரீது பஞ்சாபி மொழியில் எழுதிய சில செய்யுட்கள் செவிவழியாக வாழ்வுபெற்றன. அவை குருநானக்கை அவற்றின்பால் ஈடுபாடுகொள்ளச் செய்தன. அவர் தம் சொந்தப் பாடல்களோடு அவற்றையும் சேர்த்துப் பேணினார்; தம் அடுத்த வாரிசாகிய குரு அங்கதரிடம் தந்தார். கி.பி. 1604–இல் குரு அர்ஜுன் தேவ் [1563–1606] ஆதி கிரந்தத்தைத் தொகுத்தபோது பரீதின் செய்யுட்களும் செய்கு பரீதின் சுலோகங்கள் என்னும் தலைப்பில் அவற்றில் இணைக்கப்பெற்றன. இவ்வாறு அப்பாடல்கள்

சீக்கியர்களின் புனிதநூலாகிய குர்பானியில் இடம்பெற்று புனிதத்திற்குரியவையாயின.

நமக்குக் கிடைக்கும் பழமையான வாழ்க்கைச் சரிதத்திலிருந்து ஓர் உண்மை புலனாகிறது. குருநானக் [1469–1539] இருமுறை பாக்பதானுக்குச் சென்று பரீதின் சீட பரம்பரையில் வந்த செய்கு இப்ராஹிமைச் சந்தித்திருக்கிறார்; அவரோடு உரையாடி இருக்கிறார். செய்கு இப்ராஹிம் பரீதின் சில பாடல்களை அவரிடம் கூறி இருக்கிறார். அப்பாடல்களை நாம் ஆழ்ந்து நோக்கினால் அவற்றில் எல்லைகடந்த பரம்பொருளோடு ஒன்றத் தவிக்கும் வேணவா, மனிதனின் நிலையாமை, உலக இன்பங்கள் செல்வம் முதலியவற்றின் மாறும் தன்மை, இறைவன் மீது கொள்ளும் அளவிறந்த நேயம், இறைவனின் திருமுன் மனிதர்கள் அனைவரும் சமம் என்று கருதும் எண்ணம், மரணத்தின் முக்கியத்துவம், இறுதி நியாயத் தீர்ப்பு நாளில், செய்த பாவங்களுக்காக வழங்கப்படும் தண்டனை, உலகியல் ஆன்மிக வாழ்க்கையின் இணைவுநிலை, ஒழுக்க வரம்புகளை வாழ்வில் பின்பற்றுதல் முதலிய பல கருத்துக்கள் பொதிந்து கிடப்பதைக் காணலாம். இந்து மதத்தோடோ இஸ்லாம் மதத்தோடோ தம்மை இணைத்து இனம்காட்டிக் கொள்ளாத குருநானக், பரீதின் பாடல்களில் காணப்படும் இருசமய இணைப்புறவு, சமயப்பொதுமை மனிதநேயம் முதலியவற்றால் கவரப்பட்டு எதிர்காலத் தலைமுறையின் நன்மைக்காக அவற்றைப் பதிவுசெய்து பேணிக்கொண்டார். இதில் வியப்பேதும் இல்லை.

ஏறத்தாழ முன்னூறு ஆண்டுக் காலம்வரை இப்பாடல்களின் ஆசிரியர் யார் என்னும் ஐயத்தை யாரும் கிளப்பியதில்லை. அவை பரீது உத்–தீன்–கஞ்சி ஷாகர் எழுதியதே என்பதை எல்லாருமே ஏற்றுக்கொண்டனர். எம்.ஏ. மக்காலிஃப் என்பார் சீக்கிய மதத்தின் வரலாற்றை ஒரு பெரிய நூலாக எழுதி வெளியிட்டபோதுதான் சிக்கல் ஆரம்பமாயிற்று. அவர் செய்கு பரீதின் வாழ்க்கை வரலாற்றை எழுதியபோது தம் நூலில் ஒரு சர்ச்சையைத் தோற்று வித்தார். குருநானக் கி.பி. 1469–இல் பிறந்தார். எனவே, அவர் ஆதி பாபா பரீதைச் சந்தித்திருக்க முடியாது. பழைய வரலாறு களில் பரீதின் பரம்பரையில் வந்த இரண்டாம் பரீது என்று அழைக்கப் பட்ட செய்கு பிராம் [இப்ராஹிம்] அவர்களைத்தான் இருமுறை சந்தித்ததாகச் சொல்லப்படுகிறது. குருகிரந்த சாஹிபில் காணப்படும்

சுலோகங்களையும் பக்திப் பாடல்களையும் அவர்தாம் எழுதியிருக்க வேண்டும் என்பதும், அவர் தம் ஆன்மீக குருவாகிய பரீதின் பெயரைத் தம் புனைபெயராக வைத்துக்கொண்டிருக்கலாம் என்றும் உறுதியாகத் தெரிகிறது என்று எழுதினார். செய்கு பிராம் அவர்களின் விரிவான குடிவழிப்பட்டியலையும் அவர் தருகிறார். செய்கு பிராம் அவர்கள் பரீது சானி அல்லது இரண்டாவது பரீது என்று அழைக்கப்பட்டதாகவும் அவர் விளக்குகிறார். கடந்த ஐம்பது ஆண்டுகளாக குருகிரந்த சாஹிபில் இடம்பெற்றுள்ள அப்பாடல்களின் ஆசிரியர் பாபா பரீது அவர்களா? அல்லது பரீது சானியா? என்னும் சர்ச்சை பஞ்சாபி இலக்கிய வரலாற்றாசிரியர்களிடையே உச்சகட்டத்தை அடைந்துவிட்டது. குறிப்பிடத்தக்க அறிஞர்கள் இரு அணிகளிலுமே உள்ளனர். எனவே, இதனை சற்று விரிவாகவே நாம் ஆராய்தல் வேண்டும்.

பேராசிரியர் நிஜாமி, பாபா பரீதுக்குக் கவிதை படைக்கும் ஆர்வம் இருந்தது என்பதையும் அவர் சில செய்யுட்களைப் புனைந்தார் என்பதையும் ஒப்புக்கொள்கிறார். பரீது முல்தானிய வட்டாரக் கிளை மொழியில் எழுதிய சில கண்ணிகள், அமீர் குருத் எழுதிய 'சியார்—உல்—அவுலியாவில்' மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன என்பதையும் ஏற்கிறார். ஆனால், நிஜாமுத்தீன் அவுலியாவோ அவருக்குப் பின்வந்த பரம்பரையினரோ யாரும் பாபா பரீது இந்த அளவுக்கு மிகுதியான பாடல்களை எழுதினார் என்று சொல்லவில்லையே என்பதுதான் நிஜாமின் சிந்தனையில் நெருடலை உண்டாக்குகிறது. மேலும் அப்பாடல்களை மொழியியல் நோக்கில் ஆராயும்போது அவற்றில் பிற்காலத்துக்குரிய சொற்பிரயோகங்களும் மரபுத்தொடர்களும் காணப்படுவதாகக் கூறுகிறார். நிஜாமியின் முதல் வாதம் ஓர் எதிர்மறைக் கூற்றாகும். இரண்டாவது வாதமோ எந்த உதாரணத்தாலும் வலியுறுத்தப்படவில்லை. எவ்வாறாயினும் பேராசிரியர் நிஜாமி மேற்கண்ட குர்பானி சுலோகங்கள் செய்குவின் மரபுவழியான கூற்றுக்களைக் கொண்டுள்ளன என்று கருதுகிறார்; ஆனால், இவை குருநானக்கின் சமகாலத்தவராகிய செய்கு இப்ராஹிம் அவர்களால் இயற்றப்பட்டனவே என்று முடிவு கூறுகிறார்.

அண்மையில் லஜ்வந்தி ராமகிருஷ்ணா எழுதியுள்ள "பஞ்சாபி ஸூஃபிக் கவிஞர்கள்" என்னும் நூல் வெளிவந்தது; அவ்வாசிரியர் மக்காலிஃப் அவர்களின் கருத்தை உறுதிப்படுத்துவதோடு

கீழ்க்கண்ட பரீதின் சுலோகத்தையும் மேற்கோள்காட்டித் தம் கருத்தை நிறுவுகிறார்:

ஓ! செய்கு, இந்த உலகில் எந்த வாழ்வுமே நித்தியமானதல்ல
நான் உட்கார்ந்திருக்கிற இந்த இடத்தில் எனக்கு முன்னே
பலர் உட்கார்ந்திருக்கிறார்கள்.

இப்பாட்டிலிருந்து இதன் ஆசிரியர் பரீது அல்லவென்றும் அவரது சீட பரம்பரையில் வந்த யாரோ ஒருவரேயென்றும், அவர் இரண்டாவது பரீது என அழைக்கப்பட்டவரே என்றும் இந்த ஆசிரியர் கூறுகிறார். இந்த முடிவு வியப்பானது. இந்த சுலோகம் உலக வாழ்வின் நிலையாமையை வெறுமனே பேசுகிறது. செய்கு பரீதின் முன்னோர்கள் மறைந்துவிட்டனர் என்னும் உண்மையைத்தான் சுட்டுகிறது. பாபாவுக்கும் பக்தியார் காகி, முன்—உத்—தீன்—சிஷ்டி என இரு ஆன்மீக குருமார்கள் இருந்தனர். சொல்லப்போனால் பரீதின் முன்னோரில் உமர் பருக் என்பாரையும் நாம் சுட்டிக் காட்டலாம். லஜ்வந்தி ராமகிருஷ்ணாவின் கருத்தை நாம் ஏற்க முடியாது; ஏனெனில் இவ்வளவு பெரிய சர்ச்சையை ஒரே ஒரு சுலோகத்திற்கு அவர் தரும் விளக்கத்தைக் கொண்டு — அவ்விளக்கமும் என் நோக்கில் தவறுடையதே—நாம் முடிவு கட்டிவிட முடியாது.

பரீதின் பாடல்களைப் பற்றி மக்காலிஃப் தரும் ஆய்வுரையும் மேலெழுந்தவாரியாக அமைந்ததே. குருநானக்கும் [1469—1539] பாபா பரீதும் [1173—1265] சமகாலத்தவர் அல்ல என்பதாலும், குருநானக் இப்ராஹிம் அவர்களைச் [1552] சந்தித்தார் என்பதாலும் இவை ஐயத்திற்கிடமின்றி இப்ராஹிமால் எழுதப்பட்டதே என்று கூறுவது சரியான விவாதமாகாது; இந்த விவாதம் வழுவுடையது. இரண்டாவதாக மக்காலிஃப்பின் கருத்துப்படி செய்கு இப்ராஹிம் மிகப்பெரிய ஆன்மீக குருமார்களின் வரிசையில ஒரு குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றிருந்தவர்; அவர் பல பெயர்களில் மக்களால் அழைக்கப்பட்டார். பரீது சானி, இரண்டாவது பரீது என்ற பெயர்களும் அவருக்கு இருந்தன. சாலீஸ் பரீது, செய்கு பிராம் கலான், பால ராஜா, செய்கு ப்ராம் சாஹிப், ஷா ப்ராம் என்றெல்லாம்கூடப் பெயர்கள் இருந்தனவாம். நமக்கு ஒரு ஐயம் எழுகிறது. இவ்வளவு பெரிய பட்டங்களோடு விளங்கிய அவரைப்பற்றி சூஃபிச இலக்கிய வரலாற்றிலோ, முஸ்லீம்

கவிஞர்களால் எழுதப்பட்ட பஞ்சாபி இலக்கியம் பற்றிய வரலாற்றிலோ ஒரு குறிப்புக் கூட இல்லையே, ஏன்? மாறாக, பாபா பரீது ஒரு கவிஞரென்றும் ஞானியென்றும் வானளாவப் புகழப்படுகிறாரே அது ஏன்? இவ்வுண்மை நமக்கு வியப்பாக இல்லையா? மக்காலிஃப் தம் நூலை செய்கு பிராம் நடத்திய அற்புதச் செயல்களின் தொகுப்பாகவே முடித்திருக்கிறார்; பாபா பரீது பற்றி அவர் எழுதிய நூலும் அற்புதச்செயல்களின் தொகுப்பாக இருப்பது மிகவும் பரிதாபத்திற்குரியது. ஆய்வுணர்வற்றவராக — தக்க ஆதாரங்களின்றி எதையும் நம்புகிறவராகக் காட்சி தரும் மக்காலிஃப் தமக்குக் கிடைத்த அத்தனை தகவல்களையும் போட்டு நிரப்பி 'சீக்கிய மதம்' என்னும் தலைப்பமைந்த இந்நூலை எழுதியிருக்கிறார் என்பதே சரி.

இன்னொரு கருத்து: புனைபெயர் பற்றிய விவகாரம் மக்காலிஃப்பின் சொந்தக் கண்டுபிடிப்பே. பேராசிரியர் நிஜாமி, பாபா பரீதின் ஆன்மீக சீடர்களுள் எழுவர் பெயரையும் பரீதின் துறவகத்தைச் சேர்ந்த இருபத்தைந்து நாஷின்களின் பெயரையும் குறிப்பிட்டிருக்கிறார். இவர்களுள் யாருமே 'பரீது' என்னும் புனைபெயரைக் கொண்டவர்களல்லர். மேலும், நாமறிந்தவரை சூஃபி ஞானியர் யாருமே தம் ஆன்மீகத் தந்தையின் பெயரைப் புனைபெயராக வைத்துக்கொள்ளவில்லை; சீக்கியர்கள் அவ்வாறு வைத்துக்கொள்வதுண்டு.

பாபா பரீது முப்பத்தாறு ஆண்டுக்காலம் காட்டில் நோன்பு நோற்றது பற்றியும் மக்காலிஃப் குறிப்பிடுகிறார். பரீது இரண்டாம் முறையாக மேலும் பன்னிரண்டு ஆண்டுக்காலம் தவம் மேற்கொள்ள எண்ணிக் காட்டுக்குப் புறப்பட்டபோது தாம் எந்த உயிருக்கும் ஊறு செய்துவிடக் கூடாது என்னும் உறுதியில் தம் வயிற்றில் ரொட்டி வடிவிலான ஒரு மரத்துண்டினைக் கட்டிக்கொண்டு சென்றாராம். கற்பனையாகவே அதை உண்டு பிழைத்திருக்கலாம் என்று எண்ணினாராம். ஒரு நாள் பசியின் கொடுமை தாளாமல் அந்த மரத்துண்டினைப் பல்லால் கடித்தாராம். அவ்வாறு செய்வது பசியைத் தணிக்கும் என்று நம்பியிருக்கிறார். அவரது பற்கள் அழுந்திய சுவடு பதிந்த அம்மரத்துண்டு இன்றளவும் பாக் பத்தானில் பேணிக் காக்கப்பட்டு வருகிறது என்கிறார் மக்காலிஃப். அவர் பாபாவின் வரலாற்றை எழுதும்போது இதையும் இயைபுபடுத்திப் பார்க்கத் தவறிவிட்டார். இந்நிகழச்சி பற்றிய

குறிப்புக்களை கீழ்க்கண்ட அடிகளில் நாம் காணலாம்.

> பரீது, என் ரொட்டித்துண்டு மரத்தாலானது
> பசிதான். எனக்குச் சுவைப்பொருளாகும்.
> வெண்ணெய் தடவிய ரொட்டித் துண்டுகளைப் புசிப்போர்
> வலியால் வருந்துவர்.

பரீது மீண்டும் பன்னிரண்டு ஆண்டுகள் நோன்பு நோற்ற மூன்றாவது காலகட்டத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. அவர் ஒரு கிணற்றுக்குள் தம்மைத்தாமே தலைகீழாகத் தொங்கவிட்டுக்கொண்டாராம். சில்லா—இ—மகுதூக் என்னும் இந்நோன்பு பற்றி முன்னரும் குறிப்பிட்டிருக்கிறோம். இத்தலைகீழ் நிலையில் பறவைகளெல்லாம் தலைமுடியில் கூடுகட்டும்; விலங்குகள் உடல் தசையை அருந்தும் என்பர். கீழ்க்கண்ட பாடல்வரிகளை இவ்வகை நோன்பு நோற்றதற்கு ஆதாரமாக மக்காலிஃப் காட்டுகிறார்.

> பரீது! உன் உடல் ஊசலாட்ட நிலையில் உள்ளது;
> உன் தலை ஒரு கூடுபோல் ஆகிவிட்டது;
> காக்கைகள் உன் பாதங்களை அலகால் கொத்துகின்றன.

இது பாபா பரீதின் பாட்டுத்தான் என்பதை ஒத்துக்கொள்கிற மக்காலிஃப் வியக்கத்தக்க இன்னொரு கருத்தையும் இதனோடு ஒட்டிப் பிணைக்கிறார். ஈரடிக் கண்ணியை இப்ராஹிம் அவர்கள் 90,91,92—ஆவது சுலோகங்களாகத் தொடர்ந்து விரித்துரைத்தார் என்கிறார் அவர். இப்பாடல்களை பாபா பரீதின் வாழ்க்கையோடும் அவர் அனுபவித்த வறுமையோடும் இணைத்துப்பார்த்து ஒரு முடிவுக்கு வருவோம்:

> பரீது! என் முதிய உடல் எலும்புக்கூடாக ஆகிவிட்டது:
> அண்டங்காக்கைகள் என் உள்ளங்களையும் பாதங்களையும் கொத்துகின்றன,
> இந்த வினாடிவரை, கடவுள் எனக்கு உதவிசெய்ய முன்வரவில்லை.
> இந்தத் தீவினைப் பணியாளனின் அவலத்தைப் பார்த்தாயா? [90]

ஓ! காக்கைகளே, என் எலும்புச் சட்டகத்தைத் தேடி
தசைகளையெல்லாம் உண்டுவிட்டீர்கள்!
ஆனால் என் இரு விழிகளை மட்டும் தீண்டாதீர்கள்,
ஏனெனில்
என் நேயத்திற்குரியவரைக் காணமுடியுமென்று நம்புகிறேன்
[91]

ஓ! காக்கைகளே, என் எலும்புகளைத் துளைக்காதீர்கள்!
என்மீது உட்காருங்கள், பறந்துபோய் விடுங்கள்!
எவ்வாறாயினும் என் தசையை உண்ணாதீர்கள்,
என் தேவன்
எலும்பிலும் தசையிலுமே உறைகிறான். [92]

மக்காலிஃப் தாம் மொழிபெயர்த்த சில்லா—இ—மகுசூக் பற்றிய சுலோகம் குருகிரந்த சாஹிப்பில் இல்லையென்றும் அப்பகுதியில் மேற்கண்ட பாடல்களே உள்ளன என்பதையும் குறிப்பிடவில்லை. நான்கு சுலோகங்களும் பரீதின் வாழ்வில் நடந்த சில நிகழ்ச்சிகளோடு தொடர்புடையனவே. கடும் நோன்பு நோற்றபோது ஒருநாள் அவர் தம்மைத்தாமே தலைகீழாகத் தொங்கவிட்டுக்கொண்டார்; அவரது உடல் தளர்ந்து மெலிந்து எலும்புக் கூடாயிற்று; அவர் தலையில் பறவைகள் கூடுகட்டின. காக்கைகள் தசையைத் தின்னத் தொடங்கின. முதல் சுலோகத்தில் இவ்வளவு துன்பத்திற்கு ஆளான நிலையிலும் கடவுள் தன்பால் கருணைகாட்டவில்லையே என்னும் வருத்தத்தைத் தெரிவிக்கிறார். இதைவிடவும் மிகப்பெரிய நோன்பை நோற்க முடியுமா என்று அவர் வியக்கிறார். 90—ஆவது சுலோகமும் இதே கருத்தையே பேசுகிறது. முதலில் காட்டிய பாட்டின் சற்றே திருத்தம் பெற்ற வடிவம் இது [முதற் சுலோகம் கிரந்த சாஹிப்பில் இல்லை]. ஆனால், 91,92—ஆவது சுலோகங்கள், அதே கருத்தின் விரிவாக்கமே. இங்கே நாம் காண்பது ஏமாற்றமல்ல; நம்பிக்கையின் வெளிப்பாடு. பரீது காக்கைகளைக் கொத்தவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறார். ஏனெனில் தன் நேயத்திற்குரிய ஆண்டவனைக் காணமுடியும் என்னும் நம்பிக்கை அவருக்கு இருக்கிறது. அனுபூதி மொழிகளில் கூறினால் அவருக்கு இறைவனோடு ஒன்றமுடியும் [வஸில்] என்னும் நம்பிக்கை இருக்கிறது. எனவே, தம் உடல் வெறும் எலும்புக்கூடாகக் குன்றிய நிலையிலும், தசைகள் துண்டு துண்டாகக் கிழிந்துபோன நிலையிலும் அகமனத்துள்

சுடர்விட்டுக்கொண்டிருந்த ஆன்மீகக் கனல் அணையாமலே இருந்தது: கடவுளைச் சந்திக்க முடியும் என்னும் எண்ணம் உறுதியாகவும் அழிக்க முடியாததாகவும் இருக்கிறது. கடைசி சுலோகத்தில் [93] பரீது காக்கையை நோக்கி இறைவன் உறையும் தம் இதயத்தைத் தீண்டற்க என்று இரந்துவேண்டுகிறார். இதயமே இறைவனின் வாழிடம்; அது போற்றப்படல் வேண்டும். தம் கண்களைக் காக்க வேண்டும் என்று அவர் மன்றாடுகிறபோது. கடவுளைச் சகுணவடிவில் காணமுடியும் என்று நம்புகிறார்; கடவுளின் நிர்குண வடிவமே அவரது இதயத்திற்கு இனிதாக இருக்கிறது. மேலே காட்டிய நான்கு சுலோகங்களும் அனுபவத்தாலும் மொழி நடையாலும் ஒன்றோடொன்று உறவுகொண்டு விளங்குகின்றன. அவை எழுதப்பட்டிருக்கும் முறைகூட ஒன்றாகவே உள்ளது. இவற்றை எழுதியவர் ஒருவரே என்னும் உண்மை தாமாகவே பெறப்படுகிறது. இந்த ஞானியும் கவிஞரும் ஒரே தனிமனிதரே என்பது புலனாகிறது. மர ரொட்டித்துண்டுபற்றியும் சில்லா—இ—ஷாகரால் எழுதப்பட்டதே என்பதையும் அவை அவருடைய சொந்த அனுபவத்தின் வெளிப்பாடே என்பதையும் ஒத்துக்கொள்ளும் மக்காலிஃப் மேற்கொண்டு 91,92,93—ஆவது சுலோகங்களை இரண்டாவது பரீதுதான் எழுதினார் என்று சொல்வது நமக்கு வியப்பை உண்டாக்குகிறது. அவர் ஏன் இந்த முடிவுக்கு வந்தாரென அவரால் கூற இயலவில்லை: தன்வரலாற்றுத் தகவல்கள், மொழியியல் செய்திறன்கள் ஆகியனவற்றின் அடிப்படையில் கிட்டும் அகச்சான்றுகள் இச்சுலோகங்களின் ஆசிரியர் யார் என்பதை நமக்கு ஐயமற உணர்த்துகின்றன.

இந்த சர்ச்சையோடு தொடர்புடைய மற்றொரு கருத்தையும் நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். அராபியம், பாரசீகம், இந்திவி, பஞ்சாபி முதலிய மொழிகளில் எழுதப்பட்டு இப்போதும் வழக்கிலுள்ள சில நூல்கள் பாபா பரீது ஒரு கவிஞரே என்பதைத் தெளிவாக உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவில் அனுபூதி வளர்ச்சிபற்றி ஆய்வுசெய்த அறிஞர்களும் இதை நிறுவியுள்ளனர். சிஸ்டி சில்சிலா பரீதின் பாடல்களுக்கு இடம் தந்துள்ளன. இப்பாட்டுமரபு நன்கு வேரூன்றியுள்ளது. மேலும், செய்கு இப்ராஹிம் பிறப்பதற்குச் சுமார் நூற்றைம்பது ஆண்டுகட்கு முனனர் எழுதப்பட்ட சியார்—உல்—அவுலியா என்னும் நூலில் காணப்படும் பஞ்சாபி மொழியிலமைந்த ஓர் ஈரடிக் கண்ணி அதுபோன்ற செய்யுட்கள்

அவர் காலத்திற்கு முன்னரே வழக்கிலிருந்துவந்தன என்பதை மெய்ப்பிக்கின்றது. பாரசீக மொழி ஆட்சிக்கட்டிலில் இருந்தோரின் ஆதரவைப் பெற்று வளர்ந்தமையால், இப்பாடல்கள் மக்களிடையே செல்வாக்கை இழந்து பின்னுக்கு ஒதுக்கப்பட்டன. கிராம மக்கள் பொழுதுபோக்காகப் பாடுகிற அளவுக்கே அவை நிலைத்து நின்றன. அப்பாடல்கள் குருகிரந்த சாஹிபில் இடம்பெறுகிறவரை யாருமே அதனுடைய பெருமையைப் புரிந்துகொண்டு போற்றினார்கள் என்று சொல்வதற்கில்லை. இவையனைத்தும் பரீது ஒரு கவிஞர் என்பதையும் அவர் பஞ்சாபியிலும் பிற மொழிகளிலும் பாடல்கள் புனைந்தார் என்னும் கருத்தினை உறுதிப்படுத்தவே செய்கின்றன. ஆனால், பரீது சானி பாடல்கள் எழுதினார் என்று யாராவது சொல்லியிருக்கிறார்களா? சிஸ்டி சில்சிலா அப்படி ஏதும் கூறவில்லை. பரீது சானி ஒரு கவிஞர் என்றும் அவர் பாடல்கள் புனைந்தாரென்றும் நிறுவுவதற்கான சான்றுகள் எங்குமே இல்லை. பாபா பரீது உருவாக்கிய சூஃபிக் கவிதை மரபு அவருக்கு முன்னூறு ஆண்டுகட்குப் பிறகும்கூட ஓர் உயிரோட்டமுள்ள நடைமுறை இயக்கமாக ஆகாமையை நாம் இங்கே எண்ணிப்பார்த்தல் வேண்டும். வாரிஸ் ஷா போன்ற புகழ்பெற்ற சூஃபிக் கவிஞர்களும்கூட பாபா பரீதே முதல் சூஃபிக் கவிஞர் என்று போற்றிப் புகழ்ந்துள்ளனர். ஆனால், யாருமே பரீது சானியின் பெயரையோ, படைப்புகளையோ எங்கும் குறிப்பிட்டதில்லை. இன்றும்கூட ஆஜ்மீரிலுள்ள முனு—உத்—தீன் தர்க்காவிலும், தில்லியில் உள்ள நிஜாமுதீன் அவுலியாவிலும் பாபா பரீதின் பாடல்கள் பாடப்படுகின்றன; பரீது சானியின் பாடல்களை யாரும் பாடிக்கேட்டதில்லை.

சில திறனாய்வாளர்கள் இப்படியும் சொல்கிறார்கள்: பரீது அராபிய மொழியிலும் பாரசீக மொழியிலும் நிறைபுலமை படைத்தவர். அப்படிப்பட்ட ஒருவர் இச்சுலோகங்களை பஞ்சாபி மொழியில் இவ்வளவு கற்பனை வளம்படப் பாடியிருக்க முடியுமா என்பதே அது. அரசாங்க மொழியும் அறிஞர்களின் மொழியுமாக பாரசீக மொழியே ஆதிக்கம் பெற்றிருந்த காலத்தில், பரீது பஞ்சாபி மொழியை இந்த அளவுக்கு ஆர்வத்தோடு கற்றுப் புலமைபெற்றிருக்க முடியுமா என்றே அவர்கள் ஐயுறுகிறார்கள். பரீதின் பாட்டனார் பரீது பிறப்பதற்கு முன்பாக ஐம்பது ஆண்டுகட்கு முன்னரே, இந்தியாவிற்கு வந்துவிட்டார். பரீது கல்விகற்றது கொத்தவாலிலும் மூல்தானிலுமே; மேலும் அவர் பஞ்சாபில் தொண்ணூறு ஆண்டுகள்

வாழ்ந்திருக்கிறார். இதையெல்லாம் நாம் நினைவுகூர்ந்தால், அவர் மக்கள் பேசும் பஞ்சாபி மொழியில் புலமை பெற்றிருந்தார் என்னும் செய்தி நமக்கு வியப்பூட்டுவதாய் இருக்காது. மேலும் ஒரு ஸூஃபி என்னும் நிலையில், அவர் பொதுமக்களுடனேயே பேசினார்; மன்னரின் அவைக்களங்களைவிட்டு அவர் விலகியே வாழ்ந்தார். அவர் தம் கருத்துக்களைப் பரப்ப பஞ்சாபி மொழியின் முல்தானியக் கிளைமொழியைப் பயன்படுத்த வேண்டியிருந்தது. அவருள் கனன்றுகொண்டிருந்த கவிதைக் கனல் அவர் அறிந்த இளமைக்கால மொழியில்தானே வெளிப்பட முடியும்? அவர் பயன்படுத்திய படிமங்கள் அவர் வாழ்ந்த இடத்தின் சூழலை ஒட்டித்தானே அமைந்திருக்க முடியும்? இவ்வாறு நினைக்கத் தடையேது? காலப்போக்கில் இச்சுலோகங்கள் தலைமுறைதோறும் செவிவழியாகத் தொடர்ந்து வழங்கியபோது பாடலின் மொழியமைப்பு திருத்தம் பெற்றிருக்கலாம்; மாற்றப்பட்டிருக்கலாம். முன்னூறாண்டுக் காலத்தில் சில புதிய செய்யுட்கள் அவற்றோடு இணைக்கப்பட்டிருக்கலாம்; அல்லது பழஞ்செய்யுட்கள் புதுக்கப்பட்டிருக்கலாம். இங்ஙனம் நிகழும் சாத்தியம் இருந்திருக்கலாமல்லவா? அப்பாடல்கள் எழுத்து வடிவம் பெற்றபோது காலத்தோடு ஒட்டிய வளர்ச்சிக்கு ஏற்ப மொழியமைப்பில் திருந்திய வடிவம் பெற்றிருக்க வாய்ப்புண்டு. ஆனாலும், பாடல்களின் வெளியீட்டுமுறை, நடைநலம், நுவல்பொருள் அனைத்தும் ஒன்றாகவே உள்ளன. அவற்றில் காணப்படும் ஆன்மவேட்கையும் ஒன்றாகவே உள்ளது. முல்தானிய, அராபிய, பாரசீக மொழிச்சொற்களின் கலப்புநிலையும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கிறது. அப்பாடல்களின் இசையமைதி பஞ்சாபி நாட்டுப்பாடல் இசையிலிருந்தும், அவற்றில் காணப்படும் உவமைகள் சிற்றூர் வாழ்க்கையிலிருந்தும் பெறப்பட்டன என்பதும் உறுதி. பெரும்பாலான சுலோகங்கள் முல்தான் பகுதிவாழ் மக்களின் சமய—கலாச்சார வாழ்வோடு தொடர்புடையன. பரீதின் வாழ்க்கை வரலாற்றை ஆழமாகக் கற்று, அவரது பாடல்களின் நுவல்பொருளை இணைத்து நோக்கினால் இப்பாடல்கள் பாபா பரீதினால் எழுதப்பட்டனவே எனும் முடிவுக்கு வருவதைத் தவிர வேறு வழியில்லை.

இனி, இப்பாடல்கள் குரு அர்ஜுன் தேவ் அவர்களால் குருகிரந்த சாஹிபில் சேர்க்கப்பட்டதன் அடிப்படையில் எழுந்த சர்ச்சைகளைக் காண்போம். சீக்கிய குருமார்களின்

சமயப்பொறுமையும், தாராளமான நோக்குமே அவர்கள் தம் புனித நூலில் ஓர் இஸ்லாமிய ஞானியின் பாடல்களைச் சேர்க்கக் காரணம் எனலாம். அவர்கள் இப்பாடலைப் புனிதமுடையதாகக் கருதினார்கள்; தம் குருமார்களின் போதனைகளோடு இவற்றையும் இணைத்து அவற்றிற்கோர் புனிதத்தன்மையைத் தந்தார்கள். மற்ற போதனைகளை எங்ஙனம் பயபக்தியோடு ஓதிவந்தார்களோ, அதே மரியாதையோடு இவற்றையும் ஓதினார்கள். இப்பாடல்களைக் கிரந்த சாகிபில் சேர்த்தமைக்கும், குருநானக்கிற்கு முந்திய பின்னைய குருமார்களைப் பற்றி எழுதியமைக்கும் காரணம் உண்டு; நல்லன எங்கிருந்தாலும் அவற்றை ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தைத் தம் சீடர்கள் பெறவேண்டுமென்றே சீக்கிய குருமார்கள் விழைந்தனர்.

குருகிரந்த சாகிபில் 4 ஷாபத்துகளும் [பக்திப் பனுவல்கள்] 114 சுலோகங்களும் இடம்பெற்றுள்ளன. சரியாகச் சொன்னால், 'பரீதின் சுலோகங்கள்' என்னும் தலைப்பில் 130 சுலோகங்கள் உள்ளன. அவற்றுள் 18 சுலோகங்கள் பரீதின் பாடல்களுக்கு வேறு சில குருமார்கள் கூறிய வியாக்கியானங்களாகும். பஞ்சாபி மொழியில் கிடைக்கும் பரீதின் அனைத்துச் சுலோகங்களும் குர்பானியில் இடம்பெறவில்லை என்பதையும் இங்கே சொல்லியாக வேண்டும். குரு அர்ஜுன் தேவ் எல்லா பகத்துக்களின் எழுத்துக்களையும் இணைத்துக்கொள்ளவில்லை; அவற்றுள் சிலவே கிரந்தசாகிபில் இடம்பெற்றுள்ளன. அவர் சிலவற்றை மட்டுமே தேர்ந்தெடுத்திருக்கிறார்; அதை எழுதியவர் யாரென ஆராய்ந்து தெரிவு செய்தே குர்பானியில் இடந்தந்திருக்கிறார். உண்மையில், சீக்கிய மதத்தின் நிறுவனராகிய குரு நானக்கின் பாடல்கள்கூட விடுபட்டிருக்கின்றன. பகத்துக்களின் பாடல்களிலும் சிலவற்றை மட்டுமே தெரிவு செய்திருக்கிறார்; துளசிதாசர், மீராபாய் போன்றோர் கட்டி வளர்த்த பக்தி இயக்கத்தின் எத்தனையோ பகத்துக்கள் அவற்றில் இணைக்கப்படவில்லை.

குரு அர்ஜுன் தேவ் குருகிரந்த சாஹிபைத் தொகுத்தபோது, குருநானக்கை பாக் பத்தானில் சந்தித்தது செய்கு இப்ராஹிம் அவர்களே என்னும் உண்மையை நன்கு அறிந்தவராகவே இருந்தார். குருநானக்கின் பயணங்கள் பற்றிய முழுஉண்மைகளும் குரு அர்ஜுன் தேவுக்குத் தெரியும். இரண்டாவது குரு, குரு அங்கத தேவ் தொகுத்தளித்த வாழ்க்கைச் சரிதத்திலும் இவை இடம்பெற்றுள்ளன. குரு அர்ஜுன் தேவ் படியெடுக்கும் எழுத்தர்களாக

நியமித்துக்கொண்ட பாய் குர்தாஸ், பாய் சாந்த்ராம், பாய் ஹரியா, பாய் சுகா முதலியோர் மிகச்சிறந்த அறிஞர்களாவர். அவர்கள் எந்த வழுவும் நேர்ந்துவிட இடம்தந்திருக்கமாட்டார்கள். குருகிரந்த சாகிபில் இடம்பெற்றுள்ள ஒவ்வொன்றும் அதன் ஆசிரியர் யார் என்று நிச்சயிக்கப்பட்ட பின்னரே சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். பரீது சானிதான் இப்பாடல்களின் ஆசிரியர் என்று குரு அர்ஜுன் தேவுக்குத் தெரிந்திருக்குமாயின் அவர் அதை வெளியிடாமல் இருந்திருக்கமாட்டார். அவரே ஒரு கவிஞர், அறிஞர்; அவர் எத்தகைய தவறான தகவல்களும் தம் நூலில் புக இடந்தந்திருக்கமாட்டார். நிறைந்த பொறுப்புணர்ச்சியோடுதான் அவர் கிரந்த சாஹிபைத் தொகுக்கும் முயற்சியை மேற்கொண்டார். அவர் தமக்குக் கிடைத்த எல்லாத் தகவல்களையும் கொண்டு ஒவ்வொன்றையும் இது சரிதானா என்று நிச்சயித்துக்கொண்டே செயல்பட்டார். இக்கிரந்தத்தில் இடம்பெறத் தகுந்தது என்று கருதிய ஒவ்வொன்றையுமே ஒருமுறைக்கிருமுறை நன்கு ஆராய்ந்து நிச்சயப்படுத்திக்கொண்ட பின்னரே செயலில் இறங்கினார். அவரைப்போன்ற ஞான—அறிஞரே இப்பாடல்கள் பாபா பரீதின் பாடல்கள் என்று ஏற்றுக்கொண்ட பின்னர் அதைப்பற்றிய வீண் விவாதங்கள் எதற்கு?

இது போன்ற சர்ச்சைகளை மூட்டைகட்டிப் புதைத்துவிடவேண்டும்; அதற்கு இதுவே சரியான நேரம் என்கிற குறிப்போடு நாமும் இவ்வாதத்தை முடித்துக்கொள்வோம்.

## இயல் : நான்கு

# ஒரு ஷரியத் கவிஞர்

சூஃபிசம் என்பது இஸ்லாமிய இறையியல் சார்ந்தது. அது 'ஷரியத்' எனப்படும் இறைச்சட்டத்தை அடிப்படையாய்க் கொண்டது. தொடக்ககால வளர்ச்சிப் படிநிலையில் அது திருக்குர்ஆனில் கூறப்படும் வழிபாடுகள், நோன்புகள், புனிதயாத்திரைகள், மற்றும் சமயம் சார்ந்த சட்ட ஒழுக்கநெறிகள் போன்ற குரானியக் கட்டளைகளையே பெரிதும் வலியுறுத்தியது. பின்னர் வளர்ச்சிப்போக்கில் அது பாரசீக இந்தியச் சிந்தனைகளின் செல்வாக்கிற்கு ஆட்பட்டு, இந்தியக் குறிக்கோளியலில் உள்ள சில கூறுகளைத் தன்னுள் கிரகித்துக்கொண்டது. அதன் மிக முக்கியமான கோட்பாடு கடவுளோடு ஒன்றிநிற்றல் என்பதே. முன்னர் கூறியவாறுபோல, தொடக்ககாலச் சூஃபிகள் கடும்நோன்பிகளாக இருந்தனர்; செல்வத்தையும் உலகியல் முன்னேற்றங்களையும் தாமே விரும்பித் துறந்தனர். இடைக்கால நிலப்புரபுத்துவ சமுதாய அமைப்புக்கு எதிராக அது கடுமையாகச் செயற்பட்டது; இன்ப வேட்கையான வாழ்வையும் ஆகுலங்களையும் அது மறுத்தது. எளிமை சகோதரத்துவம்' போன்ற, திருக்குர்ஆன் கட்டளைகள் செம்மையாகப் பின்பற்றப்படவில்லையென உணர்ந்த சூஃபிகள் சுல்தான்களிடமிருந்தும் மாமன்னர்களிடமிருந்தும் மாறுபாடுகொண்டனர்; ஆன்மீக வளர்ச்சிக்காகத் தம்மை அர்ப்பணித்துக்கொள்ளும் நினைவுடன் உலகியல் நிலையிலிருந்து ஒதுங்கிநின்றனர். அன்பின் வாயிலாகவே இறைவனோடு ஒன்றும்நிலையை எய்தமுடியுமென அவர்கள் நம்பினர்; இதையே 'தரீக்கத்' என்றனர். 'தரீக்கத்' என்றால் அன்புவழி என்பதே பொருள். ஒரு மீப்பெரும் களிப்புநிலையில் இறைநனவோடு நின்றுபெறும் அனுபவமே சூஃபிசத்தின் சாராம்சமான தத்துவம் எனலாம். மேலும், மிஸ்டிக்குகள் என்னும் இறையியலார் தம்மைக் கடவுளோடு ஒன்றுபடுத்தி உணரமுடியும் என்னும் நம்பிக்கையை சூஃபிகள் உறுதிப்படுத்திக் கூறினர். இக்கொள்கை 'வகாதத்—உல்—வாஜூத்'

[இறைஉயிர் ஒன்றுநிலை] எனப்படும். சூஃபிகள் இசையை ஊடகமாகக்கொண்டு உணர்வெழுச்சியையும் மீப்பெரும் காப்புநிலையையும் உருவாக்கி அதன் வாயிலாக இறையனுபவத்தைப் பெற முயன்றனர். சூஃபிசத்தைப் பரப்புவதற்காக எண்ணற்ற சில்சிலாக்கள் உருவாக்கப்பட்டன; பாரசீகத்தில் உருவாக்கப்பட்ட அந்த ஆசார அனுஷ்டானங்கள் வரலாற்றுக் கட்டாயத்தால் இந்தியாவுக்கும் மெல்லப் பரவிற்று.

இப்பின்னணியோடுதான் நாம் பரீதின் செய்யுட்களை ஆராய்தல் வேண்டும். நாம் முன்னர் குறித்ததுபோல், பரீதுதான் பஞ்சாபி மொழியின் முதற் கவிஞர். அராபியம், பாரசீகம் ஆகிய மொழிகளில் அவருக்கிருந்த புலமை, உணர்ச்சிவளம் செழுமிய கற்பனை ஆகிய இவற்றைக் கொண்டு, ஏறத்தாழ பண்படாத நிலையில் கிளைமொழியாகவே இருந்த பஞ்சாபி மொழியை ஆழ்ந்தகன்ற நுண்ணுணர்வுகளை வெளிப்படுத்தும் வல்லமைவாய்ந்த மொழியாக பரீது மாற்றியமைத்தார். பரீது முதல் சூஃபிக் கவிஞரும் ஆவர். அவர் பஞ்சாபி மொழியில் எழுதிய பாடல்கள் இதயம் முழுதும் பொங்கித் ததும்பிய இறையுணர்வினை அப்படியே கொட்டிக் கவிழ்ப்பதுபோல் விளங்குகின்றன. சிஸ்டி சில்சிலாஹ் என்னும் முறையை உருவாக்கிய மூப்பர் என்னும் நிலையில் பரீது சூஃபிசத்தை நடைமுறையில் பின்பற்றினார்.; மற்றவர்கட்கும் உபதேசித்தார்; எங்கெங்கும் பரப்பினார். மிக நுட்பமான சூஃபிசக் கோட்பாடுகளைத் தெளிவாக வெளிப்படுத்தற்கேற்ற ஒரு மொழியையும் மரபுச் சொற்களையும் அவர் படிப்படியே உருவாக்க வேண்டியிருந்தது. அதேசமயம் அது மக்கள் மொழியாகவும் இருக்கவேண்டியிருந்தது. ஏனெனில் சூஃபிகள் தம் கருத்துக்கள் சமுதாயத்தில் உள்ள உயர்ந்தோர் குழாத்தை மட்டுமன்றி அனைத்துமட்ட மக்களையும் சென்றுசேர வேண்டுமென விழைந்தனர். எனவே, அவர் முல்தானி பஞ்சாபியின் பக்கம் தம்கவனத்தைத் திருப்பினார்; அதுவே அவர் இளமைக் காலத்தில் பயின்ற மொழியாகும். உலகியல் நாட்டத்திலிருந்து மககளைத் திருப்பி இறைநாட்டமுடையோராய் மாற்றும் வகையில் அம்மொழியில் அவர் படிமங்களையும் குறியீடுகளையும் படைத்தார். அவையெல்லாம் கிராமிய வாழ்வுப் பின்ணியிலிருந்தே பெறப்பட்டவை.

வாழ்க்கை என்பது மனத்துயரம், கவலை, வருத்தம், தோல்வி ஆகிய அனைத்தாலும் ஆனது. குழந்தைமைப் பருவம், குமரப்பருவம், முதுமைப் பருவம், மரணம் என்பனவே வாழ்வின்

படிநிலைகள். மனிதன் மனக்கவலைகளைத் தவிர்க்கவும், உடற்பிணிகளிலிருந்தும் அதன் உடன் விளைவுகளான துயரம், தாங்கொணா இன்னல், ஆகியவற்றினின்று விடுபடவும் விரும்புகிறான். அவன் முதுமையையும் அதன் விளைவான உடல்நலிவு, மெலிவு, நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டே வரும் கட்டுப்பாடுகள், முடிவற்ற அசௌகரியங்கள் அனைத்தையும் அவன் வெறுக்கிறான். மரணம் என்பது புதிரும் அச்சமும் தரும் வருகையாய் இருக்கிறது. மரணமே வாழ்வின் முடிவென்பதையும், யாரும் அதனின்று தப்ப முடியாதென்பதையும் அவர் அறிவார். ஆனால், மரணத்தின் தன்மையும், அதற்குப் பிறகு என்ன நிகழ்கிறது என்பதும் என்றென்றும் விடைகாண முடியாதனவாகவே உள்ளன. துன்பம் துயரங்களிலிருந்து தப்பிக்க விழையும் மனிதன் அருட்தொண்டர்களையும் மெய்யுணர்வு பெற்ற அறிவர்களையும் நாடுகிறான்; வழிபாடு செய்யக் கற்கிறான். வழிபாடு ஓரளவு உளநிறைவைத் தருகிறது; ஆனால், விரைவிலேயே அது ஒரு சடங்காக மாறிப் புனிதமிழந்துபோகிறது; எந்த அமைதியை நாடி அவன் வழிபட்டானோ அந்த அமைதி கிட்டாமலே போய்விடுகிறது. இந்த நிலையில்தான் கூருணர்வுடைய ஆன்மா புலனுகர்வுக்கப்பாலான அமைதியை நாடுகிறது. புறவுலகைத் துறந்து தனக்குத்தானே உள்முகமாக நோக்கி, ஆன்மீகப் பயணத்தைத் தொடங்குகிறது. எல்லாம் கடந்து நிற்கும் இறைவனோடு ஒன்ற விழைகிறது.

மனிதவாழ்வின் குறுமையைச் சரியாகப் புரிந்துகொண்ட பரீது கணத்தில் அழியும் வாழ்வின் தன்மை, மரணம் என்னும் அழிபாடு, இழப்புகள், சோகங்கள், உலகியல் வாழ்வின் பொருளற்றதன்மை, மனிதனுக்கமைந்த இழைக்கப்பட்ட வாணாள் ஆகிய சில கருத்துக்களையே திரும்பத்திரும்பப் பாட்டாகப் பாடினார். மரணத்தைப் பற்றி அடிக்கடி நினைவுகூர்வது வாழ்வின் பயனற்ற தன்மையை விளக்கிக்காட்டியது என்பது உண்மையே. எனினும், அந்நினைவே திரும்பத்திரும்ப எழுந்து வாழ்வில் ஒருவகையான பற்றின்மையைத் தோற்றுவிக்கக்கூடாது என்பதற்காக அதைச் சமன்பாடு செய்கிறாற்போல் பக்தியுணர்வு பற்றியும் பேசினார்; இது வாழ்வில் நம்பிக்கையை உண்டாக்கிற்று. இறைவனோடு ஒன்றிநிற்றலன்றோ வாழ்வின் முடிந்த முடிபான பயன்? ஒருபுறம் தன்னல மறுப்பு, கடும்துறவு பற்றிப் பேசினாலும் இறைவனின் படைப்பில் ஈடுபாட்டையும் அவர் மற்றொருபுறம் உருவாக்கினார்.

எளிமை, துறவுவாழ்க்கை என்பன பற்றியே அவர் தொடர்ந்து பாடினார். உண்மை, பொறுமை, பாவத்தினின்று விடுவித்துக் கொள்ளல் முதலிய நற்பண்பு – நற்செயல்களையே மிகுதியும் வலியுறுத்தினார். அவரது ஆழமான உந்துணர்வுகள் தெய்வீகக் காதலையே பாடுமாறு தூண்டின. இறைவனை அடைய அஃதொன்றே வழி என்று அவர் வருணித்தார். ஆனால், நாம் பின்னே பார்த்தால் அப்பரிபூரண நிலையை அடைவதில் அவருக்குத் தடையிருந்ததென்றே அறிகிறோம். மன்சூர் குறிப்பிடும் 'அனந்தக்' என்பதே இறுதியான பரிபூரணநிலை. அந்நிலையில் சுவர்க்கம் பற்றிய ஆசையோ, நரகம் பற்றிய அச்சமோ இருக்காது. புறச்சடங்குகளும், அனுஷ்டானங்களும் பொருளற்றதெனக் கருதப்பட்டு ஒதுக்கப்பட்டுவிடும். எல்லாவற்றையும் மறந்து நிற்கும் எல்லையற்ற பேரின்ப உணர்வு மட்டுமே அப்போது எஞ்சி நிற்கும். புல்லஹ் ஷா அவரது பாட்டில் குறிப்பிடும் நிலை அதுவே. பரீதின் தெய்வீகக் காதலுணர்வு உலைவில்லாதது; தடுமாற்றமற்றது; யாராலும் பின்பற்றிப் பாடமுடியாதது. உள்ளத்தைத் தொடுகிற உணர்வாக அது அவரது பாட்டில் மலர்ந்து மணம் பிலிற்றுகிறது. தெய்வீகக் காதலில் ஏற்படும் பிரிவுநிலையும், காணவேண்டும் என ஏக்கற்று நிற்கும் ஆசைநிலையும், மானிடக் காதல் என்னும் குறியீட்டு நிலையில் விளக்கம் பெறுகின்றன. எனவே, அவை புதிதாம் தன்மையோடு பொலிகின்றன.

பஞ்சாபி மொழியில் பாடப்பட்டுள்ள சூஃபிக் கவிதைகள் மூன்று படிநிலைகளைக் கொண்டன. முதற்படிநிலையின் பிரதிநிதியாக விளங்குபவர் பரீது. இம்முதற்படிநிலையில் ஷரியத் என்னும் இறைச்சட்டங்கள் மிகப் புனிதமுடையவையாகப் போற்றப்படுகின்றன. வேறு எதையும்விட அவையே முக்கியத்துவம் வாய்ந்தவை. இறுதி நிலையான ஆன்மீக அனுபவத்திற்கு அடித்தளமாக இருப்பவையும் அவையே. இஸ்லாமியப் பண்பாட்டினை சூஃபிசமாக ஆக்கி அதை எங்கும் பரப்பினார். இதன் இரண்டாவது படிநிலை ஷா உசேன் என்பாரால் உருவாக்கப்பட்டது. அவர் இறைச்சட்டங்களை மனத்தளவில் பொறுத்துக்கொண்டார். சரியாகச் சொல்லப்போனால், அவற்றை நிராகரித்தார் என்றுதான் கூறவேண்டும். அவர் இந்தியச் சிந்தனை மரபில் காலூன்றி நின்று அதே தத்துவப் போக்கில் பேசினார். அவர் 'கர்மா' 'சம்சாரம்' [பிறப்பு இறப்பென்னும் சுழல்வட்டம்] என்பன பற்றியெல்லாம் பேசினார். சிலவேளைகளில் ஆடினார்; பாடினார்; குடித்தார்; ஒரு மிகுபெருங் களிப்புநிலையை எட்டுமளவு குடியில் ஒரேடியாக மூழ்கினால் அக்களிப்பு நிலையில் இறைவனின்

கூட்டத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தார். மூன்றாவது நிலை: புல்லஹ் ஷாவால் தோற்றுவிக்கப்பட்டது. அவர் சூஃபிசத்தின் முகட்டு நிலையைக் கவிதையின் மூலம் எட்டினார். இறைச்சட்டங்களைப் புறக்கணித்தார்; எள்ளி நகையாடினார்; அவர் சொர்க்கத்துடனோ நரகத்துடனோ எந்தத் தொடர்பும் கொள்வதற்கு விரும்பவில்லை. காதற் களிப்புநிலை வாயிலாகவே அவர் தெளிபொருட்காட்சி பெற்றார். பண்டைய வேதாந்தச் சிந்தனைகளோடு தம்மை முற்றாக அடையாளம் காட்டிக்கொண்டார்; தம்மைச் சுற்றியுள்ள அனைத்தினுள்ளும் பரம்பொருளைக் கண்டார். அவர் இராமனையும் பாடினார்; கண்ணனையும் பாடினார்; முகம்மதையும் பாடினார். மதம்சார்ந்த எந்தப் பாகுபாடுகளையும் ஏற்க மறுத்தார். கவிதைச் சாதனையே ஆன்மீகச் சாதனை என்று கொண்டால் அவர்தான் சூஃபிக் கவிஞர்களிடையே மேம்பட்டு நிற்கிறார்.

பரீதின் செய்யுட்களை நாம் சற்று விரிவாக ஆராய்வதற்குமுன் 'ஷரியத்' என்னும் இறைச்சட்டங்கள் பற்றிச் சிலவற்றை அறிந்துகொள்வது இங்குப் பொருந்துவதாகும். முன்னர்ச் சுட்டியதுபோல ஷரியத் என்பது வாழ்வியல் ஒழுங்கு; அது சமயம், ஒழுக்கம், சமூகம், அரசியல், பொருளியல் ஆகிய அனைத்துக் கூறுகளையும் தழுவிநிற்பது. மதம் என்னும் அடித்தளத்தில் நிற்கும் எந்த இஸ்லாமியரும் கடவுள், தேவதைகள், குர்ஆன் இறைத்தூதர், உயிர்த்தெழுதல், நியாயத்தீர்ப்பு நாள் ஆகிய அனைத்திலும் நம்பிக்கை வைக்கவேண்டும். 'கலிமா' என்று கூறப்படும் தொழுகையிலும் உறுதியான பற்றுவைக்க வேண்டும். 'கலிமா' என்பது ஒரு நாளைக்கு ஐந்துமுறை நடத்தப்படும் தொழுகையாகும். மேலும், அவர்கள் உண்ணாநோன்பை மேற்கொள்ள வேண்டும். மெக்காவிற்குப் புனிதயாத்திரை போதல் வேண்டும். தம் வருவாயில் பத்திலொரு பாகத்தைத் தானதருமங்களுக்காகச் செலவிட வேண்டும். அவர்களது சமுதாய வாழ்க்கை என்பது அடக்கம், மனநிறைவு, கருணை, நீதி, தூயவாழ்வு என்னும் அறவியற் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டும். அவர்கள் மனித சகோதரத்துவத்தையும் இறைவனோடு ஒன்றுவதையும் நம்பவேண்டும்.

பரீது, ஷரியத் என்னும் இறைச்சட்டங்களில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். அவற்றிற்கிணங்கத் தம் வாழ்க்கையை

அமைத்துக்கொண்டவர். அவர் தம் சீடர்களிடமும் தம்மைப் பின்பற்றி நடந்தோரிடமும் இறைச்சட்டங்களை வழுவாது கடைப்பிடிக்க வேண்டுமென வற்புறுத்தினார். ஆன்மீக வாழ்வின் மலர்ச்சிக்கு உதவுவது கருதி அவற்றைப் பெரிதும் மதித்தார். பிற்காலத்துச் சூஃபிகளைப்போல இறைச்சட்டங்களுக்கும் முடிந்த முடிபான ஆன்மீகத்துவத்திற்கும் இடையே அவர் எந்தவிதமான முரண்பாடுகளையும் காணவில்லை. மன்சூர்—அல்—ஹல்லாஜ் செய்த உயிர்த்தியாகம் இஸ்லாமிய உலகில் ஒரு சிக்கலை உருவாக்கிற்று. இறைச்சட்டங்களை வற்புறுத்தும் சமயமரபுக் கோட்பாட்டினரும் சமயவாதியின் ஆழ்மனத்தேவைகளை நிறைவுசெய்யும் சூஃபிச அருளியலாளர்களும் தம்முள் மாறுகொண்டு நின்றனர். எனினும், பரீது அவர்களுக்கிடையே ஒருமை காணமுயனறார். இறைச்சட்டங்களும் ஆன்மீக அனுபவமும் ஒரே உலகின் இருவேறு முனைகள் என்று அவர் கருதினார். ஒன்று அதன் தொடக்கமுனையாகவும் மற்ற ஒன்று அதன் இறுதி இலக்காகவும் இருக்கிறது. தரீக்கத் என்பது காதல் நெறியெனில் ஷரியத் அன்றாட வாழ்வொழுங்கு எனலாம். ஒருசாரார் அனுபவம் கடந்த அறிவின் மூலதத்துவ ஆய்வில் ஈடுபட்டனர். மற்றொருசாரார் இயல்வன யாவும் இறைவனின் உருவே எனறு கருதி அனைத்திறைக்கொள்கையில் தோய்ந்தனர். இவ் இருசாராருக்குமிடையே பரீது இணக்கத்தை உருவாககினார் எனலாம். அவர் மனிதனிடத்தும் இயறகையிடத்தும் இறைவனைக் கண்டார். அவருடைய வரையறுத்த அனுபவ எல்லைக்குள் இறைச்சட்டங்களைக் கடைப்பிடிப்பதும் பக்தியுணர்வும் தம் அறிவுநிலை கடந்த இறையனுபவத்தால் ஒன்றனுக்கொன்று உறுதுணை புரிவதே என்பதைக் கண்டார். சிஸ்டி சில்சிலாவைத் தோற்றுவித்த காஜாமொய்தீன் சிஸ்டியின் கருத்துக்களுக்கு இவரது சிந்தனைகளும் பொலிவூட்டின. "இறைச்சட்டங்களைக் கடைப்பிடிப்பதில் பயபக்தியோடு முனைந்து நிற்போமாயின் நாம் தரீக்கத் என்னும் அடுத்த படிநிலையை எளிதில் அடையலாம்; பின்னர் அதனின்றும் முறையே மேல்நோக்கிச் சென்று மாரீஃபத்,

ஹகீகத் என்னும் படிநிலைகளை அடையலாம்" என்பதே அவர்தம் கருத்தாகும்.

நாம் இங்கு மேற்கொள்ளவிருக்கிற ஆராய்ச்சி பரீதின் நான்கு தன்னுணர்ச்சிப் பாடல்களையும் நூற்றிருபது சுலோகங்களையும் பற்றி மட்டுமே. இவை குருகிரந்த சாஹிபில் இணைக்கப்பெற்றிருப்பவை; முல்தானி பஞ்சாபியில் எழுதப்பட்டவை. இவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், நுண்மையும் நொய்மையும் அர்த்த பேதங்களும் நயநுட்ப வேற்றுமைகளும் கொண்ட இவற்றை அப்படியே ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்குப் பெயர்ப்பு செய்வது முடியாது. ஒவ்வொரு மொழியும் அதனதன் அளவில் தனிச்சுவைத்திறன் கொண்டதே. அது அம்மொழி பேசுவோரின் சமூகக் கலாச்சாரப் பின்னணியோடு இறுகப் பிணைக்கப்பட்டுள்ளது. அதன் படிமங்களும் குறியீடுகளும், நாட்டுப்புறவியலோடும் தொன்மவியலோடும் வரலாற்றோடும் தொடர்புபட்டு வண்ணப்பொலிவோடு விளங்குபவை; அது வெறும் மொழியின் சொற்பொருள் சார்ந்த செயற்பாடு மட்டுமன்று; அல்லது அச்செய்யுட்களின் கருத்தை உணர்த்துவது மாத்திரமன்று; ஒரு பெரிய இறையியலாரின்—அருளாளரின் சிந்தனை வெளிப்பாடு; கிளரதிர்வூட்டும் உணர்ச்சிகளின் வெளிப்பாடு. கிடைத்த சொற்களை மட்டுமே வைத்துக் கொண்டு அச்சொற்களின் இன்னோசையாலும் மாயவிந்தையாலும் செய்யப்படும் வெளிபபாடு. எனவே, அப்பாடல்களை மூலமொழியாகிய மூல்தானி பஞ்சாபியில் படிப்போர் பெறும் அனுபவமும், ஆங்கில மொழிபெயர்ப்பில் படிப்போர் பெறும் அனுபவமும் ஒன்றல்ல; மூல மொழியில் படிப்போர் பெறும் அனுபவம் பின்னையவர் பெறும் அனுபவத்தைவிட ஆழ்ந்தகன்றது. எனினும், நாம் அவரது பாடல்களில் அடியிழையாக ஓடும் அறிவுநெறிசார்ந்ததும் புலனுகர்வுக்கு அப்பாலானதுமான சில கருத்துக்களை உணர முயல்வோமாக.

முன்னர் கூறியதுபோல பரீது ஒரு சூஃபியாக இருந்தாலும், ஆன்மீக அனுபவத்தைத் தேடுவோராக இருந்தாலும்

அவர் இஸ்லாம் என்னும் விளைநிலத்தில் தோன்றியவரே. இறைவன் எல்லா உயிர்களினும் மேம்பட்டவர். அனைத்துச் சக்திகளும் உடையவர்; படைப்பவர்; அழிப்பவர்; காப்பவர்; ஆழங்காண முடியாதவர்; கங்குகரையற்றவர். அனைத்துள்ளும் ஒன்றாயும் உடனாயும் வேறாயும் இலங்குபவர். அவர் கருணைமிக்கவர்; நேர்மையானவர். நியாயத்தீர்ப்பு நாளன்று நற்குண நற்செய்கை உடையோரெல்லாம் அவரிடமிருந்து பரிசிலைப் பெறுகிறார்கள்; துறக்க இன்பத்தை நுகர்கிறார்கள். பாவம் செய்தோர் அனைவரும் கொடும் நரகில் தண்டிக்கப்படுகிறார்கள். பரீது 'ராக ஆகா' என்னும் பாட்டில், இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவை வருணிப்பதைக் கீழே காண்க:

யாருடைய மனம் கடவுள்மீது உண்மையிலேயே
ஈடுபாடு கொண்டுள்ளதோ
அவர்கள் மட்டுமே உண்மை பக்தர்கள்.
பொய்புகலும் நாவுடையோர் மனம்
போலியானது; இங்கும் அங்கும் தாவுவது.
கடவுட் காதலில் மூழ்கித் திளைப்போர் என்றென்றும்
உள்ளொளி கூடும் மெய்க்காட்சியில் திளைப்பர்.
இறைவனோடு மாறுகொண்டோர் நிலத்துக்குச் சுமையே.
கடவுள் யாரோடு தம்மை இணைத்துக்கொண்டுள்ளாரோ
அவர்களே உண்மையான பக்தர்கள்.
அவர்கள் பிறக்கும் போதே ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.
பழுமரம் போல அவர்கள் வாழ்வும் பயனுடையது.

அணுக முடியாத — எட்ட இயலாத — நீயே
அனைத்தையும் பேணுவை.
உன்னை அறிந்த மாசறு ட்சியாளரின்
திருவடிகளை நான் என் ன்றும் தொழுவேன்.
நீ மட்டுமே மன்னிப்பு வழங்குவை.
செய்கு பரீதுக்கு உன் பக்தியெனும் பொற்குவையை
அள்ளித்தா!

கடவுள் எலலாவிடத்தும் அனைத்துள்ளும் கலந்து நிற்பவர். சிந்தனையின் பிடிக்குள் அகப்படாது நழுவுகிறவர் என்றே பரீது கடவுளை வருணித்தார். படைக்கப்பட்ட எல்லாவற்றையும் பாதுகாப்பவர் இறைவனே. எனினும் அவர் யாராலும்

அணுகுதற்கரியர்; சிந்தையும் மொழியும் செல்லாத செய்மைநிலையில் நிற்பவர். அவரது அருளொளியில் குளித்து நிற்போரின் காலடிகளை முத்தமிடவும் பரீது ஒருபோதும் தயங்கார். உண்மையடியார் என்போர் இறைவனை முழுமையாக நேசிக்கிறவர்களே. பொய்யொழுக்கம் பூண்ட முரண்பாட்டினர் அடியாராகார். இறைவனை நினைந்து, இறைவனைப் பாடி, இறைத்தொண்டில் ஈடுபடுவோர்க்கே கடவுட் காட்சி கிட்டும். அவர் நினைப்பவர் மனமே கோயிலாய் கொண்டவர். உண்மையடியவரல்லாத பிறரெல்லாம் பூமிக்கு வெறும் சுமை போன்றவர்களே. உண்மையான தார்வேசர்கள் அன்பு நெறியில் நிற்பவர்; அவனருளாலே அவன்தாள் வணங்குபவர்கள். வாழ்வின் நோக்கம் நிறைவேறப் பெற்றோர் அவர்களே. பரீது தம் பாட்டின் முடிவில் இறைவனை விளித்துப் பேசுகிறார். பெருங்கொடையாளனே என்று அழைக்கிறார். பக்தி என்னும் பெருஞ் செல்வத்தை வாரித் தருக வள்ளலே என மன்றாடுகிறார்.

பரீது ஓர் அனைத்திறைக்கொள்கையாளர் என்னும் நிலையில் உலகஉயிர்கள் அனைத்துமாகவும் இறைவன் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறான் என்றே நம்புகிறார். எனினும், காடுகளிலும் வனாந்தரங்களிலும் தேவையில்லாமல் அலைந்து திரிவதை அவர் ஏற்கவில்லை. நெக்கு நெக்குருகி நினைபபவர் நெஞ்சுளே புக்கு நிற்பவரல்லவா அப்புனிதர்? அவரைத் தேட ஏன் அலைய வேண்டும்?

> ஷேவுமுட் புதர்கள் மிதிபட நீயேன்
> காட்டிலும் மேட்டிலும் கடுகி அலைகிறாய்?
> உனக்குளே இறைவன் உறைதல்காண் டிலையோ?
> வெறும்பாழ் வெளியில் தேடுதல் விரயமே!

இச்சுலோகம் இரு நிலைகளில் முக்கியத்துவம் உடையது. தங்கள் வீட்டையும் குடும்பச் சூழலையும் விட்டுவிட்டுத் தன்னந்தனியான இடம் நோக்கிச் சென்று தவம்மேற்கொள்வோரை பரீது இப்பாட்டில் கண்டிக்கிறார். மனிதர்களின் நடுவே தான் நாமும் வாழவேண்டும்; அங்ஙனம் வாழ்ந்துகொண்டே கடவுள் நாட்டத்திலும் தோய்ந்து நிற்க வேண்டும். இறைவன் மனிதர்களின் இதயத்தில்தான் இருக்கிறானெனில் அவனைக் காண அவர்கட்கு உதவுதல் வேண்டும்.

பரீதின் சுலோகங்களிடையே குரு அர்ஜுனுடையது ஒன்றும் காணப்படுகிறது. அப்பாடல் பரீதினை நோக்கி பேசுவதுபோல் பாடப்பட்டுள்ளது. உலக உயிர்களினூடே இறைவன் இருப்பதை அப்பாட்டு மிகத்தெளிவாக உணர்த்துகிறது.

ஓ பரீது!
அவனுள் அவையும் அவையுள் அவனும் உள்ளனர்
அவனன்றி வேறு இல்லா நிலையில்
உன்னைத் தீயோனென்று உரைப்பவர் யாரோ?

கடவுட் காதலில் உள்ளம் தோய்ந்து நிற்பவர் பரீது. சில வேளைகளில் அவர் வைத்திருக்கும் நம்பிக்கை ஒரோவழி தளர்ந்தபோதும் அவர் இறைத்தொண்டினை வற்புறுத்தத் தவறவில்லை. ஒரு மரத்திற்குரிய பொறுமையை எனக்குத்தா என்று இறைவனை நோக்கி அவர் வேண்டுகிறார்.

பரீது! நீ பரம்பொருட் குரிய தொண்டினை
ஒல்லும் வழியெலாம் உஞற்று; உளத்தில்
ஐயம் அகற்றுக; ஆய்வுழி தார்வேசர்
மரத்தின் பொறுமையை மனத்தே வேண்டுவர்.

வாழ்வின் அனைத்து இனிமைகளும் நஞ்சாக மாறினாலும் — வானம் துளங்கினும் மண்கம்பம் ஆயினும — பரீது இறைவனைத் தவிர வேறு யார்பாலும் செல்லார்; ஏனெனில் அவர் அவன்பால் கொண்டிருக்கும் நம்பிக்கை என்றும் அசைக்க முடியாதது.

நறவே ஒருக்கால் நஞ்செனா மாறினும்
உரைப்பது யாரிடம்? ஓஓ! பரீது
இறைவனே யன்றிநான் யார்க்கெடுத் துரைப்பேன்?

நயமான சொற்றொடர்களால் புனையப்பட்ட மற்றொரு சுலோகத்தில், பரீது இறைவனின் பண்புநலத்தினை பழுத்துக கனிந்த பேரீச்சம்பழத்தோடும், பெருக்கெடுத்தோடும் தேனுடனும் ஒப்பிட்டுப் பேசுகிறார். குறுகிய வாழ்நாளில, ஒவ்வொரு நாளும், நாம் பெறவேண்டிய இன்பத்தைச் சிறிதுசிறிதாக இழந்தே வருகிறோம் என்கிறார்.

கடவுள் என்பார் கனிந்த பேரீச்சை!
திரைகொழித் தோடும் தெள்ளுதேன் அருவி!
வாழ்நாள் மெல்ல வறிதே கழியும்முன்
நாடொறும் அவற்றின் நலத்தை நுகர்கவே!

இச்சுலோகத்திற்கு இப்படியும் ஒரு பொருள் கூறலாம்; வாழ்நாள் சிறிது; இழைக்கப்பட்ட ஒவ்வொரு நாளும் இறையின்பம் நுகர்வதற்கே உரியது; நாள்தோறும் இறைவனின் திருவடியை நினைவதன்மூலம் ஒவ்வொரு நாளையும் நாம் பயனுடையதாக்கலாம். இவ்வினிமை நயத்தான் அவர் பழுத்துக் கனிந்த பேரீச்சையோடும் தேனருவியோடும் ஒப்பிடுகிறார். குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமுதாய் விளங்கும் பேரின்ப அனுபவத்தைக் குறையுடையதும் தற்காலிகமானதுமான உலகியல் இன்பத்தோடு அவர் ஒப்பிடுகிறார். உலகியலில் நாம் இன்பமெனக் கருதுவதெல்லாம் ஒரு நிலையில் அதற்கு நேர்மாறாய்த் துன்பமாகவும் மாறலாம். முன்னொரு பாட்டில் நறவு நஞ்சாவது பற்றிப் பேசினாரல்லவா?

மனிதன் அமைதியை நாடி அலைவதையும், இந்த உலகத்தை வெற்றிகொள்ள விழைவதையும் பரீது உணர்ந்தே இருக்கிறார். மனத்தில் முழுமையான அமைதியைப் பெற முதற்கண் வேண்டப்படுவது மனத்தூய்மை; இம்மனத்தூய்மையே இறைவனிடம் நம்மை கொண்டு செல்கிறது என்று அவர் கூறினார். இறையனுபவம் ஒருமுறை கிட்டிவிடுமாயின் வானமும் மண்ணும் அவனுக்கு வசப்பட்டுவிடுகிறது.

உன்னைநீ ஒப்பனை செய்ய உன்னினால்
என்னிடம் வருக; வந்தபின் எல்லையில்
தேக்கும் மகிழ்ச்சியில் திளைப்பை; உனக்கு
வானமும் மண்ணும் வசப்பட்டு நிற்கும்.

கடவுளின் ஆணை, உயிருள்ள உயிரற்ற பொருள்களனைத்தையும் ஆட்டிப்படைக்குமெனப் பரீது விளக்கினார். யாரும் அவருக்கமைக்கப்பட்ட எல்லைகளைத் தாண்டிச் செல்லும் நெஞ்சுரம் பெற்றிலர். ஓராற்றை விளித்து அவர் கூறுவதைக் கேளுங்கள்;

ஓ ஆறே உன்கரைகளை உடைக்காதே! நீயும்
உன் இறைவனுக்குக் கணக்குக் காட்டத்தான்வேண்டும்
ஆகவே, ஆறே, உன் எல்லைகளுக்குள்ளேயே ஓடு! அதுவே
ஆண்டவன் கட்டளை!

கடைசியாக, நாம் பரீதின் சொந்த அனுபவம் ஒன்றையும் காண்போம். அவர் இறையனுபவத்தை நாடினார்; நுகர்ந்தார்; அது எத்தன்மைத்து என உணர்ந்தார். அந்நிலையில் அவ்வுணர்வே அவர் நெஞ்சிலிருந்தும் புதுப்பாட்டாகப் பொங்கிவழிகிறது:

கரும்பினும் கட்டிபட்ட பாகினும்
பருகு தேனினும் ஆதரு பாலினும்
இனியன் தன் அடைந்தார்க்கு ஈசனே.

பரீது தாம் அருந்திய இவ்வின்பத்தைத்தான் 'கஞ்சி ஷாகர்' என்று குறிப்பிடுகிறார்.

மேற்கண்ட செய்யுட்களிலெல்லாம் ஆழ்ந்த இறை நினைவு ஊற்றெடுப்பதை நாம் உணர்கிறோம். இறைவனின திருக்கையே உலக மக்கள் செல்லவேண்டிய நெறியை இதோவெனச் சுட்டிக்காட்டுகிறது. இயங்குதிணை இயங்காத்திணை என்னும் இருவகைப்பட்ட அனைத்திலுள்ளும் அவன் ஒன்றாயும் உடனாயும் வேறாயும் ஊன்றி நிற்கும் உண்மை புலப்படுகிறது. தார்வேசர்களை நோக்கி அன்புநெறியில் ஒழுகுமாறு அவர் அறிவுரை பகர்கிறார். சாமானிய மக்களை நோககி 'உங்கள் வாழ்வை நீங்களே இறையுணர்வால் அழகுபடுத்திக் கொள்ளுங்கள்' எனறு யோசனை கூறுகிறார். ஒரு பாட்டில் 'இறைவனையன்றி வேறொருவர்பால் சார்ந்து நிற்பதாக வாழ்க்கை அமையுமாயின் அது சபிக்கப்பட்ட வாழ்வல்லவா?' எனறு கேட்கிறார். இறைவனின் திருமுன் தன்னையே முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளும் சரணாகதி நிலையே அவரது பாடலகளில் இடம்பெறும் முக்கியமான அடிக்கருத்தாகும்.

ஒருமுகப்பட்ட தூயமனததோடு வழிபாடு செய்வதைப்பற்றிப் பேசும்போது முஸ்லீம்கள் ஒரு நாளைககு ஐந்துமுறை தொழுகைபுரிய வேணடுமென்கிறார் அவர். கை, முகம், கால்களை தூய்மை செய்து

கொள்ளாமல் வழிபாட்டில் கலந்துகொள்வோரை நாய் என்று கடிந்துரைக்கும் அளவுக்கு அவர் போய்விடுகிறார். இறைக்கட்டளைகளைப் பின்பற்ற வேண்டும் என்பதில் அவருக்கிருந்த உறுதியையே இது காட்டுகிறது. இறைவனின் தாளை வழிப்டாதாரின் தலையை அடுப்பில் விறகாகவைத்து எரித்துவிடலாம் என்று கூறுமளவுக்கு அவர் கடின சித்தராகிறார்.* இங்கேதான் பரீது தாம் ஏற்றுக்கொண்ட கொள்கையில் மிகவும் பிடிவாதமாக நிற்பதைக் காண்கிறோம்.

நாயினும் கீழோய்! நாடொறும் இறைவனை
நண்ணுதல் மறந்தனை, ஈதும்
நயத்தக்க தோகாண்; ஐமுறை ஒவ்வொரு
நாளும் தொழுகையைப் புரிக.
ஆயபே ரன்புடன் கால்முகம் கழுவி
ஆண்டவர் திருமுனே சென்று
'ஐயநீ எனக்கு அருள்புரி' கென்றே
அரற்றுக; அங்ஙனம் செய்யாப்
பேயரின் தலையை பிளக்கநீ வாளால்;
பெருமனார் அடிதொழார் சென்னியைப்
பெற்றிருப் பினும்என் பெரும்பயன்?
பிறங்கெரி விறகென அடுப்பில்
இடுதலே புரிக; அடுகல னேனும்
எய்திடும் உறுபயன் அதனால்.
ஓ! பரீது, இந்த உண்மையை நெஞ்சில்
உன்னியே வாழ்கநீ வாழி!

தேவதூதர்கள் இறைவனது கட்டளைக்குப் பணிந்து, தமக்கென வரையறுக்கப்பட்ட பணிகளைச் செய்வதாய் இஸ்லாம் நம்புகிறது. மேலும் மனிதர்களைத் தீய வழிக்கு இட்டுச்சென்று பழிபாவச்செயல்களைச் செய்ய வைக்கும் சாத்தானையும் இஸ்லாம் ஏற்கிறது. பரீதின் சுலோகங்களில் ஓரிடத்தில் சாத்தான் பற்றிய குறிப்பு வருகிறது.

---

* "எங்கள் பெருமான் உனை வணங்காத மூடர்தலை இகழ்விறகு எடுக்கும் தலை" என்னும் இராமலிங்கரின் திருப்பாட்டை இங்கு ஒப்பிட்டுக் காண்க.

இம்மனிதர்கள்
கூவி அழைப்பர்; கூப்பாடு போடுவர்
சாத்தான் புரியும் சாகசத் தாலே
தீநெறிப் படரும்இத் தீயோர்
தெய்வ வழிக்குத் திரும்புவது ஒல்லுமோ?

நல்லவர்களும் தீயவர்களுமான இவ்விறைத்தூதர் கூட்டத்தில் பரீது அடிக்கடி சுட்டிப்பேசுவது மரணதேவதை பற்றியே ஆகும். மரணம் என்னும் நுவல்பொருள் இவரால் விரிவாகப் பேசப்படுகிறது. காலங்காலமாகக் கல்லறைகளில் நியாயத்தீர்ப்பு நாளுக்காகக் காத்துக்கிடக்கும் உயிர்களையும், அவர்கள் தத்தம் தகுதிப்பாட்டிற்கேற்ப துறக்கத்திற்கோ நரகத்திற்கோ அனுப்பப்படுவதையும் பற்றிய பல குறிப்புகளை நாம் அவர் பாடல்களில் ஆங்காங்கே காண்கிறோம்.

பரீதின் பாடல்களில் அதிகமாகப் பேசப்படும் பாடுபொருள் மரணம். பிறக்கும் மனிதன் என்றாவது ஒருநாள் சாகவேண்டுமென்பதே விதிக்கப்பட்டிருக்கும் கொடுமையான விதியாகும். மரணம் என்றென்றும் அருகிலேயே இருந்து கொண்டிருக்கிறது; நாம் அவ்வுண்மையைப் புறக்கணிக்கக்கூடாது. கூற்றம் குதித்துய்ந்தார் ஈங்கில்லை. மரணநாளை நாம் விரும்பினாலும் மாற்றிவிட முடியாது. விதிக்கப்பட்ட நாளன்று மரணம் வருகிறது; ஒரு பறவையைப்போல் சட்டெனக் கீழ்நோக்கிப் பாய்ந்து தன் இரையைக் கொத்திகொண்டு போகிறது. பரீது கையாளும் ஓர் உவமையைக் காண்போம். ஆற்றங்கரையருகே தன்னை மறந்து திளைத்து விளையாடும் குருவியை வேட்டைப்பருந்தொன்று விருட்டென்று பாய்ந்து கொத்திக்கொண்டு போகிறது; பாவம், பறவையின் கதை முடிந்துபோகிறது.

ஆற்றங் கரையில் உவகையுடன்
ஆடிப் பறக்கும் குருவியொன்றை
வேட்டைப் பருந்து தன்அலகால்
வெடுக்கென்று கொத்திச் செல்கிறது!
குருவியின் ஆட்டம் முடிகிறது!
கோரப் பருந்து வெல்கிறது!
கடவுள் சித்தம் அதுவெனில் யார்
கருதற் கியலும் வேறொன்றை.

சொல்லாமல் கொள்ளாமல் வருகிற மரணத்தைப் பற்றியும், வாழ்வின் புன்மைபற்றியும் திரும்பத் திரும்ப ஆழமாக நினைத்துப் பார்க்கிறார் பரீது. ஒரு பாட்டில் மனித வாழ்வை ஆற்றங்கரையில் வீற்றிருக்கும் மரமாகவும், ஈரமண்கலத்தில் பெய்யப்படும் தண்ணீராகவும் ஒப்பிட்டுக் காண்கிறார். இவ்விரண்டும் எத்தனை காலம் நீடித்து நிற்க முடியும்?

வெள்ள ஆற்றின் கரையில் உள்ள
மரங்கள் நிலைத்து நிற்குமோ?
சுடப்ப டாத மண்க லத்தில்
பெய்யும் நீரும் நிலைக்குமோ?

இன்னொரு பாட்டும் சாவுபற்றி வருணிக்கிறது. ஆற்றல் வாய்ந்த படிமக் காட்சிகள் நிறைந்த பாடல் அது. படிப்போர் நெஞ்சில் உணர்வுவேகத்தை எழுப்பவல்ல அப்பாட்டில், மரணம் மணக்கோலத்தில் திகழும் மணவாளனாக உருவகிக்கப்படுகிறது. மணாளன் வருகிறான்; உயிரென்னும் மணாட்டியைக் கைப்பற்றிச் செல்கிறான். உயிரின் எலும்புகள் உடைக்கப்பட்டு உள்ளிருக்கும் உயிர் பறித்துச்செல்லப்படுகிறது. அவ்வுயிரின் பயணம்பற்றித் திருக்குர்ஆன் கூறுகிறது. ஒரு மயிர்ப் பாலத்தின் வழி அது நெருப்பாற்றைக் கடந்துவரவேண்டும். சாதுரியமாகக் கடந்துவிட்டால் பேரின்பப் பேரமைதியில் உயிர் திளைக்கிறது; அது கடவுளால் ஆசீர்வதிக்கப்படுகிறது; பாலத்தைக் கடக்கும் நிலையில் தடுமாறுமாயின் நீங்காத நெருப்பென்னும் நிரயத்தில் விழவேண்டியதுதான்.

மரணத்திற்குப் பின் உயிரின் பயணம் எததன்மையது என்பதைக் குருகிரந்த சாகிபில் உள்ள முதல் சுலோகம் மிகச் சதுரப்பட்டோடு வருணிக்கிறது. அப்பாட்டினைப பரீது பின்வருமாறு பாடுகிறார்:

திருமணநாள் முன்னரே நிச்சயிக்கப்பட்டு விட்டது.
அந்தோ, அன்றுதான் மரணமென்னும் இறைததூதன் உன்முன் வருகிறான்.
அதுவரை நீ அவனைப் பார்த்திருக்கமாட்டாய்!
கையற்று நிற்கும் உன் எலும்புகளை உடைத்து அவன் கைவரிசை காட்டுவான்.
உயிரே மணமகள்; மரணமே மணாளன்;
மணவினை முடிந்தபின் அவன் உடன்கொண்டு போவான்.

வாழ்க்கைக்கு விடைகொடுத்து அனுப்பியபின்,
ஓ! இந்த உடல்...
யாரைத் தழுவ இம்மணப்பெண ஏகுவாள்?
கேள்விப்பட்டதில்லையா?
நீ கடக்க விருக்கும் பாலம் மயிரைவிட மெல்லியது.
பரீது, வழக்குமன்றத்திலிருந்து சம்மன் வரும்போது
திடுமென நீ உன்னையே களவுகொடுததுவிடாதே!

இரக்கத்திற்குரிய மனிதனைக் கூற்றுவன் எதிர்கொள்ள வருகிறான். அவனுக்குத் தெரியாத—முனனரே நிச்சயிக்கப்பட்ட நாளில் — கூற்றுவனின் வருகை நிகழ்கிறது. இககாட்சி படிப்போர்க்கு அச்சமூட்டும் வகையில் கவிஞரால் சித்திரிக்கப்படுகிறது. வருகிறவன மரணம் என்னும் இறைத்தூதன் ; மனிதனே அவனைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறான. அவனை எபபடியும் மறநதுவிட வேண்டுமென்றே முயலகிறான். முயற்சி வெற்றிபெறுமா? அச்சமூட்டும் மரணதூதன் எலும்புகளை உடைககிறான், உள்ளிருக்கும் உயிரை வலுக்கட்டாயமாக அபகரிக்கிறான். அவன செருக்கோடும் விருபபோடும புதுமாப்பிள்ளைபோல கம்பீரமாக வருகிறான. உயிரென்னும் புதுமணப்பெண்ணைக் கைததலம் பற்றிக்கொண்டு போகிறான. இது இறைவன் விதித்த ஆணை; நாம் அதை மாற்ற முடியாது; இதில் யாரும் அவனுக்கு உதவ முடியாது. மனிதன் புரிந்துகொள்ள வேண்டிய உண்மை இதுவே என்கிறார் பரீது. முடிவு வருகிறது; இதுவரை வாழநதுவந்த உலகத்திடம் அவன் விடைபெற்றுப் போக வேண்டியதுதான்; வேறு வழியிலலை. சினமும், உணர்ச்சியும், பற்றுககளும் எல்லாமே ஒரு முடிவை அடைகின்றன, மரணததிற்குப பின் உளள பயணத்தைத தனியாகத்தான் தொடரவேண்டும; வேறு யாரும துணையாக உடன்வரப் போவதில்லை. இபபயணததில மனித உயிர் நரகத்தின் பாலத்தைக கடக்க வேண்டியிருக்கிறது. அதைக் கடக்கும்போது யாராவது அதனைப் பெயர்சொல்லி அழைத்தாலும் அது திரும்பிப் பார்க்கக் கூடாது; போய்கொண்டே இருக்கவேண்டும். இச்சொல்லோவியம் படிப்போரிடம் ஒரு பேரச்ச உணர்வையும் நடுக்கத்தையும் உண்டாககுவதற்கே படைக்கப்படுகிறது. எனினும், பரீதுக்கு மனிதர்கள் மீது இரக்கவுணர்வு இல்லாமல் இல்லை. மனிதர்கள் தமக்குள் நேரவிருப்பதை முன்கூட்டியே அறிந்து இந்த இடர்ப்பாட்டிலிருந்து உய்யும் வகையில் இறைவன்பால் தம்

சித்தத்தைத் திருப்ப வேண்டும் என்றே அவர் விரும்புகிறார். மரணத்திற்குப்பின் அமைதியும் இன்பமும் கிட்ட இஃதொன்றே வழி என்கிறார்.

'ராக சுகி'யில் மீண்டும் நரகத்திலுள்ள பாலத்தை பரீது குறிப்பிடுகிறார். அப்பாலம் குறுகியதாக மட்டுமன்றி இருபுறமும் கூர்மையுள்ள கொடுவாளாகவும் திகழ்கிறதாம்;

அச்சமும் நடுக்கமும் தருவது என்வழி
இருபுறம் சுனைபெறு உறைகழி வாள்அது
அக்குறு வழியே நானேக வேண்டும்!
அன்பனே பரீது, அணியமாய் நீஇரு!

இச்செய்யுளில் வழிப்பயணத்திலுள்ள இடர்ப்பாட்டை விவரித்தபின், மரணத்திற்குப் பின்னுள்ள பயணத்திற்காக தயாராயிருக்குமாறு அவர் அனைவரையும் எச்சரிக்கிறார்.

இப்பயணத்திற்காக ஒருவன் தன்னை எப்படித் தயார்படுத்திக் கொள்வான்? 'ராக ஆசா'வில் பரீது இதனைத் தெளிவுபடுத்துகிறார். இறைவனைப் பற்றிய நினைவால் தன்னை அவனோடு இணைத்துக்கொள்ளுதலும், மரணத்திற்குப்பின் இவ்வுடல் வெந்து சாம்பலாகி மண்ணோடு மண்ணாகக் கலந்துவிடும் என்றும், வேறெதுவும் மரணத்திற்குப்பின் திரும்பிவரப்போவதில்லை என்றும் உணர்வதே இதற்குரிய வழியாகும்.

அன்புறு நண்பனே, ஓ, பரீது உளத்தே
ஆண்டவன் நினைவை நிரப்பிடுக
அற்பநோய் யாக்கை மண்ணோடு மண்ஆம்!
அஃதுறை விடம்கல் லறையன்றோ?
இன்றும் நினைவில் கலாம்விளைத் திடும்கொடு
இழிநினை வுகளை அகற்றிவிட்டால்
இறைவனை நேருக்கு நேரெதில் காணலாம்
இம்மியும் ஈதில் அட்டியிலை!
என்னுடல் மடியும் நான்மறை வேனெனும்
எண்ணம் என்னுளே இருந்திருந்தால்
இழிந்த உலகியல் இன்பத்தின் பின்னே
ஏக்கற்று ஓடாது இருந்திருப்பேன்!

.பிறிதொரு பாட்டில் மனிதனின் முழுப் பயணத்தையும் பரீது வருணிக்கிறார். இந்த உலகில் நுழையும்போது அவன் தன்னோடு கொண்டுவரும் நம்பிக்கைகள், அவன் வாழும் முறை, மரணமெனும் தேவதூதனின் வருகை, கால்கழிந்த கட்டிலில் நால்வரால் சுமக்கப்பட்டு அவன் மேற்கொள்ளும் கடைசிப்புறப்பாடு ஆகிய அனைத்தையும் அவர் விவரிக்கிறார். இறைவனின் நியாயத்தீர்ப்பு மண்டபத்தில் இந்த எளிய மனிதனுக்குக் கைகொடுப்பதெல்லாம் அவன் உலகவாழ்வில் செய்த நற்கருமங்களேயாம்.

சோற்றால் நீரால் சுமையுடல் வளரும்
மனிதன் ஆயிரம் கனவோடு வருவான்
மரணம் என்னும் தூதன்உள் புகுந்து
கதவுகள் அனைத்தையும் திறப்பான்; கணத்தில்
சுற்றமும் நட்பும் சூழ இருப்பினும்
அவர்கள் முன்பே ஆருயிர் பறிப்பான்
மளுக்கென ஆவி முறிந்தபின் நால்வர்தம்
தோளிற் சுமக்கப் பயணம் தொடரும்
இந்த உலகில் இருக்கும் போதே
அவன்செய் அறமே ஆண்டவன் திருமுன்
கைகொடுத் தவனைக் காக்கும் என்க.

மரணத்தின் தவிர்க்கவியலாத் தன்மையைப் பரீது மீண்டும் திரும்ப வலியுறுத்துகிறார்:

எத்தனையோ ஆயிரவர்
இறந்தொழிந்தார்; மண்ணானார்
என்கண் முன்னே
மிச்சமுள்ளோர் விதியிதுவோ
என்றெண்ணி வருந்தினர்காண்
நானும் அன்னே!
நிலையில்லா வாழ்வதனை
நிரந்தரமாய் கருதற்க;
நீயும் நானும்
உட்கார்ந்த இவ்விடத்தே
எத்தனைபேர் இருந்திருப்பர்?
உன்னு வாயே?

மரணம் மட்டுமே பரீதின் பாடல்களில் முதன்மை பெறவில்லை. கல்லறைத் தோட்டத்தில் உடல்கள் காலம் காலமாய்க் காத்துக்கிடப்பதும், நிரயத்தின் எரியும் நெருப்பின் கொடுமையும் ஒருங்கே பேசப்படுகின்றன. செத்துப்போன மனிதவுடலை அரித்துத்தின்னும் புழுபூச்சிகளைப் பற்றியும் அவர் நனவுநிலையோடு உணர்கிறார்.

எரிதழலின் கொடுவெப்பமும், அவ்வெப்பத்தினால் கருகும் பாவிகளின் கதறலும் பின்வரும் சுலோகத்தில் சொல்லப்படுகின்றன:

மரணம் ஆற்றின் மறுகரை யின்கண்
தெரிகிற தன்றோ? தீயுமிழ் நரகமும்
செவிப்பறை கிழிக்கும் உயிர்களின் ஓலமும்
உதுக்காண்; இதனை உணர்ந்தோர் சிலரே.
இம்மை வினைகளே இனிவரும் மறுமையில்
நமக்கெதிரான சாட்சியம் ஆகும்.

பலகாலம் கலலறையில் காத்திருப்பதும் பாவத்தின் கூலியாய்ப் பெறும் தண்டனையும் கடவுளின் நியாயத்தீர்ப்போடு இணைத்துக் காணப்படுகின்றன. கடவுள் வழங்கும் தீர்ப்பு மனிதன் செய்த நல்வினை தீவினைகளின் அடிப்படையில் வழங்கப்படுவதே. ஒருவன் தன்னைக் காத்துக்கொளள வல்ல ஒரேவழி இறைவனிடத்தில் சரண்புகுவதே.

மாளிகை காலி மனையாய் ஆயின
மனிதன் ஒருவன் மண்ணுளே புதைந்து
ஊழி நெடிய உறக்கத்தில் விழுந்தான்
நியாயத் தீர்ப்புநாள் நேர்படும் என்று
ஏழை ஆன்மாக்கள் எத்தனை காலம்
காத்திருக்கின்றன காண்டி; ஓ! பரீது
இன்றோ நாளையோ நீயும்உன் கடைசி
மூச்சினை விடலாம்; நாடொறும் முனைந்து
இறைவன் அடியே சரண்என எய்துக!

இங்கே உடன்வாழும் ஏனைய மனிதர்களுக்காக இரக்கமும் பரிவும்கொள்ளும் ஒரு தூய இதயத்தைக் காண்கிறோம். அறிவற்ற

பேதைமக்களுக்கு பரீது நினைவூட்ட விழைவதெல்லாம் அவர்கள் எதிர்கொள்ள இருப்பது யாதென்பதும், அவர்களுக்கான கடைத்தேற்றம் , யாதென்பதுமே.

குடும்ப வாழ்வு தொடர்பான ஓர் உவமையை பரீது மற்றொரிடத்தில் கையாளுகிறார். வாளியும் கயிறும் பற்றியது அது. மனித வாழ்வினைக் கயிற்றால் இழுக்கப்படும் நீர் நிறைந்த வாளியென வருணிக்கிறார். மனித யாக்கையே நீர் நிறைந்த அழகிய வாளி; மனிதன் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாத மூச்சுக்காற்றே வாளியில் கட்டப்பட்டுள்ள கயிறு. கடவுளால் அனுப்பப்படும் கூற்றுவன் கடுகி வரும்போது கயிறு அறுந்துபோகிறது; வாளியும் கிணற்றில் மோதிச் சுக்குநூறாக உடைகிறது. இக்கருத்து இரு செய்யுட்களில் இடம்பெறுகிறது. மரண தூதன் விருநதினன்போல் வருகிறான்; அல்லது மணக்கோலம் பூண்ட மாப்பிள்ளைபோல் வருகிறான்; கயிறு அறுந்துபோகும்போது வாழ்வு முடிகிறது. நமக்குக் கிடைத்திருக்கும் வாழ்வு ஒருமுறை மட்டுமே கிட்டுவதன்றோ? அவ்வாழ்வும் இறைவனை நினைப்பதற்கேயல்லவா? இதையெல்லாம் யார் எண்ணுகிறார்கள்?

மூச்சுக் கயிறு முறுக்கவிழ்ந்து அறுந்தது
உடம்பெனும் வாளியும் உடைந்துபோயிற்று
யாருடை விருந்தி னனாக
இந்தக் கூற்றுவன் ஈண்டு வந்தனன்?
எழிலுறு வாளி உடைந்தது; அதனை
இணைத்துள கயிறும் இற்றுப் போனது!
நிலக்குச் சுமையாய் நிற்கும் மக்கள்
ஏனிங்கு வாளா வந்தனர், ஏன்? ஏன்?

இவ்வினா என்றென்றும் கேட்கப்படுகிற வினாவே; மண்ணுலகத்தில் மக்களாய்ப் பிறப்பதன் நோக்கம்தான் யாது? கயிறு அறுந்துபோவதற்கு முன், வாளி உடைவதற்கு முன் வாழ்வின் அர்த்தத்தை மனிதன் புரிந்துகொள்ளவேண்டும். மறுமையில் உறுதுணையாக வல்ல ஏதாவது ஒன்றனை அவன் செய்யவேண்டும்; அதற்கான பெருமுயற்சியில் இறங்கவேண்டும். இறைவனை மறந்து வாழ்வோர் இம்மையில் எண்ணற்ற துன்பங்கட்கு இலக்காவது மட்டுமன்றி மறுமையிலும் தமக்கு இடமின்றிப் போகின்றனர்.

பரம்பொருள் மறந்த பண்பி லாளரின்
முகமெலாம் அச்சமே மூட்டுவ தாகும்
இம்மையில் துயர்க்கு இலக்காவ தன்றி
அடுத்த வாழ்விலும் அகதியாய் அலைவர்

யார் தம் நெஞ்சத்தில் ஆணவத்தையும் அவாவையும் அகற்றி, செல்வச் செருக்கைத் தீண்டாமல் இருக்கிறார்களோ அல்லது யார் பாவப்படுகுழியில் வீழாதிருக்கிறார்களோ அவர்கள் என்றும் துன்புறுதல் இல்லை.

அவலும் மிசையுமாய் ஆன உளத்தை
சமனப் படுத்து; சாதிப்பை ஆயின்
நரகின் நெருப்பு நாக்[கு] உனைத் தீண்டா

'ஷரியத்' என்னும் இறைச்சட்டப்படி நியாயத்தீர்ப்பு நாளன்றே உலகின் இறுதி வருகிறது. பூகம்பம் இந்தப் பூமியைப் பிளக்கும்போது இங்குள்ள எல்லாமே அழிக்கப்படுகின்றன. ஊழிக்காலத்து இறுதி போன்ற அப்புனித நாளை இதுவரை கண்டிராத காரணத்தால் கலலறையிலுள்ள உயிர்களெல்லாம் நடுங்கிக் கலங்கும். தேவனால் எக்காளம் ஊதப்படும்; அதன் எதிரொலி மண்ணுக்கும் விண்ணுக்குமாக எதிரொலிக்கும். இறந்தவர்கள் எழுப்பப்படுவார்கள். ஒவ்வொருவரும் தம் வாழ்நாளில் செய்த வினைகளுக்குக் கணக்குக் காட்டுமாறு கோரப்படுவர். மற்றொரு பாட்டில் நியாயத்தீர்ப்பு நாளை நோக்கி நம் கவனத்தைத் திரும்பச் செய்கிறார் பரீது. அப்பாடலில் தம் கருத்தை உருவகமாக வெளிப்படுத்துகிறார். இந்த உலகத்தை நீர் நிறைந்த ஓர் ஏரியாக வருணிக்கிறார். அந்த ஏரியை நோக்கி எண்ணற்ற பறவைகள் அங்கு வாழும் நோக்குடன் வந்துசேருகின்றன. பின்னர் அப்பறவைகள் ஒன்றன்பின் ஒன்றாகப் பறந்து போகின்றன. கடைசியில் இரு தாமரைப் பூக்கள் மட்டுமே அங்கு எஞ்சி நிற்கின்றன. அவையும்கூட காய்ந்து சருகாகிப் போகலாம்; கடைசியில் ஏரியே நீர்வறண்டு பாழ்நிலமாய் மாறலாம்.

பறவைக் கூட்டம் ஒவ்வொன் றாகப்
பறந்து சென்றும் மறைந்திடலாம்
தாமரைப் பூவும் வெளுத்து மெலிந்து
தனிமை யாகித் தளர்ந்திடலாம்

நீரும் வற்றி ஒருநாள் வறண்ட
நிலமாய் ஏரி மாறிடலாம்.

நியாயத்தீர்ப்பு நாள் வரும்; அன்றைக்கு ஒவ்வொருவருடை பேரேடுகளும் திறக்கப்படும். வரவும் செலவும் கணக்குப் பார்க்கப்படும்; பூமியில் பயணித்த நாட்களில் மனிதர்கள் செலவிட்ட ஒவ்வொரு கணத்துக்கும் அவர்கள் விளக்கம் சொல்ல தம் மேலாளனை எதிர்கொள்வார்கள்.

பகலில் அலைந்தும் இரவில் உறங்கியும்
மனிதர்கள் தத்தம் மணிப்பொறி தம்மை
இழந்தல மந்தனர்; மேலாள் அவர்பால்
கணக்குக் கேட்கிறான்:
"இவ்வு கிற்கு ஏன்நீ வந்தனை?"

இப்பாடற் பகுதியில் மதிப்புவாய்ந்த காலத்தை மனிதர்கள் இழந்துவிட்டார்களே என்று கழிவிரக்கப்படுகிறார் பரீது.

பாவமும் தண்டனையும் என்னும் கருத்துப்படிவம் அனைத்துச் சமயங்கட்கும் பொதுவானதே. 'ஷரியத்' என்னும் இறைச்சட்டத்தில் அதற்குச் சற்று அதிகமான மதிப்புத் தரப்படுகிறது. உலகியலில் பாவம்புரிதல் என்பது தவிர்க்கவியலாத நடைமுறை மெய்ம்மையே. இப்பாவத்திற்காக மனிதர்கள் பெறவிருககும் கொடிய தண்டனைகளையும் அதன் கடுமையையும் விதம் விதமாகக் கவிஞர் எடுத்துரைக்கிறார். உலக இன்பங்களில ஆழங்காற்பட்டுத் தோய்ந்து நிற்போர் தண்டனை வழங்கும்போது தனிநிலையில் கவனிக்கப்படுவர்.

தானியக் கிடங்கையே உடைமையாய்க் கொண்டவர்கள்!
ஒருபுறம் உப்புககும் வழியற்றோர்
எல்லாரும் புறப்பட்டுப் போன பின்னரே
யார் தண்டனைக்குரியவர் என்பது தெரியவரும்

கிராமிய வாழ்வுப பின்னணியிலிருந்து பரீது இரு உவமைகளை எடுத்தாண்டு பாவிகள் பெறவிருக்கும் தண்டனையின் அளவை நாம் அறியுமாறு செய்கிறார்.

வழக்கு மன்ற வாசலுக்கு நீ
செல்லும் போது சேகண்டி மணியை
பார்த்துளாய் அன்றோ, பரீது!
அந்தோ, பாவம் அறியா மணியது
அடிபடும் காட்சியை அறிக;
மணிக்கே இந்நிலை; எனில்
பாவிகள் நிலையைப் பகரவும் கூடுமோ?
பஞ்சுக்கு விளையும் பாதகம் காண்க!
கரும்பு மட்கலம் கரித்துண்டு காகிதம்
இவற்றினுக் கெல்லாம் என்ன நிகழ்ந்தது?
சீசேம் மந்திரம் செய்த அற்புதங்கள்
கொஞ்சமா?
தவறு செய்வோர்க்குத் தக்கதோர் தண்டனை
எதுவென நீயே இயம்பு.

மேற்கண்ட இரு செய்யுட்களிலும் செய்யப்படாத குற்றங்களுக்காக அற்பமான அப்பாவிப் பொருள்கள் தண்டனை பெறுவதைப் பரீது காட்டுகிறார். இதுதான் உலகியற்கை எனில் பாவிகளுக்குரிய தண்டனைதான் யாது? இவ்விருபாட்டிலும் பாவிகளுக்கு வழங்கப்படவேண்டிய தண்டனை எத்தகையது என்னும் கருத்தை மெல்லமெல்ல உருவாககுகிறார். பாவம் என்று இங்கு கூறப்படுவது தீயசெயல்களின் பாற்பட்டதே. கவிஞரின் நோக்கம் யாதெனில் மனிதர்களின் நெஞ்சத்தில் இறைவனைப்பற்றிய அச்சத்தை உருவாக்கி அவர்களைப் புனித வாழ்விற்கு அழைத்துப் போவதேயாம். இங்கே நாம் ஒன்றைத் தவறாமல் காணவேண்டும்; பாவிகள் பெறவேண்டிய் வகைவகையான தண்டனைகளை அடிக்கடி எடுத்துரைக்கும் பரீது, சொர்க்கத்தில் கிட்டக்கூடிய பேரின்பங்களைப் பற்றி எங்குமே குறிப்பிட்டுப் பேசவில்லை. அவர் தீயவர்களைத் திருத்துவதையும், கண்டிப்பதையும் நோக்கமாகக் கொள்கிறாரேயன்றி, சொர்க்க இன்பம் என்ற ஒன்றைச் சுட்டிக்காட்டி ஆசைமூட்டவில்லை. பரீதினுடைய சிந்தனைகளில் துறக்க இன்பத்திற்கு அது எவ்வளவுதான் மேம்பட்டது என்று கருதப்பட்டாலும் இடமில்லை. புலனுகர்வு கடந்த பேரனுபவ நிலைக்குக் காரணமாக இருப்பது தூய வாழ்வு; அத்தூய வாழ்விற்குத் தடையாக இருப்பதாலேயே அவர் தீமைகளைக் கண்டிக்கிறார். 'நிர்வாணம்' என்னும் பேரின்ப

நிலையை அவர் அடைய விழைகிறார். அந்நிலையில் மனித இதயத்திலுள்ள சின்னஞ்சிறு சுடர் எல்லா ஒளிக்கும் மூல ஊற்றாக இருக்கிற பேரொளி காலும் கதிரவனோடு இரண்டறக் கலந்துவிடுகிறது. அங்கே இன்பமும் இல்லை; துன்பமும் இல்லை. தனிமனித ஆத்மா தன் தனித்தன்மையை இழந்து பரமாத்மாவுடன் ஒன்றிவிடுகிறது.

ஷரியத் என்னும் இறைச்சட்டத்தோடு ஒருங்கிணைந்த கூறாகவுள்ள நடைமுறைச் சமூக ஒழுக்கங்கள் பரீதின் படைப்புகளில் முனைப்பாகப் பேசப்படுகின்றன. மனிதவாழ்வினை இனிமையாகவும் மேம்பட்டதாகவும் ஆக்கவல்ல அன்பு, எளிமை, சகிப்புத்தன்மை, பொறுமை முதலிய சமூக ஒழுக்கங்களை அவருக்கே உரிய முறையில் இனிக்கப் பாடுகிறார். ஒழுக்கமுடைய ஒருவன் சமுதாயத்தால் அங்கீகரிக்கப்படுகிறான் என்பது மட்டுமன்று. அவன் திருக்குர்ஆனின் கூற்றுப்படி இறைவனின் நட்புணர்வுக்கும் தக்கானாகிறான்.

தீயன புரிபவர்க்கும் நன்மையே செய்யவேண்டுமென்றும், உலகத்தின் ஆக்கமனைத்தையும் பெறுதற்கு அதுவே வழியென்றும் ஒரு பாட்டில் கவிஞர் கூறுகிறார். எளிய பாட்டுத்தான்; ஆனால் படிப்போர் நெஞ்சில் அது சரேலெனச் சென்று தைக்கிறது.

இதயத்தைச் சினத்தால் இழுத்து மூடாதே
தீயன புரியினும் திரும்பிச் செய்யாமல்
ஒல்லும் வகையெலாம் அறவினை உஞற்றுக.
உற்ற யாக்கையின் உறுதுயர் அகலும்
ஆக்கம் அனைத்தும் அதர்வினாய்ச் சேரும்.

இப்பாட்டில் வாழ்க்கைபற்றிய முழுத்தத்துவமும் அடங்கியுள்ளது. இதனைக் கடைப்பிடிக்க வேண்டுமாயின் ஒருவன் ஞானியாக இருந்தால்தான் முடியும். தீயன புரிவார்க்கு நாமும் தீமைகளையே திருப்பிச்செய்யாமல் நன்மையே புரிய ஒருவகையான பக்குவம் தேவை; அது எல்லார்க்கும் அமைதல் அரிது. சினத்தை விட்டொழிப்பது எவ்வாறு? சினம் இருந்த இடத்தை அன்பினால் நிரப்பினாலன்றோ அது இயலும்! ஒருவனால் அதை நிறைவேற்ற முடியுமாயின் அவன் உடல் துன்பத்தின்று நீங்கிவிட்டான் என்பதே பொருள்; அவனே அனைத்தையும் அடையவல்லவன். ஆழ்ந்த

அறிவாராய்ச்சியினால் பிறந்த சிறந்த தத்துவங்களை, பரீது மிக எளிமையாகவும் போகிற போக்கில் மிகச் சாதாரணமாகவும் வெளிப்படுத்துகிறார். துன்பங்களிலிருந்து நீங்குவது எப்படி? உள்ளார்ந்த மனஅமைதியைப் பெறுவது எப்படி? அக்கலையைத்தான் பரீது மிக எளிமையாகக் குறிப்பிடுகிறார்; அவர் சொல்லும் முறையில்தான் எத்தனை எளிமை! ஒரு கன்னத்தில் அறைந்தவனுக்கு மறுகன்னத்தைத் திருப்பிக்காட்டுவதுகூட அன்று; அறைந்தவனின் பாதங்களையே அன்போடு முத்தமிடுவது.

கூன்கை கொண்டுன் கொடிறுடைத் திடினும்
திரும்பவும் அதேபோல் தீச்செயல் செயாமல்
முரடனின் அடியை முத்தம் இடுக
கறுவின்றி நீயும் இல்லம் கடுகுக.

பரீது அதற்கு மேலும் சென்று இன்னொரு கருத்தையும் சொல்கிறார். புல்லினும் கீழான புன்மைநிலையை ஒருவன் ஏற்றுக்கொள்ள வேண்டும்; நடக்கும் மனிதர்கள் அவனை மிதித்துக்கொண்டு செல்லவேண்டும். ஒரு கடுந்துறவாளர் என்னும் நிலையில்; இறைவனின் திருவோலக்க மண்டபத்தில் நுழைவதற்கு இதுவே வழி என்று கூறுகிறார்.

தேவனின் திவ்விய தரிசனம் கிட்டநீ
வழித்தடம் வளரும் புல்லாய் மாறுக!
புலம்பிரிந் துறையும் செலவும் அதுவே!
ஒருவன் மிதிப்பான்; ஒருவன் துவைப்பான்;
அவ்வண்ணம் நிகழின் ஆண்டவன் உனக்கு
பெறலரும் பரிசில் நல்குவன்......

தூசுகூட நிந்திக்கத்தக்கதோ கண்டனத்தற்குரியதோ அன்று. அணுவினும் சிறிய அணுவாகக்கூட இருக்கலாம்; உண்மையே. இதுவே உன் காலடியில் வாழ்நாள் முழுதும் மிதிபடலாம்; அதுவும் இடம்மாற வழியுண்டு.

தூசென ஏசேல்; அதுபோல் ஏதுள?
வாழும் போதுன் காலடி படியும்
இறந்த பின்னரோ உன்னையே மூடும்.

அன்பும் அவாவும் எங்ஙனம் இணைந்திருக்க முடியாதென்பதை விளக்குவதற்கு அவர் மழைநீரில் ஒழுகும் எளிய குடிசையை உவமையாகப் பயன்படுத்துகிறார். அவா என்னும் பண்புடன் இணைந்துபோகும் அன்பு எப்படிப்பட்டது? உண்மையில் போலி அன்பேயாம். அது விரைந்து மறைவது; அது ஒழுகும் குடிசைக்குள் தற்காலிகமாக உறைவது போன்றது. பாடலில் வரும் சொற்களின் பிணைப்பு நம் நெஞ்சை நெகிழவைக்கிறது; உவமை உள்ளத்தைத் தொடுகிறது.

அவாவொடு நல்லன்பு அணைதல் கூடுமோ?
ஒழுகும் ஓட்டைக் குடிலினுக் குள்ளே
எத்தனை காலம்தான் இருத்தல் முடியும்?

இதுபோன்றே அவர் உளநிறைவு பற்றியும் பேசுகிறார்.

உலர்ந்த ரொட்டியை உண்டு சிறிதே
குளிர்ந்த நீரையும் குடி; பிறர் உண்ணும்
வெண்ணெய்தோய் ரொட்டியைக் கண்டு விரும்பி
ஏக்கற்று அதனையே நோக்கிடேல்;

இங்கு வெண்ணெய் தோய்ந்த ரொட்டி என்பது வெறும் ஆசையைத் தோற்றுவிக்கும் தூண்டுதல் மட்டுமன்று; துன்ப துயரங்களின் மூல ஊற்று. உலக இன்பங்களை நாடும் ஒருவன் துயரங்களிலிருந்து ஒருகாலும் தப்ப முடியாது. இங்கு வெண்ணெய்—ரொட்டி என்பது போக வாழ்வைக் குறிக்கும் ஒரு குறியீடு.

மரக்காழ் மத்தால் இயன்றதென் ரொட்டி
பசியே எனக்குச் சுவைதரு பொருளாம்
வெண்ணெய்தோய் ரொட்டியை விரும்பி உண்போர்
அடைவதனைத்தும் அளப்பிலாத் துன்பமே.

பொறுமை பற்றியும் பரீது மூன்று பாடல்களில் உபதேசிக்கிறார். இப்பாடல்கள் நம் ஆழ்ந்த கவனத்திற்குரியவை.

பொறுமையே வில்லாய்ப் பொறுமையே நாணாய்ப்
    பொறுமையே பாய்ந்திடும் அம்பாய்
உறுவினை மேற்கொள்; இலக்கது தப்பா;
    உதவிட மறுப்பனோ தேவன்?

பொறுமையே பூண்டு அடக்கமாய் நிற்கூ
பொறுமையே கலனெனப் பூண்டோர்
இறைவனின் பீடத் தருகிலே நிற்பர்
இம்மறை யார்க்கும்நீ கூறேல்!

இப் பொறுமையே உன் முதன்மைக்குறி யாகட்டும்
அழியும் இயல்புடையாய், இப்பண்பைப் போற்று,
போற்றிடின் பேராறாம் ஆற்றிடை அங்கமாவாய் – அன்றேல்
அதன் சிற்றாறாய்க் கிளை பிரிந்தொழிவையே!

பரீதின் பாடல்களில் மொழியமைப்பு நிலையில் பார்க்கும்போது, இவை சற்றே கடுமையானது எனலாம். முல்தானி பஞ்சாபி மொழியில் பாரசீகச் சொற்களைக் கவிஞர் கலந்து பாடி இருக்கிறார். வாழ்வின் பல்வேறுபட்ட நிலைகளிலிருந்து இவர் உவமைகளை எடுத்தாண்டுள்ளார். அம்பு, அம்புவில் என்பனவும், கடுந்துறவாளரின் தன்னொறுப்பும், வீறுபடைத்த பேராற்றின் பெருவெள்ளமும் பிறவும் இங்கு எண்ணத்தக்கன. பரீதின் இலக்கு இறைவனைத் தேடுவதே. அதுவே அவரது அடையாளம்; அவரைப் பற்றிய இரகசியமும் அதுவே; அவரது குறிக்கோளும் அதுவே. குறைந்த வாழ்நாள் கொண்ட அற்பமனிதர்கள் கற்றுக்கொள்ள வேண்டியதும் அதுவே. ஞானிகளின் பயணம் கடுமையானது மட்டுமன்று; நெடியது; பொறுமையை வேண்டுவது. பரீது நமக்கு அழுத்தமாய் உணர்த்த விரும்புவதெல்லாம் இத்தேடல் நாட்டம் வறிதானதன்று; புலம்பிரிந்துறையும் செலவை நாம் நயந்தால் இறைவன் நமக்குப் பெறலரும் பரிசை நல்குவான்; "பெருக்கெடுத்தோடும் பேராறாக இலங்கும் அவ்வருளாளன் தன்னோடு நம்மையும் அணைத்துக்கொள்வான்; பிரிந்தோடும் சிற்றாறாக விட்டுவிடமாட்டான்!" என்பதே ஆகும்.

நல்லொழுக்க வாழ்வின் நோக்கம்தான் யாது? ஒரே சுலோகத்தில் கடுகைத்துளைத்தேழ் கடலைப் புகட்டுவதுபோல் பரீது சுருக்கமாகச் சொல்கிறார்:

எளிமையை உன் சொற்களாய் ஆக்கு
சகிப்புத்தன்மையை அன்றாட ஒழுக்கமாய்ப் போற்று
நயத்தக்க நாகரிகத்தையே
உச்சாடனத்திற்குரிய மந்திரமாய் மாற்று

இவற்றையே உன் ஆடையாகக் கொள்.
ஓ! என் சகோதரி
உன் மணாளனை நீ
முந்தானைக்குள் முடிந்துகொள்ளலாம்!

வேறுவகையாகச் சொன்னால், ஆன்மீக இலக்கை அடைய பொய்தீர் ஒழுக்கநெறியே போற்றத்தக்க நெறியாகும். தியானம், ஆனந்தம், பேரா இயற்கை இவையே மனிதனுக்கு வாழ்—முதலாக அமையத்தக்கன. இதில் ஏதும் ஐயமில்லை. ஆனால், ஒரு சூஃபியின் முன்னோக்கிய ஆன்மீகப் பயணத்தில் ஒழுக்க நெறியின்றி இவற்றை எட்டவே முடியாது.

'ஷரியத்' என்னும் இறைச் சட்டங்களின் அடிப்படையிலேயே பரீது தம் வாழ்க்கையை அமைத்துக்கொண்டார். அவற்றில் ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருந்தார். என்றாலும் ஷரியத்தின் மற்ற கூறுகளாகிய குர்ஆன், இறைத்தூதர் முகம்மது, கலிமா, ஜக்காத், மெக்காவிற்குச் செல்லும் புனிதப்பயணம் போன்றவற்றை அவர் பாடவே இல்லை; இது எண்ணிப் பார்க்க வேண்டிய ஒரு முக்கிய செய்தியாகும். இதற்குக் காரணம் யாதாக இருக்க முடியும்? குருநானக் பரீது எழுதிய சுலோகங்கள் எல்லாவற்றையும் தொகுத்துப் பேணவில்லை. அவரால் சிறிதளவே தொகுக்கப்பட்டது. பரீதின் சில உபதேசங்கள், அவர் நிகழ்த்தியதாகக் குறிப்பிடப்படும் ஐயத்திற்கிடனான அற்புதங்கள் பற்றிய புனைந்துரைகள், இவை ஒருபால் நிற்க. அராபியம், பாரசிக மொழியிலும், பஞ்சாபி மொழியிலும் பரீது எழுதிய அனைத்தையும் அவரது சீடர்கள் போற்றிக்காக்காமல் போனது மிகவும் துரதிர்ஷ்டமானதே.

சில பாரசிக அராபியப் பாடல்கள் அவா பெயரோடு இணைக்கப்பட்டு வழங்கப்படுகின்றன: அவை ஆதாரபூர்வமானவையா என்னும் கேள்வியும் எழவே செய்கிறது. எனினும், அவற்றின் அடிக்கருத்து பரீதின் கடவுள் நேயமும் மனிதர்கள்பால் அவர் கொண்டிருந்த அன்புமேயாம். எனவே, குருகிரந்த சாகிபில் இடம்பெறும் பாடல்களை மட்டுமே நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம்.

பரீது ஆழ்ந்த சமய உணர்வுடையவர் என்னும் கருத்தை நாம் திரும்பத்திரும்ப வற்புறுத்த வேண்டியதில்லை. அவர் இஸ்லாமியப் பண்பாட்டோடு தம்மை இணைத்துக்கொண்டவர். அவரது

போதனைகள் திருக்குர்ஆனை அடித்தளமாகக் கொண்டவை. அவரது குமரப்பருவத்தில் அவர் மறைநூல் முழுவதையும் மனப்பாடம் செய்திருந்தார். அதனை ஒரே நாளில் அவரால் ஓத முடிந்தது. அல்லாவின் திருப்பெயரை அவர் பலகால் ஓதினார். நாள்தோறும் ஐந்துமுறை தொழுகை நடத்துவதை வற்புறுத்தினார். முஸ்லீம்கள் தம் சமூகத்தினரோடு மசூதிக்குச் சென்று தொழுகை நடத்துவதை மீண்டும் மீண்டும் வற்புறுத்தினார். எனவே, அவர் குர்ஆன் பற்றிப் பாடினாரா இறைத்தூதராகிய நபி பெருமானார்பற்றிப் பாடினாரா என்பதெல்லாம் ஆராயத் தேவையற்றவை. பரீது கூறிய ஈமான் என்னும் கோட்பாடு குர்ஆன் அடிப்படையில் எழுந்ததே. கலிமா என்னும் சொல்லோ, அதுபற்றிய தெளிவுரைகளோ நமக்கு முக்கியமல்ல; பரீது நபிகள் பெருமானாரைப் பின்பற்றி ஏற்றுக்கொண்டவரே. 'ஜகாத்' [தருமம்] என்பது ஒரு சுலோகத்தில் மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது. 128–ஆம் சுலோகத்தில் அவர் கூறுகிறார்.

இதோ சிலஞானிகள்,அவர்கள்
ஞானமுடையாராயினும் எளிமையாக இருக்கிறார்கள்.
வலிவுடையோர் எனினும் பலவீனமாக உள்ளனர்.
ஒன்றும் இல்லையென்றாலும்,
இருப்பதைப் பகுத்துத் தருகின்றனர்.

ஒரு ஞானியின் பண்புநலன்கள் பற்றி எடுத்துரைக்கும் இச்சுலோகம் நம்மை இன்புறுத்த வல்லது." உண்மையான ஞானி தன் பலத்தைக் காட்டுவதில்லை; தன் ஞானத்தை நினைத்து செருக்குறுவதில்லை; எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் வைத்திருப்பது சிறிதேயெனினும் ஏனையோருடன் இருப்பதைப் பகிர்ந்து கொள்கிறார். இதுவே —உன் செல்வத்தின் ஒரு பகுதியையோ அல்லது முழுமையாகவோ கொடுப்பதுதான் — 'ஜகாத்' ஆகும்."

புனிதயாத்திரை பற்றிய குறிப்பு இல்லாமை பற்றி இனி நாம் காணலாம். இதற்குக் காரணம் பரீது சமயம் தொடர்பான புறவலைப் பின்னலுக்குள் தம்மை உட்படுத்திக் கொள்ளாததே எனலாம். முதுமைப் பருவம் வரவர அவர் இறைவனைப் பற்றிய அகநாட்டத்தையே போற்றினார். தம் அன்புக்குரிய இறைவனோடு ஒன்றி நிற்கும் நாட்டமே அவருள் பெருந்தீயாகக் கிளர்ந்திருந்தது; அதிலேயே அவர் நிறைவுகண்டார். அவரது துறவு தன்னைத்தானே ஒறுத்துக்கொள்ளும் முகட்டுநிலையை எட்டிற்று; தியானத்திலேயே தம் நேரத்தையெல்லாம் செலவிட்டார். இத்தகைய மீக்களிப்பு

நிலையில் உள்ள ஒருவருக்குப் புனிதயாத்திரை என்பது நிறைபொருளின்றிப் போனதில் வியப்பேதுமில்லை. அவர் உண்ணாநோன்பிருந்தார்; அவர் மேற்கொண்ட கடுத்துறவில் அது ஒரு பகுதியாக இருந்தது. எனினும் அவையெல்லாம் கடைசி இலக்காகிய பேரா இயற்கைக்குக் கொஞ்சமே துணைபுரிந்தன.

இதுகாறும் கண்டவற்றால், கடவுள், இறைத்தூதர் முகம்மது, மற்றும் இஸ்லாத்தின் கோட்பாடுகள், நடைமுறைவிதிகள் அனைத்தையும் அவர் நம்பினார்; தம் சீடர்களும் தம்மைப் பின்பற்றுவோரும் அங்ஙனம் நம்பிக்கை வைக்கவேண்டுமென விழைந்தார். இறைச்சட்டங்களை அவர் மதித்துப் போற்றியதால் தம்மை நாடிவந்தோரிடமும் அவற்றைக் கூறி அவர்தம் வாழ்க்கை நெறியை மேம்படச் செய்தார். இறைவனைப் பற்றியும் இறைநேயத்தைப் பற்றியும் அல்லாமல் நன்மை, எளிமை, சகிப்புத்தன்மை, போதும் என்னும் பண்பு முதலிய சமூக ஒழுக்கநெறிகளையும் அவர் பாடினார். சரியாகச் சொன்னால், பரீது ஒரு நிறைஞானி, பெருங்கவிஞர், ஆழ்ந்த பக்திகொண்ட ஒரு முசல்மான், பெரிதும் விரும்பத்தக்க ஒரு மாமனிதர்.

## இயல் : ஐந்து

# ஒரு தரீக்கத் கவிஞர்

சூஃபிசத்தில் இறைவனோடு ஒன்றும் நெறியில் நான்கு படிநிலைகள் குறிப்பிடப்படுகின்றன. அவையாவன, 1. ஷரீ அத் [சட்டங்களின் தொகுதி], 2. தரீக்கத் [கட்டுப்பாடு மிக்க வாழ்க்கைப் போக்கு], 3. ஹகீகத் [ஆன்மாவின் விழிப்பு], 4. மரீஃபத் [மெய்யுணர்வு பெறல்]. இந்நூலின் முற்பகுதியில் நாம் சூஃபிசத்தின் பரிணாம வளர்ச்சியைச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளோம். குர்ஆனில் காணப்படும் திருவெளிப்பாட்டு வடிவில் இரண்டறக் கலந்த நிலையில் காணப்படும் ஒருவகையான மறைபுதிருணர்வு; இறைத்தூதர்கள் சொர்க்கத்திற்குச் சென்றமை; எல்லைகடந்ததும் சொற்களால் விளக்கியுரைக்கப்பட இயலாததுமான இறைநிலைபற்றிய கோட்பாடு; நபிகள் பெருமானாரின் சில நெருங்கிய தோழர்கள் மேற்கொண்டிருந்த கடும் நோன்பும் உலகத்துறவும்; இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறை பூரணமாய் இருப்பவன், நினைப்பவர் மனமே கோயிலாய்க் கொண்டவன், யாரொருவர் எவ்வடியில் உள்குவார் அவருள்ளே அவ்வடியில் வந்து அருள் கொடுப்போன் என்றெல்லாம் கூறும் புதிய பிளேட்டோனிசத்தின் செல்வாக்கு ஆகிய இவற்றிலிருந்தே அது தொடக்கம் பெற்றது; இதிலிருந்தே ஆன்மீக வளர்ச்சிக்கு அன்பே அடிப்படை என்னும் கருத்தும் எழுந்தது. உலக இயக்கத்தின் அடிப்படை அன்பே என்பதும், அவ்வன்பின் மூலமே இறைவனின் ஒரு பகுதியாக உள்ள ஆன்மா அவனை அடையமுடியும் என்பதும் நம்பிக்கையாக வலுப்பெற்றது. இந்த அன்பினைப் பருமைநிலை முதலாக நுண்மைநிலை ஈறாகப் பல படிநிலைகளாகப் பிரிக்கலாம். பாரசீகக் கவிதையில் அது உணர்ச்சிபூர்வமாக வெளிப்படுகிறது; எனவே, இறைநேயம் என்பது ஆற்றல்வாய்ந்த உணர்ச்சிகளின் மேம்பட்ட நிலையே என்று கருதப்பட்டது. ஆன்மீகப் பெருநாட்டம் என்பது 'இஷ்க்' என்று குறிப்பிடப்படும் பெருங்களிப்பு நிலையோடு ஒத்ததாய் ஆயிற்று. மனிதன் தன் அன்பிற்குரியவர் மீது கொள்ளும் நேயம் போன்றதே இதுவும் என இறைநேயம் விளக்கப்பட்டது. சூஃபிகள் இறைநேயத்தை விளக்கும் குறியீடாக மானிடக்காதலைக்

கொண்டனர்; ஆன்மீகக் காதலின் பெருங்களிப்பு நிலையை உருவாக்க அவர்கள் தொழுகையில் ஆட்டபாட்டத்தையும் மெல்ல மெல்லப் புகுத்தினார்கள். இந்தியாவைப் பொறுத்தவரை வேதாந்தம், பௌத்தம், பல்வேறு பக்தி இயக்கங்கள் ஆகியவற்றால் சூஃபிசம் செல்வாக்குப் பெற்றது. அது மக்களிடையே உபதேசிக்கப்பட்டது; மக்களால் தழுவிக்கொள்ளப்பட்டது. அந்த சூஃபித் தத்துவத்திற்குப் பஞ்சாபி மொழியில் வடிவம் தந்தவர் பாபா பரீது. குருகிரந்த சாகிபில் 'செய்கு பரீதின் சுலோகங்கள்' என்னும் தலைப்பில் காணப்படும் திருவசனங்கள் காலவரன்முறைப்படியோ நுவல்பொருள் அடிப்படையிலோ வகுக்கப்பெறவில்லை. அவற்றை வெவ்வேறு காலகட்டத்தில், ஆற்றல்வாய்ந்த உணர்ச்சிகள் நெஞ்சில் ஊற்றெடுத்த நேரங்களில்தான் அவர் எழுதினார். வாழ்வின் பல்வேறு அம்சங்களைப் பற்றிய உணர்வுகளே அப்பாடல்கள். அவை அனைத்தும் அவரது சொந்த அனுபவங்களின் வெளிப்பாடு. குறிப்பிட்ட மனஉணர்வுகள் அவருள் தாக்கத்தை ஏற்படுத்தியபோது அவையே பாடலாக வெளிப்பட்டன.

பஞ்சாபி மொழியில் எழுதிய முதல் சூஃபிக் கவிஞர் என்னும் பெருமை பரீதுக்கு எப்போதும் உண்டு. அவரது பாடல்களைப் படிக்கும்போது முதல்நிலையில் அவர் இஸ்லாமிய கலாச்சாரத்தைப் பாடும் கவிஞர் என்னும் கருத்தே நம்முள் தோன்றும். நபிகள் பெருமானாரால் உணரப்பட்ட கடவுளையும், மசூதிகளில் நிகழ்த்தப்படும் தொழுகையையும், தேவதூதர்கள் சொர்க்கம் நரகம் முதலியவற்றையும், கடைசிநாள் தீர்ப்பையும், ஆன்மாக்கள் உயிர்த்தெழுதலையும், உயிர்கள் நரகத்தின் பாலத்தைக் கடந்து செல்வதையும், ஷரீஅத்தால் ஆணையிடப்படும் சமூகதர்மங்களையும் அவர் பாடுகிறார். ஆழ்ந்து நோக்கினால் அவர் பாடல்களில் இஸ்லாமியப் பின்னணி சற்று பின்னே மறைய அனைத்தையும் அளாவிய பரந்துபட்ட மனித நேயமே முனைப்பாக நிற்பதை நாம் உணரலாம். இதற்கு இரு காரணங்கள் உண்டு. முதலாவதாக, பரீது எங்குமில்லாத போக்கில் நபிகள் பெருமானாரையும் அவர் நடத்திய போரையும், அவரது கொள்கைகள் பெற்ற வெற்றியையுமே பாடுகிறார். இஸ்லாம், உலகம் முழுதையும் கொண்ட வெற்றியை அவர் பாடவில்லை. மற்ற அனைத்துமதக் கொள்கைகளையும் அடியோடு மறுத்து, இஸ்லாமையே உயர்த்திப் பேசுவதற்கு அவர் உலமா அல்லர்; குவாசியும் அல்லர். இரண்டாவதாக, ஷரீஅத்தின் பல்வேறு அம்சங்களைப்

பேசுகிறபோது, அவர் மனிதனின் துன்பங்களையும் துயரங்களையும் பற்றியே பெரிதும் கவலைப்படுகிறார்; அவர் பிறரை எப்படி மதமாற்றம் செய்வது என்றெல்லாம் எண்ணவில்லை. மனிதனை இறைநேயனாக்க நினைக்கும் ஒரு சமயத்தலைவராகத்தான் அவர் காட்சி தருகிறாரேயன்றி திருக்குர்ஆன் நெறியை மட்டுமே வற்புறுத்தும் இஸ்லாமியராகக் காட்சிதரவில்லை. அவர் கவலைப்படுவதெல்லாம் மனிதனைப் பற்றியே; அவனது ஆன்மீக விழிப்பு பற்றியே. மனிதன், அவனது சின்னஞ்சிறிய வாழ்க்கை, வாழ்வின் நிலையாமை, மரணத்தைப்பற்றி அவனுள் என்றென்றும் இருந்துவரும் அச்சம், மக்கள் கூட்டத்தின் வறுமையும் பசியும், உலகில் மக்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள், அதிகாரத்தின் மீது ஏற்படும் கண்மூடித்தனமான மயக்கக் கவர்ச்சி, பயனற்ற வெறும்வேட்டையில் வாழ்நாள் கழிந்துபோகிற அவலம் — இவைபற்றியே அவர் பெரிதும் சிந்தித்தார். அவர் பாடிய சமுதாய ஒழுக்கங்கள் எல்லாச் சமயத்தினருக்கும் இருக்கவேண்டிய பொது ஒழுக்கமே ஆகும். ஆன்மீக உலகிற்கு அவை தலைவாயிலாக அமைபவை என்பதாலேயே அவர் அவற்றை வலியுறுத்தினார். இஸ்லாம் என்னும் அமைப்புக்குள் இருந்துகொண்டே கடும்நோன்புகளையும் துறவினையும் வலியுறுத்திய தொடக்க கால சூஃபிகள் கூட்டத்தையே அவர் சார்ந்திருந்தார். காலப்போக்கில், இஸ்லாமிய புறச்சடங்குகளிலிருந்து அவர் வெகுதூரம் விலகிப்போய்விட்டார். இஸ்லாமிய அரசுடனோ, அதன் அதிகார வர்க்கத்துடனோ, உலமாக்கள், குவாசிகளுடனோ அவருக்கு எந்தவிதமான உறவும் இல்லை. வேறொரு இடத்தில் நாம் சொல்லியிருப்பதுபோல், அவர்கள் இவருக்கு எதிராகச் சதித்திட்டம் தீட்டினர்; இவரைப் புறக்கணித்தனர். இவருக்கும் இவரது குழந்தைகட்கும் எல்லாவகையிலும் தொல்லைகள் தந்தனர். ஆனால், பொறுமை, சகிப்புத்தன்மை முதலியவற்றால் இவர் எல்லாத் தடைகளையும் கடந்து வெற்றிபெற்றார். இவர் தொழுகை நடத்தினார்; உண்ணாவிரதம் மேற்கொண்டார்; ஆனால், எல்லா நோன்புகளுமே ஆன்மீகம் என்னும் இலக்கை நோக்கியதாகவே இருந்தன. எனவே, சமயாசாரத்தில் இவர் சூஃபிகளின் அன்பு மார்க்கத்தையே பின்பற்றினார்; அன்புவழிபட்ட சமயத்தையே இவர் போதித்தார்; வேறு வார்த்தைகளில் கூறினால், இவர் பக்தி மார்க்கத்தையே பின்பற்றினார். இறைவனிடத்தில் அன்புமயமாகத் தம்மை அர்ப்பணித்துக்கொள்வதே இவரது நெறியாக இருந்தது;

அன்பின் வாயிலாகவே இவர் இறைவனை அடைய விழைந்தார். இவரது அன்பு உலகமனைத்தையும் அணைத்துத் தழுவிக்கொள்கிற அன்பு; இவரது அன்புலகில் யார் மீதும் வெறுப்பில்லை; இவர் இறைவனையும் அவனது படைப்பையும் நேசித்தார். இவரை சூஃபியாக மாற்றியது இதுவே. பரீதுக்கும் ஏனைய ஆசார முஸ்லீம்களுக்கும் இடையே இருந்த வேறுபாடும் இதுவே. நாம் அவரது கவிதைகளைப் படிக்கும்போது அவர் தம் நேயத்திற்குரிய ஒன்றின்மீது செலுத்தும் அளவிறந்த பெருங்காதலே நமக்குப் புலனாகிறது. அவரது நெஞ்சில் ஊற்றெடுத்து வழியும் அத்தனை அன்பையும் கொட்டி அவர் இறைவனை நேசிக்கிறார்; அவரை அடைவதற்காக சில்சிலா—இ—மகுசூக் என்னும் வடிவில் நோன்புகளை நோற்கிறார். அவரது பாடல்களில் பொங்கி வழியும் இக்காதலே அவரை ஒரு மிகப்பெரிய சூஃபிக் கவிஞராக மாற்றியது.

வாழ்வின் நிலையாமையை மனிதன் புரிந்துகொள்ள வேண்டும்; அவனுக்கு இவ்வுணர்வையே ஊட்டவேண்டும். இதுவே பரீதின் முதற்பெரும் வேலையாக இருந்தது.

உலகச் சோலையில் இந்தப் பறவை
ஒரு விருந்தாளி
காலை முரசம் ஒலித்திட்டால் அது
கடுகிப் பறந்துவிடும்.

பறவை ஒன்று [ஆன்மா] கொஞ்ச நேரம் தங்கிவிட்டுப் போகிற ஓர் அழகிய தோட்டமாக இவ்வுலகம் இப்பாட்டில் உவமிக்கப்படுகிறது. புறப்படவேண்டிய நேரம் வந்துவிட்டால் விருந்தாளி புறப்படத்தானே வேண்டும்? இன்னொரு மாதிரி கூறினால் இவ்வுலகம் என்பது ஒட்டக வணிகர்கள் தங்கிப் போகும் வழிமனை போன்றது. அங்கே இராக்காலத்தில் விருந்தினர்கள் தங்குகிறார்கள்; பொழுது புலர்ந்ததும் அவர்கள் புறப்பட வேண்டியிருக்கிறது. இந்த உலகம் எவ்வளவுதான் பேரழகாக இருந்தாலும், இங்கேயே என்றென்றும் தங்கிவிடலாம் என்று யாரும் நினைக்க முடியாது. எனவே, 'இதற்கு பின் என்ன நிகழும்? மரணத்திற்குப் பின் நாம் எங்கு போகப் போகிறோம்?' என்றெல்லாம் நாம் சிந்திக்கவே வேண்டும்.

மரணநாளை மறைமுகமாக நினைவூட்டி உலக நிலையாமையை நாம் உணருமாறு செய்கிறார் பரீது:

உன்னையீன் றவர்கள் யாண்டுச் சென்றனர்? நீ
யாருடைக் கால்வழி? ஓ பரீது,
முன்னரே உனக்குமுன் மறைந்தனர் நீ மட்டும்
என்றும் வாழ்வாயெனும் எண்ணமா?

நண்பர்களும் உறவினர்களும் ஒவ்வொருவராக இறந்துபோவதை நாம் கண்முன்னே கண்டிருந்தும், 'நாமும் ஒருநாள் இதுபோல் சாகத்தான் போகிறோம்?' என்று எண்ணாமலே இருக்கிறோமே, இது உண்மையில் பேதைமையல்லவா?

வாழ்வின் நிலையற்ற தன்மையை அவர் திரும்பத்திரும்ப எண்ணுகிறார்; அதை அழுத்தமாக நினைவூட்டும் வகையில் பருவமாறுதல்களை நம் கவனத்திற்குக் கொண்டுவருகிறார். மாறிவரும் பருவச்சூழலில் மரங்களெல்லாம் இலைகளை உதிர்த்துவிட்டு வெறுமனே நிற்பதையும், உலகப்பொருள்கள் அனைத்திலுமே நிலையற்ற தன்மை இருப்பதையும் அவர் உள்ளங்கை நெல்லிக்கனியாகக் காண்கிறார்.

பருவங்கள் மாறும் வனம் மெய்நடுங்கும்
மரங்கள் இலைகளை உதிர்க்கும்
தோன்றிய எல்லாம் மறைந்திடும்; நித்தியம்
தேடியும் எங்கணும் காணேன்.

மரணத்தின் வருகையை மனிதர்கள் உணருமாறு செய்ய செய்கு பரீது மற்றொரு முறையையும் கையாளுகிறார். தளர்ச்சியையும் துன்பத்தையும் தரும் முதுமைப் பருவத்தை அடிக்கடி நினைவுபடுத்துகிறார். நான்கு சுலோகங்களில் அவர் இக்கருத்தைச் சொல்கிறார். காலச் சுழற்சியில் பொறிபுலன்கள் ஒவ்வொன்றாக அடங்கிவருவதையும் கடைசியில் தவிர்க்கவியலாத முடிவுக்கு நம்மை இட்டுச்செல்வதையும் அவர் ஒவ்வொரு சுலோகத்திலும் குறிப்பிடுகிறார். மனிதன் உலக இன்பங்களைவிட்டு விலக மறுக்கிறானே! அவன் நூறு ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்வதாகக் கொண்டாலும் கடைசியில் மண்ணோடு மண்ணாக மடியத்தானே வேண்டும்! இந்த உண்மையை மனிதர்கள் அறிந்துகொள்ள வில்லையே என பரீது வியப்பிற்குள்ளாகிறார்.

மூத்து முதிர்ந்தனன் பரீது! அவன் மொய்ம்புடல்
மெல்லத் தளர்ந்து மெலிந்தது காண்
நூறு வருடமே வாழினும் கடைசியில்
மண்ணொடு மண்ணாக மாறுதல் மெய்!

பற்களும் பாதமும் விழியும் செவிகளும்
செயல்பட மறுத்தன; என் உடலோ
உற்றார் உறவினர் விட்டொழிந் தாரென
'ஓ'வென் றழுது கதறியதே!

முடியும் வெளுத்தது; தாடி நரைத்தது;
மீசையும் வண்ணம் மாறினகாண்!
முன்னறி வில்லா காழ்ப்புடை ஆன்மா
மூழ்கித் திளைப்பதேன் புலனுகர்வில்?

பாலை நிலத்திலும் மலையிலும் அன்றுஎன்
பாதங்கள் நடந்தன; அருகிலுள்ள
குளியல் தொட்டியும் நூறுகா தங்கள்
தொலைவாய்த் தெரியுதே இற்றைதினம்!

என்று பாடுகிறார் பரீது. மேலும் கடைசியாக அவர் கூறுகிறார்:

நடந்ததெல் லாம்ஏன்? பரீது, பார் இதை
எதிர்காலம் இதோ என்னருகில்
கடந்தகாலம் என்பது அதோ என்
கண்ணுக்கெட் டாமல் மறைந்ததுவே!

முதுமை என்பது, வாழ்வின் அந்திமாலையை நினைவூட்டுவது; ஆனால், இதற்காக பரீது வாழ்வில் வைத்திருந்த நம்பிக்கையை முற்றுமாய் விட்டுவிடவில்லை. உணர்வு மரத்துப்போன மனிதன் உரிய காலத்தில் தக்க செயல்களை முன்னுணர்வோடு மேற்கொள்ள வேண்டும் என்னும் கருத்தையே அவர் வலியுறுத்தினார். வாழ்வு சிறிது; முதுமைப் பருவம் வாழ்வின் இறுதி. எனவே, மதிப்புமிக்க இடைக்காலத்தை ஏன் வீணாக்கவேண்டும்? அவர் தம் 'ராகா சுகி லலித்' என்னும் படைப்பில் இளமைக் காலத்தின் கழிவுபற்றியும் நல் வாய்ப்புக்களை இழந்தமைபற்றியும் பாடுகிறார். உள்ளத்தைத்

தொடும் தன்னுணர்ச்சிப்பாட்டு அது.

ஓ, மனிதனே, இதைக் கேள், நீ படகைத் தள்ளும்போதே
பாயை விரிக்கும் கயிற்றைக் கவனிக்கவில்லை
ஏரியிலோ பெரும்புயல், படகு எப்படி மிதக்கும்?
உலக இன்பங்கள் குசும்ப மலர் போல்
கணத்தில் மாறுபவை; அம்மலர் தொட்டாலே
உதிர்வதைக் கண்டதில்லையா?
என் அன்பனே, நீ அதைத் தொட்டுவிடாதே,
உதிர்ந்துவிடும்.
இந்த வாழ்க்கை எஜமானனின் ஆணைக்கு அடங்கும்
பேதைப்பெண் போன்றது.
இளமை கழிந்தது; மார்பகங்களில் மீண்டும் பால் நிரம்பாது;
இன்பமான தழுவல்கள் இனி இல்லை.
பரீது சொல்கிறான்; என் ஆன்ம சகோதரியே கேள்,
ஒருநாள் இந்த உயிரன்னம் அதற்கு விருப்பமில்லாவிடினும்
பறந்துபோய்விடும்
இந்த உடல் பிடி சாம்பலாய் மாறும்!

இப்பாட்டில் பரீது இறைநேயமற்ற ஆன்மாவைச் சுக்கான் இல்லாத படகோடு உவமித்துப் பேசுகிறார். உரிய காலத்தில் செயலை மேற்கொள்ளாவிட்டால் அது அழிவில்தான் முடியும். விரைவில் உதிரும் குசும்பமலர்போல் இவ்வுலக இன்பங்கள் நொடிப்பொழுதில் மறைந்துவிடும் என்பதை அறியாமல் மனிதன் புலனுகர்ச்சியிலே ஆழ்ந்துகிடக்கிறான். காதல் இளமை எல்லாமே போய்விடும். திரும்பிவரப்போவதில்லை. எஜமானனோ இந்த வாழ்வு இப்படிக் கழிந்து போவதைக் கவனித்து வருகிறார். ஒரு நாளைக்கு இந்த உயிர் அழியும்; உடல் மண்ணாகும். இப்பாடல் நுண்மையான உணர்வுகொண்ட தன்னுணர்ச்சிப் பாடல்; இதன் படிமம் படிப்போர் மனத்தில் அதிர்வலைகளை ஊட்டக்கூடியது. இதன்கண் அமையும் வேகம்மிக்க சொல்லாட்சி தற்காலிக இன்பங்களைப் பெரிதாகக் கருதி வாழும் மனிதனைக் கடுமையாய் எச்சரிப்பதுபோல் அமைந்துள்ளது. அவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளக்கூடிய ஒரே ஒரு வாய்ப்பு இதுதான் என்பதுபோல அதனைச் சுட்டுகிறது.

மற்றொரு சுலோகத்தில் நழுவிப்போன சந்தர்ப்பங்களையும் திரும்பப் பெறமுடியாது போய்விட்ட கடந்த காலத்தையும் நினைந்து

பரீது பாடுகிறார்:

ஒரு பெண் கன்னியாய் இருக்கும்போது
மணம்செய்து கொள்ள விரும்புகிறாள்;
மணமானபின் கன்னித் தன்மையை விழைகிறாள்.
அவள் மறுபடியும் கன்னியாக முடியாது, பரீது!

மனித உயிர் நிர்வாணம் அடைய ஒரே ஒரு சந்தர்ப்பந்தான் அளிக்கப்படுகிறது: அது நழுவிவிட்டால் மீண்டும் அதைப் பெற முடியாது என்பதே இதன் கருத்தாகும்.

தம் வாழ்நாள் நாள்தோறும் விரல்விட்டு எண்ணப்படுவதை உணரவில்லையென்றும், அப்படி உணர்ந்திருந்தால் இவ்வளவு பேதைமையாய் அதனை வீணாக்கியிருக்க மாட்டேனென்றும் பரீது சொல்கிறார்:

எள்ளின் விதைகள் இவ்வளவே என்று
எனக்குத் தெரிந்திருக்குமாயின்
கைக்குள் அடக்கிக் காத்திருப்பேன்
என் மணவாளன் இளமையோன் என
எனக்குத் தெரிந்திருந்தால்
இப்படி நான் பயனற்றுப் போகேன்!

இதே கருத்தை மேலும் வற்புறுத்துவதற்காக இன்னும் பல உவமைகளை அவர் பயன்படுத்துகிறார்:

நம் உறவு முடிச்சு இவ்வளவு நெகிழ்ந்தது என்பது
எனக்குத் தெரிந்திருக்குமானால்
நான் முடிச்சை மேலும் இறுக்கியிருப்பேன்
ஓ! என் அன்பே, உலகம் முழுதும் உன்னையல்லாது
வேறுயாரையும் நான் தேடவில்லை.

முதற்பகுதியில் கூறப்படும் எள் விதைகள் நம் வாழ்வின் மூச்சுகளைச் சுட்டுகிறது; அது கணந்தோறும் எண்ணப்படுவதுபோலவே காக்கப்படுவதும் வேண்டும். இரண்டாவது வரியில் 'மணவாளன்' என்பது கடவுளைக் குறிக்கிறது. "அவனை இளமை நலம்கொண்ட மணவாளனாக நான்

உணர்ந்திருந்தால் கடவுள் என் அன்பைத் தக்கதாக ஏற்றிருப்பார்; என் வாழ்வும் கொன்னே கழிந்திருக்காது.''

இரண்டாவது சுலோகத்தில் கடவுளோடு அவருக்கிருக்கும் பிணைப்பு உலகியல் நாட்டத்தால் நெகிழ்ந்து போயிருப்பது தெரிந்திருந்தால் அதனை இன்னும் இறுக்கமுடையதாக ஆக்கியிருக்கலாமே என்றும், ஏனெனில் அவர் உலகம் முழுதும் தேடினாலும் அவரைப்போல் தமக்கு இனியராக யாரையும் காணமுடியவில்லையென்றும் கூறுகிறார்.

இப்பாடல்களில், வாழ்ந்த ஆண்டுகள் பயனின்றி வறிதே கழிந்ததற்காக பரீது இரக்கம் தெரிவிக்கிறார். வாழ்வின் படாடோபம் சிறுமையுடையது என்கிறார். தன் நெஞ்சில் இறைநேயம் இன்மைக்காக அவர்கொள்ளும் வருத்தம் நன்கு புலனாகிறது; எனினும், அதே நேரத்தில் ஈடிணையற்ற மெய்ப்பொருட் தரிசனமும் புலனாகிறது. வேறு வார்த்தைகளில் கூறினால், இறைவனினும் மேம்பட்ட பொருள் யாதொன்றும் இல்லையாதலின், அதனை அடைவதே வாழ்வின் பெருநோக்காய் இருத்தல் வேண்டும் என்னும் கருத்து இங்கு வலியுறுத்தப்படுவதை அறிகிறோம்.

பரீது உலக வாழ்வின் பலதரப்பட்ட நிலைகளையும் கூர்ந்து கண்டார். உலக வாழ்வின் கணநேரத்தன்மையை உணர்ந்தார். பீடும் பெருமிதமும் தோன்ற தன்முனைப்போடு வாழ்ந்த எத்தனையோ சுல்தான்களும் பெருங்குடிமக்களும் ஒவ்வொருவராக மறைந்துபோனதையும், பேரரசுகளும் பெருமாளிகைகளும் இருந்த இடம் தெரியாமல் அழிந்ததையும் உணர்ந்தார். இவ் உலகஇயற்கை என்னும் உண்மை அவரை என்னவோ செய்தது.

யாருக்காக இம்முரசுகள் ஒலித்தனவோ,
யாருடைய தலைக்குமேல் இக்கொற்றக்குடைகள்
மெல்ல அசைந்தனவோ
யாருடைய மாண்பினை இப்பாணர்களெல்லாம்
பாடி மகிழ்ந்தார்களோ,
யாரை கௌரவிக்க இந்த எக்காளங்கள் ஊதப்பட்டனவோ,
அவர்களெல்லாம்... அந்தோ! .... கடைசியில்
சுடுகாட்டில் மீளாத் துயிலில் ஆழ்ந்தார்கள்.
ஏழைகளைப் போல...... அனாதைகளைப் போல
அவர்களும்தான்
புதையுண்டார்கள்.

வெற்றாரவாரமுடைய இவ் உலகவாழ்க்கை கடைசியில் மரணத்தில்தான் முடிகிறது எனில், அரண்மனைகள் மீதும் மாடமாளிகைகள் மீதும் மாந்தர்கள் ஏன் இவ்வளவு மோகம்கொண்டு பேயாய் அலைகிறார்கள்? விடை இதுதான்:

ஓ! பரீது, வீடுகள், மாளிகைகள்,
சொர்க்கபுரி போன்ற மனைகள்
இவற்றிலெல்லாம் ஆசைவைக்காதே
இந்த பளுவான மண்ணுலகம் உன்மீது விழும்போது
உனக்கென்று ஒரு நண்பன் வரமாட்டான்.

ஓ! பரீது, மாடகூடங்களையும் செல்வத்தையும் நினையாதே
சுடுகாட்டை நினை.
நீ உலர்சருகாகப் போகும் அந்த இடத்தையே நினை.

ஒரு காலத்தில் அழகென்றும் பெருமையென்றும் நாம் கருதுபவை என்ன ஆகின்றன? அந்தோ! எவ்வளவு இரங்கத்தக்க நிலை இது! மனிதன் ஆணவத்தால் கடவுளை மறக்கிறான். விளைவென்ன? அந்நேர்த்தியும் கவர்ச்சியும் – எல்லாம் வீணே அழிகின்றன. அடிமுதல் முடிவரை தன்னை ஒப்பனை செய்துகொண்டே அழகிய பெண்ணொருத்தி தன் காதலனுக்காகக் காத்திராமல் தூங்கப்போகிற ஓர் சொற்சித்திரத்தைத் தம் பாடலொன்றில் பரீது காட்டுகிறார். விளைவென்ன? பூசப்பட்ட கஸ்தூரியின் மணம் நுகர்வாரின்றிக் கழிகிறது; கடவுளால் வேண்டப்படுவது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் தூய பக்தியே; வெறும் புறச்சடங்குகள் அல்ல.

குளித்து முழுகி ஒப்பனை செய்து
கொத்துப் பூக்களைத் தலையிற் சூடி
கோதை துயின்றாள் பஞ்சணையில்
[கணவன் கைவிட] கஸ்தூரி வாசம்
காற்றில் கலக்க வெறும்முடை நாற்றம்
ஒன்றே மிஞ்சிற் றவளிடத்தே!

பக்தனின் விசுவாசமற்ற நிலை இளம்பெண்ணின் வெறும் ஒப்பனையோடு இப்பாட்டில் ஒப்பிடப்படுவதைக் காண்க.

வாழ்வின் மாறும் தன்மை, பேரரசுகளின் நிலையற்ற நிலை, அழகின் அழியும் இயல்பு ஆகிய அனைத்தின் வாயிலாகவும் பரீது நமக்கு உணர்த்தும் உண்மை இதுவே. ஆன்மீக நலத்துக்குப் பயன்படாத அனைத்து நாட்டங்களையும் நாம் துறத்தல்வேண்டும் என்பதே அது.

உறுபயன் நல்கா தொழில்க ளனைத்தையும்
உதறித் தள்ளடா! ஓ பரீது,
இல்லையேல் தேவனின் பொற்சபை போங்கால்
நாணிக் கவிழும் நிலைவரும்காண்!

தம் செயல்களின் பயன் ஈதென அறியாத பேதை மக்களை அவர் கேலிக்குரலோடு எள்ளி நகையாடுகிறார்.

எட்டியை வித்திய மேழி உழவன்
திண்டுக்கல் திராட்சையைத் தின்ன விழைகிறான்
காடா நெசவில் காலம் கழித்தவன்
காஞ்சிப் பட்டினை உடுத்த நினைக்கிறான்.

'எதை விதைக்கிறோமோ அதையே அறுக்கிறோம்' என்னும் முதுரையைத்தான் அவர் நமக்கு உணர்த்துகிறாரென்பதில் ஐயமில்லை. ஆனால், சூஃபி என்னும் நிலையில் அவர் கடைசியாக நமக்கு அறிவுறுத்துவது இதுவே; உலகியல் இன்பங்களோடு தன்னைப் பிணித்திருக்கும் தளைகளை அறுக்காதுபோனால் ஒருக்காலும் மனிதன் மனஅமைதியைப் பெறமுடியாது. உலகியல் நெருப்பின் வெப்பத்திலிருந்து விடுபடவேண்டுமானால் அவனுக்கு இறைவன் மீது இடையறாத பக்தி வேண்டும்; இஃதொன்றே அவனைக் காக்கவல்லது.

கனன்றெரி தழலே இவ்வுலகம்
கடையேன் ஒன்றும் அறியேனே
தேவன் காத்தனன்; இன்றேல்நான்
தீவாய்ப் பட்டே அழிந்திருப்பேன்.

பரீது ஒரு தார்வேசராக வாழ்ந்தவர்; ஒரு தார்வேசரின் வாழ்க்கை ஓர் இரவலரின் வாழ்வு போன்றதே. அவர்கள் உலகியல் என்னும் எரிநெருப்பிலிருந்து தம்மைக் காக்கவல்ல புதிய வழியைக் காண்பவர்கள்; துறவு, வழிபாடு, தியானம் முதலிய நெறியில்

நிறபவர்கள். உலகப் பற்றுக்களிலிருந்து தம்மை முற்றாக அறுத்துக்கொண்டுவிடுவது அவ்வளவு எளிதல்லவென்பது பரீதுக்குத் தெரியும். உலகப்பற்று நம்மைப் பேரளவு பிணித்துக்கொண்டிருக்கிறது; அவற்றை முற்றாகத் துறப்பது அரிது. துறவுநெறியை மேற்கொள்ளத் தளராத மனவுறுதியும் துணிவும் தேவை. அவை எல்லோருக்கும் அமையா; ஒரு சிலருக்கே அது முடியும்.

ஏ! பரீது, உலகவழியில் நான் நடைபயிலும்போது
கடவுளின் வாசலில் நான் தார்வேசராக ஆவது கடினம்
உலகப் பற்றுக்கள் என்னும்
மூட்டை முடிச்சுகளை கட்டிக்கொண்டு
நான் சுமந்துவருகிறேன்; அவற்றை விட்டெறிய முடியுமா?

துறவாடைகளை யார் வேண்டுமானாலும் அணிந்துகொள்ளலாம்; ஆனால், அகத்தே துவேசத்தையும் வெறுப்பையும் களைவது எல்லோராலும் முடியாது என்பதை பரீது அறிவார். வழிபாட்டுக் கம்பளத்தைத் தோளிலும் சூஃபிகளின் கருப்பாடையை உடம்பிலும் சுமந்துகொண்டு அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்த, ஆஷாடபூதிகளாய் வாழ்வோரை அவர் ஒரு பாடலில் அழகுற வருணிக்கிறார். அவர்கள் கபடநெஞ்சமும், வஞ்சக நினைவும் கொண்டவர்கள்; அவர்கள் மக்களிடையே பிளவையும் உட்பூசல்களையும் உருவாக்குபவர்கள். புறத்தே புனிதர்களாகவும் பக்திமான்களாகவும் காட்சியளிப்பினும் அவர்கள் உள்ளம் இருட்டறையாகவே இருக்கிறது. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் இவர்களது பொய்த் தோற்றத்தைவிட முரண்பாடு மிக்கதாக வேறொன்று இருக்க முடியுமா?

தோளில் தியான விரிப்பினையும்
துறவு உடையை மேனியிலும்
வாயில் தேனார் மொழியினையும்
வரித்துக் கொண்டே தார்வேசர்
உளமும் புறமும் ஒத்திசையா
ஊன வாழ்வே வாழ்கின்றார்
பகட்டாய் ஒளிரும் மனக்குகையில்
படிந்து கிடப்பது இருளொன்றே!

மற்றொரு பாட்டிலும் பரீது இதே கருத்தை மேலும் வலியுறுத்துகிறார். கருப்புநிற அங்கி மட்டுமே ஒருவனைத் துறவியாக்கிவிட முடியாது என்கிறார். நெஞ்சம் முழுதும் பாவநினைவுகளே நிரம்பி வழிகிறபோது எந்த அங்கியை அணிந்தால்தான் என்ன, ஒருவன் தார்வேசராக முடியுமா?

**ஆடை இரண்டும் கருப்பாக**
**அணிகின் றேன்நான்; நெஞ்சத்தில்**
**தீமை வளர்த்தேன்; பெயர்மட்டும்**
**தார்வேசர் என்றே திரிகின்றேன்.**

ஸூஃபிகள் வழக்கமாக அணியும் கருப்பு அங்கியை பரீது வெறுத்தார் என்று நாம் கருதிவிடக் கூடாது. கருப்பு அங்கி புனிதர்களின் ஆடை; உலக இன்பங்களைத் துறந்துவிட்டதன் உயரிய அடையாளம். எளிமையையும் பற்றறுத்த நிலையையும் புலப்படுத்தும் இவ் ஆடையில் இறைவனைத் தொழுவது எளிதாகும். இவ் ஆடையை ஏற்போர் மனித நெஞ்சங்களில் மண்டிக்கிடக்கும் அறியாமையை அகற்றி ஞானமென்னும் சுடர்விளக்கை ஏற்றிவைக்கவேண்டும். இவ் உயர்ந்தநிலை கருப்பு அங்கி அணிந்து தார்வேசர் என்று சொல்லிக் கொள்வதால் மட்டும் வந்துவிடாது.

தார்வேசரின் வாழ்க்கையை ஒருவன் ஏன் ஏற்க வேண்டும்? அது கடினமான வாழ்க்கை நெறி; ஞானத்தைத் தேடியலையும் முடிவில்லாத பயணம். ஒருபோதும் தணிக்கமுடியாதபடி மேன்மேலும் வளரும் ஒருவகைப் பசி அது. உலகியல் இன்பங்களால் அதனை நிறைவுசெய்ய முடியாது.

உலகியல் இன்பங்களை நாடும்போது துறவுவாழ்வு புனிதத்தன்மையையும் தகுதிப்பாட்டையும் இழந்துபோகிறது. நம் பார்வைக்குப் புல்னாகும் இப்புறவுலகம் [illegible]தினால் பறக்கும் உமி போன்றது. இது ஒரு பொம்மலாட்டப் பொம்மை. ஒளிவிட்டு விரைவிலே மறைந்துபோகும் ஒளிக்கீற்று. போதாது போதாது என்று நினைக்கிற நிறைவடையா உள்ளத்திலிருந்தே வேண்டும் வேண்டும் என்று நினைக்கிற பேராசை எழுகிறது. இவ் ஆசையை அடக்குவது கடினம். அதை அடியோடு துறப்பதும் முடியாது. வாழ்வின் அர்த்தமும் நோக்கமும் யாது என்னும் வினா எல்லாவற்றையும் ஒரேயடியாக மூழ்கி மறைக்கும் பெரிய நீர்வீழ்ச்சிபோல் நம்முன்

தோன்றுகிறது. பரந்துபட்ட இவ் அண்டத்தும் நாம் வாழும் இவ் உலகத்தும் நடக்கும் எத்தனையோ புதிர்மறைவான நிகழ்வுகளை நாம் ஒருகணம் எண்ணிப்பார்த்தால் நம் மனமே அமைதி இழந்துபோகிறது; நம் அறிவு எதையும் உறுதியாகப் பற்றிக்கொள்ள முடியாமல் கலங்குகிறது. மனித உடம்பினை இயக்குவது எது? அது அழிகிற ஒன்றல்ல; அழியாதது. நம் மரணத்திற்கு அப்பாலும் இருப்பது; இவ் உடம்பு பொய்யாய்ப் பழங்கதையாய் மண்ணோடு மண்ணாக ஆனபிறகும் அது வாழவல்லது. நாம் உயிர் என்றும் ஆன்மா என்றும் கூறுகிறோமே இதற்கும் பரமாத்மாவிற்கும், அல்லது நாம் பிரம்மம் என்று கூறுகிறோமே அதற்கும் ஏதேனும் உறவுண்டா? அல்லது இவ் உலகம் வெறும் நிழலா? மாயையா? நனவுநிலை கடந்த பேரானந்த அமைதியா? சாவா? இவ்வினாக்களுக்கு நாம் அவ்வளவு எளிதாக விடைகாண முடியாது. நம் வேதங்களும் உபநிடதங்களும் மிக நெடுங்காலத்திற்கு முன்னரே இவற்றிற்கு விடைகாண முயன்றிருக்கின்றன என்பது உண்மை. அவர்தம் சிந்தனைகளே வழிவழியாக நம்மை அடைந்து நம் கலாச்சாரத்தின் ஒரு பகுதியாகவும் ஆகிவிட்டன. ஆம்! நம் சிந்தனையின் ஒரு கூறாகவே அவை இன்றளவும் நிற்கின்றன. பிரகதாரண்ய உபநிடதத்தில் சொல்லப்படும் ஒரு செய்தி: யாக்யவல்கியனைப் பார்த்து ஒரு சீடன் கேட்கிறான். “குருவே! எந்தப் பிரம்மம் தனக்குத் தானே நேரில் காணக்கூடியதாயும் வேறொன்றை வேண்டாததாயும் அனைத்தையும் வியாபித்தும் அனைத்தினுள்ளும் உறையும் ஆத்மாவாயும் உள்ளதுவோ அதை எனக்கு விளக்கிக் கூறுங்கள்”. அவர் சொல்கிறார், “அது நீ தான். அதுவே எல்லாவற்றிலும் உள்ளது”. இதேபோல் சாந்தோக்கிய உபநிடதத்திலும் ஒரு செய்தி வருகிறது. உத்தாலகர் தம் மகன் சுவேதகேதுவிடம் இவ்வாறு கூறுகிறார், “எது அணுமாத்திரமான சூட்சும வஸ்துவோ அதையே ஆத்மாவாய்க் கொண்டது இதுஎல்லாம்; அதுவே சத்தியம்; அதுவே ஆத்மா. அதுவே நீயாக உள்ளாய்”. இந்தத் தத்துவச் சிந்தனை மரபு பல்வேறு வழிகளில் தார்வேசர்களிடத்தும் வந்தது. எவ் இறையியற் பின்னணி உடையவராயினும், அவர்கள் எல்லாவற்றுள்ளும் உறைகின்ற பரம்பொருளைக் கண்டார்கள். அதனோடு ஒன்றுபட அவாவினார்கள். இதுவே முடிவற்ற பெருந்தாகம்; தீர்க்கமுடியாத காயசண்டிகைப் பசி.

பரீது இந்த மெய்ஞ்ஞானத்தை வேண்டிநின்றவர்; எனவே, அவர் பிரம்மத்தோடு ஒன்றி நிற்கும் நிலையை நாடினர். அனைத்தையும் விரும்பித் துறக்கும் விருப்புடையவரானார். காடுகளில் மறைந்து வாழும் கடினமான துறவுவாழ்வையும் போற்றினார். ஒவ்வொரு கணமும் இறைவனின் திருச்சன்னிதானத்தில் இருப்பதுபோல் உணர்ந்தார்.

பரீது, காடுகளில் வாழும் புட்களுக்கு
நான் தரப்படும் பலியாக இருக்கிறேன்;
அவை பழங்களையுண்டு நிலத்தில் உறங்குகின்றன;
ஆனால் கடவுளை விடவில்லை.

இடையறாத மெய்ஞ்ஞான நாட்டத்திலிருந்து பிறந்ததே தரீக்கத் எனப்படும் இறைமார்க்கம். அதுவே, சூஃபிகளின் மார்க்கம்; இறைவனோடு ஒன்றுபடும் மார்க்கம். சூஃபிகளுக்கு அன்பு என்பதே ஆன்மீக அனுபவத்தின் அடித்தளமாக இருந்தது. இறைவனை அடைய எண்ணும் தீராத நாட்டமும் ஆராத காதலும் வேறு எவற்றையும்விட ஷரீயத்தின் சட்டங்களைவிடவும் முக்கியத்துவம் உடையனவாயின. இறைநேயம் என்பது உலகியலை மறப்பதும் துறப்பதுமே ஆகும். அது அனைத்தினின்றும் விலகி நிற்பது; உலகிலுள்ள எதனோடும் தம்மை இணைத்துக்கொள்ளாத பெருநிலையே ஆகும். பாரசீகக் கவிதைகளில் வருவதுபோலவே, பரீதும் மானிடக்காதலை, தெய்வீகக் காதலை வெளிப்படுத்தும் குறியீடாகப் பயன்படுத்தினார். கடவுளே நாயகர்; பரீது நாயகி. இந்த நாயக—நாயகி பாவமே பல்வேறு படிநிலைகளில் காட்டப்படுகிறது. காதலரைக் காணும் வேட்கையால் ஏக்கற்று நிற்கும் நிலை, பிரிவாற்றாநிலை, காதலர்களின் வாழ்வில் உருவாகும் எண்ணற்ற தடைகள், காதலனுக்காக எல்லாவற்றையும் அர்ப்பணித்துக்கொள்ள முனையும் பெருமனம், காதலனின் உள்ளத்தில் நிலைபேறான இடத்தைப் பிடித்துக்கொள்ள காதலி மேற்கொள்ளும் முயற்சிகள், கடைசியாக இருவரும் இரண்டற்ற அத்துவைத நிலையில் கலக்கும் பேரின்பம்—இவை அனைத்தையுமே பரீது நாயகியார் பேசினார். ஏனெனில் சூஃபிகளுக்கு 'இஷ்க்' எனப்படும் காதற்பரவசமும் தன்னை அர்ப்பணித்துக்கொள்ளும் பக்தி நிலையும் வெவ்வேறானவை யல்ல; ஒன்றே.

பரீது வாழ்நாள் முழுவதும் கடும்நோன்பினை மேற்கொண்டார்.

கழுவாய் கருதித் தன்னைத்தானே ஒறுத்துக்கொண்டார். தாம் காணவிழைந்த இறைநிலையை இவற்றின் வாயிலாகவே அடைய முடியும் என்று கருதினார். தன்னடக்க நிலைக்குத் தம்மைக் கொண்டுவருவதற்காகத்தமக்குத்தாமே மேற்கொண்ட ஒறுப்புக்கள், அவரது உடம்பினை வருத்தின. ஏறத்தாழ எலும்புக்கூடு போன்றே அவர் ஆனார். இருப்பினும் இறைவன் அவருக்குத் திருவருள் புரிய முன்வரவில்லை. இத்துன்பத்தையும் மனமுறிவு நிலையையும் பரீது வாய்விட்டே கூறினார்.

பரீது, குருதிவற்றிய என் உடம்பு எலும்புக்கூடாகிவிட்டது
பாதங்களையும், உள்ளங்கைகளையும் பறவைகள்
கொத்துகின்றன.
இந்த வினாடிவரை இறைவன் என்முன் வரவில்லை
இறையடியானின் அவலத்தை நீ பார்த்தாயா?

அவர் இவ்வண்ணம் வாய்விட்டுப் புலம்பினாலும் இவைனிடம் வைத்திருந்த நம்பிக்கை ஆட்டம் காணவில்லை; அவர் யார் வீட்டு வாசலுக்கும் தேடிச்சென்று தா என்று இரக்க விரும்பவில்லை; மற்றவர்களைச் சார்ந்துநிற்பதைக் காட்டிலும் மரணத்தால் தழுவப்படுவதையே பெரிதாகக் கருதினார். தம்மை இப்படி நடத்தவே கடவுள் விரும்பினாரெனில், அதைவிட இவ்வுலகத்தைவிட்டுப் போய்விடுவதையே அவர் விரும்பினார்.

மற்றவர் இல்முன் மண்டியிட் டிரப்பதோ?
மாற்றிடு இந்நிலை; அல்லாக்கால்
கூடுவிட் டாவியை நீக்கிடு; என்னை ஆட்
கொண்டிடும் முறையும் இதுவோகாண்!

பரீது நாயகியார் இறைவனுக்காக ஏங்கினார். பிரிவாற்றாமை என்னும் பெருந்துயரில் உழன்றார். ஏக்கமும் துன்பமும் காதலெனும் தீயை அணையாமற் காப்பதற்கு அவருக்குத் தேவையாகவே இருந்தன. காதல் துன்பத்தை ஒரு நல்லரசனின் இன்பஆட்சியோடு அவர் ஒப்பிட்டார். அது இல்லையெனில் வாழ்வே நரகமாகிவிடும் என்றார். காதலுணர்வு பொங்கி வழியும் வாழ்வே, அது துன்பத்திற்குரியதாயினும், போகமுடைய அரசவாழ்வாகும். காதலுக்கு இடமில்லாத வாழ்வு, இறந்தோரைச் சுட்டெரிக்கும் நன்காடு போன்றதே; அது மரணம் போன்றதுமாகும் என்றார்.

மனிதர்கள், காதலின் துன்பத்தைப் பற்றியே பேசுகிறார்கள்
ஓ! காதலே, நீ ஒரு மாட்சிமை தங்கிய முடிமன்னன்
பரீது, காதல் துன்பம் இல்லாத உடம்பினை
வெறும் சுடுகாடுபோல்தான் நீ கருதவேண்டும்.

ஒரு பாட்டில் தம் காதலர் அருகே இல்லாத நிலையை உள்ளம் நெகிழும் வகையில் உணர்வுபொங்கப் பாடுகிறார்.

பரீது,
தாங்க முடியாத உடல்நோவே என் பஞ்சசயனம்
துன்பமே அப்படுக்கையைக் கட்டிவைக்கும் நாண்
பிரிவுக் கொடுமையே நான் மூடிக்கொள்ளும் போர்வை
என் வாழ்வு இருந்தபடி இது!
ஓ! என் இறைவா,
உன் அருட்பார்வையை என்பக்கம் சற்றே
திருப்பமாட்டாயா?

ஆன்மீகப் பெருநிலையை அடைய ஏக்கமும், பிரிவும் இன்றியமையாதன என்று பரீது கருதினார். அவையே இறைவனைத் தம்மோடு கூட்டிவைக்கும் வாயில்கள் என்பது அவர் கருத்து.

நாயகன்—நாயகி என்னும் குறியீட்டு உத்தியை பரீது பல பாக்களில் தொடர்ந்து பயன்படுத்துகிறார். நாயகனைப் பிரிந்த நாயகியின் கையற்ற நிலையைப் பேசும்போது மற்றொரு பொருத்தமான வினாவையும் எழுப்புகிறார். கணவரால் கைவிடப்பட்ட ஒரு நாயகியின் மனநிலை எப்படி இருக்கும்?

நேற்றைய இரவில் நித்திரை இழந்தேன்:
நெட்டுயிர்த்தது என் தேகம்.
கணவன் கைவிட்ட காரிகையிடத்தே
போ! போய் ஒரு கேள்விகேள்;
'பெண்ணே! கங்குல் வெள்ளத்தை எப்படிக் கடக்கிறாய்?'

இப்பாட்டில் பரீது முதலில் ஒரு செப்புவாக்கியத்தையும் அடுத்து ஒரு வினா வாக்கியத்தையும் அமைத்திருக்கிறார்.

கவிதையோ, நாடகமோ எதுவாயினும் எக்கலையாயினும் — கலையின் செயற்பாடு வினாவை எழுப்புவதோ ஒரு விடையைச் சொல்வதோ அன்று; மாறாக, படிப்போர் மனத்தில் ஓர் உணர்வெழுச்சியைத் தூண்டுவதும், விளக்கம் கூறமுடியாத நொய்ம்மையான உணர்ச்சிகளுக்கு வாழ்வு தருவதுமேயாகும். மேற்கண்ட பாட்டில் உணர்ச்சியனுபவம் பரிபூரணமாக வெளிப்படுவதை நம்மால் அறியமுடிகிறது. இப்பாட்டு நம் நெஞ்சில் உருவாக்கிக் காட்டும் படிமம் இதுவே.

ஒரு பெண் படுக்கையில் நிலைகொள்ளாமல் தவித்துக் கொண்டிருக்கிறாள். செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சித சந்தனமென்று சொல்லி யாரோ தடவிவிட்டதுபோல் துடித்துப்போகிறாள். படுக்கையும், அதன்மேல் உள்ள விரிப்பும் ஆற்றாமை, துன்பம் என்பனவற்றின் குறியீடுகளாகின்றன. பொறுக்கலாற்றாத இத்துயர் இறைவனோடு அவளுக்கேற்பட்ட பிரிவின் விளைவேயாம். ஒருநாட் பிரிவினைக் கவிஞர் நினைத்துப் பார்க்கிறார்; இந்த ஒருநாட்டுயரே தன்னை இந்நிலைக்கு ஆளாக்குமாயின், கட்டிய கணவனால் நிரந்தரமாய்க் கைவிடப்பட்ட ஒரு பெண் தன் நாயகனின் பிரிவால் எங்ஙனம் கையற்று நிற்பாள்? கவிஞரின் கற்பனையை இந்நினைவே தூண்டுகிறது. எனவே தான், காதலுக்கு இடமில்லாத வெறும் வாழ்வை இறந்தோரை எரிக்கும் மயானத்தோடு அவர் ஒப்பிடுகிறார்.

மற்றொரு பாடலில் இதுபோல் வேறோர் அனுபவத்தை விவரிக்கிறார். ஒரு பெண்ணின் துயரத்தையும் பிரிவுநிலையில் இரவுநேரம் நெடியதாக நீளுவதையும் அப்பாடல் காட்டுகிறது.

பரீது,
இப்பாழ் இரவு என்று விடியுமோ?
நோம்என் நெஞ்சே, நோம்என் உடம்பே!
கடவுளை ஒருகணப் பொழுதும் கருதார்
வெறுமை வாழ்வினை தெறுமொழி கூறே!

"இராக சுகி" என்னும் நூலில் பரீது மற்றொரு காட்சியைச் சித்திரிக்கிறார். நாயகனைப் பிரிந்து புலம்பும் ஒரு பெண்ணின் ஆற்றொணாப் பெருந்துயர் உணர்வுநலம் தோன்ற அப்பாட்டில் காட்டப்படுகிறது.

என் தலைவனின் பிரிவால் தகிக்கும் நெருப்பில்
கைகளை ஒடித்துக் கருக்கினேன்;
என் துணைவருக்காக ஏங்கி ஏங்கி
சித்தம் திரிந்து பித்தியாகினேன்
ஓ! என் துணைவ, நீங்கள் என்மீது
கோபமாய் இருந்தீர்கள்
அது நும் குற்றமன்று;
பெண்ணாய்ப் பிறந்த இப்பேதையின் குற்றமே.

பிரிவு நெருப்பில் கருகி, பிச்சியாய் நிற்கும் இப்பேதையின் படிமத்தைத் தொடர்ந்து பரீது மற்றொரு படிமத்தை உருவாக்குகிறார். கத்தும் குயில்கூட பிரிவு நெருப்புபட்டுத்தான் கருகிவிட்டதாம்; கருப்பு நிறம் பெற்றதாம். இக்குறியீடும் படிமமும் இப்பாட்டில் கவிஞரால் மிகச் சாதுரியமாகக் கையாளப்பட்டுள்ளன.

குயிலே! உன்றன் கொத்துச் சிறகுகள்
கருகிப் போன காரணம் என்னவோ?
காதலர் பிரிவுதந்த காம ஒள்ளெரி
என்றன் சிறகுகளை இப்படி ஆக்கின.

கவிஞர் குயிலைப் பார்த்து 'நீ ஏன் கருப்பாக இருக்கிறாய்?' என்று கேட்கிறார். பிரிவாற்றாமை என்னும் பேரழல் தன் சிறகுகளைக் கருக்கிவிட்டதாகக் குயில் கூறுகிறது. கற்போரின் நெஞ்சில் கழிபேருவகை ஊட்டும் இவ்வடிகளில் வாழ்நாளுக்குரிய மொத்த சோகத்தையுமல்லவா கவிஞர் பொதிந்து வைத்துவிட்டார்?

உண்மைக்காதலர், ஒருவருக்காக ஒருவர் தியாகம் செய்வதில் பின்னிடார். பரீது இம்மனநிலையில் இருக்கிறார். இறைவனோடு ஒன்றி நிற்பதற்காக எதனையும் இழக்கத் தயாராய் இருக்கிறார். அழகு என்பது கடவுள் தந்த வரம்; எல்லாப் பெண்களும் அழகினைப் பேணிக்காக்கவே பெரிதும் விரும்புவர். இது பரீதுக்குத் தெரியும். ஆனால், அவர் வெறும் கவிஞரல்லர்; தீர்க்கதரிசி. அழிந்துபோகும் அழகைவிட உண்மையான காதலே மிகவும் உயர்ந்தது என்பதை உணர்கிறார். காதல் நிலைபேறுடையது; அழகு விரைவில் அழிந்துபோவது. நுகர்வதற்குக் காதலர் இல்லாத நிலையில் அழகால் பயனில்லை; காதல் இல்லையெனில் அழகும்

நிலைத்திருக்க முடியாது; அது வறிதே மறைந்துவிடும்.

பரீது எழுதிய வேறு இரு பாடல்களில் — அனைவரும் நன்கறிந்த பாடல்களே அவை — கொட்டும் மழையில் காதலியின் வீட்டை நோக்கி காதலன் செல்லும் காட்சியை அவர் வருணிக்கிறார். அப்பாடல்கள் புனைவியற் கவிதைக்கேயுரிய பொலிவு கொண்டவை; சொல்லப்போனால் பஞ்சாபியில் பாடப்பட்ட அமரத்துவம் வாய்ந்த காதற்பாட்டுக்கள் அவை. இடமோ நெடுந்தொலைவு. வழியோ சேறும் சகதியுமானது; அப்போது சென்றால் கொட்டும் மழையில் அவனது ஆடைகளெல்லாம் தொப்பலாய் நனைந்துவிடும். போகாது தங்கிவிட்டாலோ அவனது காதல்மனம் உடைந்து நொறுங்கும். அவன் மழைக்கடவுளை நோக்கி "மழையே, நீ கொட்ட வேண்டியதையெல்லாம் உடனே கொட்டிவிடு; கொஞ்சநேரம் வழியைவிட்டு நில். நான் உடனே அவளைக் காணவேண்டும். அப்போதுதான் என் காதல் மலரும்" என்று கூறுகிறான். இப்பாட்டிற்கு நாம் ஆன்மீக நிலையில் பொருள் காணவேண்டும். பரீது கூறுகிறார்; பக்திவழி நெடியது; பல தடைகள் உடையது. உலக இன்பங்களைத் துறந்தாலன்றி பக்தன் இறைவனை அடைய முடியாது. கொண்ட நெறியில் பற்றுறுதியாக நில்லாதவரும், ஏற்படும் தடைகளை வெற்றிகொள்ள இயலாதவரும் தம் இலக்கை ஒருபோதும் எட்டுவதற்கில்லை. உலக உடைமைகளைப் புறத்தே வெறுத்தொதுக்கிவிட்டு முன்னேறிச் செல்பவர்களே இறைநேயராய் இலங்க முடியும். இரண்டாவது பாட்டில் பரீது புயலை அழைக்கிறார்; வருகை தருமாறு வேண்டுகிறார். மழையோடு சேராது உறுதிகொண்ட மட்டும் வேகமாக வீசுமாறு கோருகிறார். தம் மனவுறுதியை எவையும் தளர்த்திவிடக்கூடாது என்பதில் அவர் உறுதியாக நிற்கிறார். அவரை எதுவும் தடுத்து நிறுத்தப்போவதில்லை. எந்தவிதமான தியாகத்தையும் செய்வதற்கு அவர் சித்தமாகவே இருக்கிறார். தம் நம்பிக்கையில் அசைக்க முடியாத உறுதியோடு இருக்கிறார். இறைவனோடு ஒன்றிநிற்க முடியும் என்பதில் அவருக்கு எள்ளளவும் ஐயமில்லை. இங்கேதான் தரீக்கத் என்று சொல்லப்படுகிற இறைமார்க்கம் அப்பாலைத் தன்மையோடு தெளிவாக வருணிக்கப்படுகிறது.

வீதியிலோ சேறும் சகதியும்
என் காதலியின் இல்லமோ நெடுந்தொலைவு
ஆனால், நான் தலைவியுடன் கொண்டிருக்கும் காதலோ
எல்லையற்றது.

நான் வெளியே புறப்பட்டால்
என் கம்பளி நனைந்துவிடலாம்.
உள்ளேயே இருந்துவிட்டால்
என் நெஞ்சம் உடைந்து நொறுங்கும்
கடவுளால் அனுப்பப்பட்ட இக்கடும்மழையில்
என கம்பளி நனைந்துதான் போகட்டுமே!
நான் என் காதலியைச் சந்தித்தாக வேண்டும்
இன்றேல்
அது முறியலாம்; நானே காணாமற் போய்விடலாம்.

இதேபோக்கில் பரீது தன் உறுதிப்பாட்டை இன்னொரு பாட்டிலும் வெளிப்படுத்துகிறார். உடம்பு கடும் வெப்பத்தால் மூடுலைபோல் ஆனாலும், எலும்புகள் விறகுபோல் எரிந்துபோனாலும், தம் காதல் தளராது என்கிறார். வேறெதையும் கருதாமல் அவனே சரணாகதியென நிற்கும் மனவொருமைப்பாட்டு நிலையையும், ஆளாகி நிற்கும் இன்ப அன்பையும் அப்பாட்டு சித்திரிக்கிறது; பக்திநெறியில் தடையாக எதுவும் வருவதற்கில்லை; இந்த ஞான நாட்டத்தில் சலிப்புறப்போவதும் இல்லை; இப்பயணத்தில் அவரது கால்கள் தள்ளாடி ஓய்ந்துபோயினும், தலையாலும்கூட நடப்பார். இதுபோன்ற மிக எளிய படிமங்களை அவர் கையாளுவதன் வாயிலாக பரீது தம் ஆழ்ந்த பேருணர்வுகட்கும், பக்திக்கும் சொல் வடிவம் தருகிறார்.

உடம்பு மூடுலைபோல் ஒள்ளெரி கனலும்
எலும்புகள் தழலில் எரிந்து பொசுங்கும்
கால்கள் தளரும்; ஆயினும் என்றன்
தலைவியைக் காணநான் தலைகொண்டும் நடப்பேன்

நீண்ட நெடுங்காலமாகத் தாம் மேற்கொண்டு வாழ்ந்த தவவொழுக்கத்தால் பரீது தானும் கடவுளும் ஒன்றே என்று கருதும் மிக உயர்ந்த பக்திநிலையை அடைகிறார். அவரது பூதஉடம்பு — தம் செயற்பாடுகளுடன் ஒத்திசைய மறுக்கிறது. எனினும் அவர் புலன்கடந்த அப்பாலை நிலையிலும் ஆன்மீக வளர்ச்சியின் முகட்டிலும் நிற்பதாக உணர்கிறார். அத்தகைய இருப்புநிலையை அவர் மறைமுகமாக வெளிப்படுத்துகிறார். அவரது உடம்பை

யாராவது வெட்டினாலும் உடம்பினின்றும் ஒருசொட்டுக் குருதி வெளிவராது என்கிறார். ஏனெனில் இறைநேயம் கொண்டு இறைநிலையில் ஒன்றுபட்டு நிற்போர் உடம்பில் குருதியே இராதாம். வேறுவகையாகச் சொன்னால் அத்தகைய ஆன்மீகச் செல்வர்களின் உள்ளும் புறமும் இறையுணர்வு ஒன்றே கலந்துநிற்கும் என்பதே அதன் கருத்து.

ஆன்மாவின் நிலையை வேறு இரு பாடல்களில் பரீது வருணிக்கிறார். ஆன்மாவை அன்னத்தோடு ஒப்பிடுகிறார். அன்னம் தூய்மையே வடிவானது; நீர்தேங்கிய குட்டைக்குள்ளேயே அது வாழ்ந்தாலும், அது தன் அலகினை அமுக்குத் தண்ணீரில் நனைக்காது. அதுபோல் இறைநேயம் கொண்ட விழுமிய ஆன்மா உலக வாழ்வில் ஈடுபட்டிருந்தாலும் இவ்வுலகின் ஆசாபாசங்களால் அது எள்ளளவும் பாதிக்கப்படுவதில்லை; எந்த இடத்திலிருந்து வந்ததோ அதே இடத்திற்குத் திரும்பிப்போக அது எந்த நேரமும் தயாராகவே இருக்கிறது.ஓர் அன்னம் தானிய வயலில் வந்து தங்குகிறது; அத தானியத்தை உண்ணாது. இது தெரியாத சிலர் அதனை வயலைவிட்டு ஓடஓட விரட்டுகின்றனர் என்று கூறுகிறார். அவர் கூறும் கூற்றின் உட்பொருள் இதுவே. உண்மையான தார்வேசர்கள்—துறவிகள்—உலக இன்பங்களில் நாட்டம் கொண்டவர்களாலும், அவர்களைப் புரிந்துகொள்ளவியலாத மூடர்களே அவர்களது தூயநெறியை ஐயுறுகின்றனர். இவ்விரு பாடல்களிலும் உண்மைத் துறவிகளின் ஆன்மீக மேம்பாட்டினையே பரீது வியந்து பேசுகிறார்.

கழிமுகச் சுனைக்குக் கடுகியே வந்து
சின்னாள் வைகும் அன்னப் பறவைகள்
அலகை நீருள் அமிழ்த்தினும் நீரைப்
பருகா; வானில் பறந்து போகும்
வேட்கை யுடனே விரைந்து அவண் விலகும்.

தானிய வயலுள் தங்கினும்அவ் அன்னம்
கொய்கதிர் உண்ணாக் கொள்கையது; அதனை
அறியா மூடரோ அற்ப நினைவால்
வெகுண்டே கவண்கல் வீசுவர், அந்தோ!

பரீது உலகியல் நாட்டங்களிலிருந்து தம்மை முற்றாக

விலக்கிக்கொண்டார். மலபரிபாகம் இருவினையொப்பு என்னும் பக்குவ நிலையை அடைந்தார். 'நீயும் நானுமாய் ஏகபோகமாய்' என்று தாயுமானார் சொல்லுவது போன்ற உயர்ந்த அத்துவித நிலையின் உச்சிக்கே சென்றார். உலகியல் நிலையில் கிட்டமுடியாதது எனக்கருதும் ஒப்பற்ற இனிய தேனிப்பு நிலையில் அவர் தோய்ந்துநின்றார்.

கரும்பினும் கட்டிப்பட்ட பாகினும்
பருகு தேனினும் ஆதரு பாலினும்
இனியன் தன் அடைந்தோர்க்கு ஈசனே

என்னும் பாடல் அடிகள் இங்கு நினைவுகூரத் தக்கன.

இறைவனின் அருட்கொடையாகத் திகழும் பக்தியுணர்வு என்பது பெறற்கரிய ஒன்று. எனவே, எல்லா மனிதர்களும் வரையறுக்கப்பட்ட தம் வாழ்நாளில் அப்பேருணர்வைப் பெற்றுத் திகழுவேண்டுமென பரீது வற்புறுத்திக் கூறுகிறார்.

கடவுள் என்பார் கனிந்த பேரீச்சை
திரைகொழித் தோடும் தெள்ளுதேன் அருவி
வாழ்நாள் மெல்ல வறிதே கழியும்முன்
நாடொறும் அவற்றின் நலத்தை நுகர்நீ.

மனிதனின் வாழ்நாள் மிகக் குறுகியது; ஆன்மீக அனுபவங்களோ மதிப்பிடற்கரிய செழுமையுடையது – இவ்விரு சிந்தனைகளும் பரீதின் செய்யுட்களில் திரும்பத் திரும்ப இடம்பெறுகின்றன. பக்தி உணர்வைக் கனிந்த பேரீச்சையோடும், தேனருவியோடும் ஒப்பிடுவதன் மூலம் அவ்வனுபவத்தின் தகவினை நாம் எளிதாய் அறிந்துகொள்ளும் வகையில் அவர் புலப்படுத்துகிறார்.

இறுதியாக ஒரு வினா: பரீது கடவுளை எங்கு கண்டார்? முன்னர் கூறியதுபோல் அவர் கடவுளை வேறெங்கும் காணவில்லை; தன்னுள்ளேதான் கண்டார்.

உன்னுளே இறைவன் உறைகிறான்; இதனை
உணர முடியாத ஓ! மானுடனே!
முட்கள் நெரியும் கானதர் ஊடே
தேடி அலைந்து திகைப்பதேன்?

என்று கேட்கிறார் கவிஞர்.

இப்பாடல்களில் இறைமார்க்கத்தின் மூன்று படிநிலைகள் [தரீக்கத், மரீஃபத், ஹகீகத்] ஒன்று கலந்து வெளிப்படுவதை நாம் காண்கிறோம். பரீது கோட்பாடுகளை மட்டுமே அலசி ஆராயும் தத்துவஞானியல்லர். இறையனுபவத்தின் உச்சியில் நின்ற மாமுனிவர். பரிபூரணத்துவமுடைய ஆன்மீகப் பெருவாழ்விற்குரிய வழிதுறைகளை எடுத்துரைப்பதையே அவர் நாடினார். மனிதனின் துன்பங்களையும் துயரங்களையும் பிறிதின்நோய் தன்நோய்போல் போற்றும் பெருங்கருணை மனத்தையும் பரீது நன்கு அறிந்திருந்தார். இக்கருணை மனமே மனிதனை அவனுடைய தாழ்நிலையிலிருந்து மேலெழச் செய்து எல்லாச் சிக்கல்களுக்கும் எளிய தீர்வாய் அமைந்திருக்கும் ஆன்ம நேயத்தை மலரச்செய்வதை உணர்ந்திருந்தார். ஏனைய ஞானியர்கள் சமயத் தலைவர்கள் போலவே இவரும் மனித குலத்தின் துன்பத்திற்குக் காரணம் உலகப்பற்றுக்களே என்று தெளிந்தார். இப்பற்றே பகட்டும் பாவமும் நிறைந்த வாழ்விற்கு அவனை இழுத்துச் செல்கிறது. செய்கிற நல்வினை தீவினைகளுக்கேற்ப மனிதன் மறுபிறவியில் தண்டனை பெறுகிறான். அத்தண்டனை சாதாரணமானதாக இருக்குமா? சாதாரணமான மணியும் தாளும் பந்துமே இத்தனை படாத பாட்டிற்கு இலக்காகிறதென்றால், பாவவாழ்வே நடத்தும் மனிதனுக்குமட்டும் தண்டனை சிறிதாகவா இருக்கும்? வாழ்வு மாறும் தன்மை உடையதென்பதைப் பரீது அறிவார். எனவே, அவர் மனிதர்களை நோக்கி 'உலக இன்பங்களில் ஆழங்காற்பட்டு நிற்காதீர்கள்' என்று அறிவுரை புகன்றார். அச்சமும் குரூரமும் கலந்த சொல்லோவியங்களில் மரணத்தை அவர் சித்திரித்தார். மரணம் மணக்கோலம்பூண்ட மாப்பிள்ளைபோல் வரும்; ஒருநாள் இந்த உடற்சிறையைத் திடுமென உடைத்து நொறுக்கிவிட்டு உயிரென்னும் மணாட்டியைத் தூக்கிக்கொண்டு போய்விடும் என்று அவர் கூறினார். மரணத்திற்குப் பின் புதைகுழியில் கிடக்கும் ஆன்மா எவ்வளவு நீண்டகாலம் காத்திருக்கிறதென்றும், நியாயத்தீர்ப்பு நாளில் யாதுநிகழ்கிறதென்றும் அவர் விவரிக்கிறார். தூயவாழ்வு வாழ வேண்டியதன் அவசியம், சமுதாய நெறிகளைக் கற்பித்தலின் தேவை என்பன பற்றியும் அவர் தீவிரமாகவே சிந்தித்தார். உலகப்பற்றுக்களைத் துறப்பது பற்றியும், இறைவனின் திருவடிகளையே சரணாகக் கருதும் இறைநேயம் பற்றியும் அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார். பக்திவழி என்பது நெடிதாக இருக்கலாம். இந்த வழியின் பருவநிலையும்கூடக் கொடுமை நிறைந்ததாய் அமையலாம்; எதிர்ப்படும் இடர்ப்பாடுகளும்

கடக்கமுடியாதனவாய்க் காணப்படலாம். எனினும், அவ்வழியில் நிறுத்தங்கள் ஏதுமில்லை. வழிநடைப் பயணத்தில் உன் கால்கள் தளர்ந்துபோய் அடிபெயர்க்க மறுத்தால் தலையாலும் நடக்கலாம். கடைசியாக நாம் பெறவிருக்கிற பெறலரும் விழுமிய பரிசில் ஒருகாலும் பொய்யாகாது. நீ இறைவனை உனக்குள் இட்டுக்கொண்டால் அவனும் உன்னைத் தன்னுள் இட்டுக் கொள்வான். ["என்னைக் கொண்டு உன்னில் வைத்தேன்; உன்னையும் என்னில் இட்டேன்"] இவ்வாறு செய்தால் நீ கடவுளையும் அடையலாம்; உலக வாழ்வில் எண்ணியதையும் பெறலாம். நீ இறைவனை உன் இதயத்திலேயே காண்பாய். அவன், கனிந்த பேரீச்சப்பழம் போலவும், தெள்ளலை கொழிக்கும் தேனருவியாகவும் இனிப்பான். அவனைத் தேடிக் காண்பதில் தீவிரம் காட்டு; அவனோடு நெருக்கமாக நில்; மனித ஆன்மா இறைவனுடன் ஒன்று கலக்கும் நிலையில் அந்நெருக்கத்தை நீ உணர்வாயாக. இதுவே பரீது தம் ஆன்மீக வாழ்வில் தனக்காகவும் பிறர்க்காகவும் கண்ட ஞானப்பெருநெறி எனலாம்.

# இயல் : ஆறு

# ஒரு கலைஞர்

திருக்குர்ஆன், சுன்னா என்னும் இருவேறு உலகங்களில் பரீது வாழ்ந்தார். இஸ்லாமிய சட்டங்களையும் விதிமுறைகளையும் போற்றினார்; சூஃபிச நெறியிலும் நின்று அனைத்தையும் கடந்த பரம்பொருளோடு தனிப்பட்ட முறையில் உறவாடினார். இளமைக் காலத்தில் பரீது தம் பெற்றோரின் செல்வாக்கால் மெல்லமெல்ல உருவானார்; அவரது சமயவுணர்வு அவர் காலத்து மக்களால் முறையே பண்பட்டு வளர்ந்தது. அவர் அனைத்தையும் கற்றுத் துறைபோகிய வித்தகர்; எனவே, அறிவைத் தேடுவதிலேயே வாழ்நாளின் பெரும் பகுதியைச் செலவிட்டார். பெரும்பாலும் திருக்குர்ஆன், இஸ்லாமிய நூல்கள் என்னும் அளவிலேயே அவர்படிப்பு நின்றது. தம் வாழ்நாளின் கடைசிப் பகுதியில் அவர் கவிதைகள் புனைந்தாரென்றும் அறிகிறோம். அக்கவிதைகளில் அவர் தெளிந்த ஞானம் பெற்ற சமயக் குரவராகவும் பக்குவமுதிர்ச்சி பெற்ற சிந்தனையாளராகவும் காட்சி தருகிறார். ஓர் இளங்கவிஞனின் சிறகடித்துப் பறக்கும் கற்பனையெழுச்சி அவர் பாடல்களில் எட்டுணையும் இல்லை. அவரது கருத்துக்கள் அனைத்தும் ஆழ்ந்த சிந்தனை தெளிந்த காட்சி என்னும் நிலையில் பிறந்தனவே. அவர் ஒரு துறவுமனையை நடத்திக்கொண்டு சமயகுருவாக வாழ்ந்தார். தம்மை நாடி வந்தோரின் குறைகளைக் கேட்டறிந்தார். எனினும் அவரது வாழ்க்கை பெரும்பாலும் தனிமை வாழ்வாகவே அமைந்திருந்தது. பரபரப்பு நிறைந்த டெல்லி மாநகரைவிட்டு அவர் அயோதான் என்னும் இடத்திற்கு தனிமையில் இனிமை காணவே சென்றாரெனலாம். அரசர்களின் அவைக்களங்கள், அறிவு ஜீவிகளின் மன்றம் முதலியவற்றை அவர் வெறுத்தொதுக்கினார். அம்மாதிரியான சமூக நடைமுறை வாழ்வில் அவருக்கு விருப்பம் இல்லை. ஆமை தன் கைகளையும் கால்களையும் ஓட்டுக்குள் இழுத்துக்கொள்வது போல உலகத்தின் பரபரப்பிலிருந்து தம்மை உள்வாங்கிக் கொண்டார். தம் பார்வையைப் புறஉலகினின்று திருப்பி உள்முகமாகத்

தமக்குள்ளேயே செலுத்திக்கொண்டார். அப்பாலை உலகில் சஞ்சரிக்க முயன்றார். இறையனுபவத்தை நாடுவதையும் அதைப் பிறர்க்கு எடுத்துரைப்பதையும் தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டார். அவர் ஒரு சமயகுரவர்; ஆன்மீகவாதி; கவிஞர். அவரது பாடல்களை [ஷபாத்துக்கள், சுலோகங்கள்] நாம் காலவரிசைப்பட அடைவு செய்தல் கடினமெனினும் அவற்றை இரு கூறுகளாகப் பிரித்துக்காட்ட முடியும். ஒருசார் பாடல்கள் 'ஷரீயத்' எனப்படும் இறைச்சட்டங்கள் பற்றியவை; மற்றவை 'தரீக்கத்' பற்றிப் பேசுபவை. வேறுசொற்களிற் கூறினால் அவரது படைப்புகள் இருவேறு உலகு பற்றியவை. அவையனைத்தும் கடவுளை நாடித் தனித்துவாழ்ந்த தூய ஆன்மாவின் போதனைகளாகவும், ஏக்கங்களாகவும் மலர்ந்தவை.

பரீது தம் எண்ணங்களை வெளிப்படுத்த பேரளவில் முல்தானி பஞ்சாபி எனப்படும் மொழியையே பயன்படுத்தினார். இளமைக் காலத்தில் அவர் கற்றமொழி அதுவே. இறையடியார்கட்குப் போதித்துக்கொண்டும் பக்கீர்கள் தார்வேசர்கள் முதலியவர்களோடு கருத்துப் பரிமாற்றம் செய்துகொண்டும் வாழ்ந்த காலத்தில் அவர் பஞ்சாப் பகுதியின் பிற வேறுபகுதிகளில் வழங்கிய பல்வேறுபட்ட மொழி வெளியீட்டு நலன்களை ஆழமாகப் புரிந்துகொண்டு அவற்றைத் தன்மயமாக்கிக் கொண்டார். இதனால், அவரது சொந்தமொழி ஆழ்ந்த உணர்வுகளை வெளியிடுவதற்கேற்ற வண்ணம் மெருகும் முதிர்ச்சியும் பெற்றது. அவர் காலத்தில் வாழ்ந்த பெரும்பாலான சாதுக்கள் 'பிரிஜ்' 'இந்திவி' முதலியவற்றையே பயன்படுத்தினர். பரீது பாரசீக மொழிகளில் பேரறிஞராகத் திகழ்ந்தமையால் அவரது படைப்புக்களில் ஆங்காங்கே அம்மொழிச் சொற்கள் விரவிக்கிடப்பதை நாம் காணமுடிகிறது. அவர் அறிஞராகவும் கவிஞராகவும் இருந்தமையால் தம் விழுமிய எண்ணங்களை வெளிப்படுத்துவதற்கு ஏற்ற படிமப்பாங்கானதுமான சொற்களையும் தொடர்களையும் ஒன்றுகலந்து ஒரு கூட்டுக்கலப்பான மொழியை அவரே உருவாக்கினார். அவர் எதையும் முனைப்பாக எண்ணிச் செயல்படும் தீவிர எழுத்தாளர்; அவரது சொல்லாட்சிகள் பெருமிதத்திற்குரியனவாகவும் இலக்கிய வளம் கொண்டனவாகவும் இருந்தன. முல்தானி பஞ்சாபி மொழி தனக்கென ஓர் தனித்தன்மை சுவை கொண்ட மொழியாகும். பரீது அதனைப் பேரளவு தனக்குரியதாக ஸ்வீகரித்துக் கொண்டார். ப்ரஜபாஷை நளினமும் இழுமென் ஓசையும் கொண்ட அருமையான சொற்றொகுதிகளையும் பெண்ணிய அழகு களையும் உடையதெனினும் பரீது அவற்றை

முழுமையும் தன்மயமாக்கிக் கொண்டதாகக் கூற முடியாது. எனினும், சில பாடல்களில் இன்னோசை மிக்க சொல்லாட்சிக் கூறுகளை நாம் காணலாம். அம்மொழியின் இசைநலத்தையும் கவர்ச்சியையும் அவர் தம் பாடல்களில் ஓரளவு கொண்டு வருகிறார். பொதுமக்கள் அக்காலத்தில் பேசிய மொழியில் பாரசிக மொழியின் சொற்கள் கலந்திருந்தனவென்றும், அவை எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட நெறியாக இருந்ததென்றும் அறிகிறோம். பரீதின் பாடல்களில் அவை ஒருங்கிணைந்த கூறாகவே ஆகியிருந்தது. முல்தானி பஞ்சாபி மொழியே பின்னாளில் தரப்படுத்தம் பெற்ற பஞ்சாபி மொழியாக குருநானக்காலும் அவருக்குப்பின் அவர் வழியினராலும் பயன்படுத்தப்பட்டன. எனவே, பரீதின் பாடல்களில் புதிதாம் தன்மையும் அதே சமயம் பரீது காலத்து வட்டார முல்தானிப் போக்கும் காணப்படுவது வியப்புக்குரியதன்று.

கவிஞர் என்னும் நிலையில் பரீதின் மேதைமைத் தன்னுணர்ச்சிப் பாடல்களிலேயே வெளிப்பட்டது. அறிவாழமும் உணர்ச்சியின் இழைவமைதியும் கொண்ட பாடல்களை அவர் புனைந்தார். தன்னுணர்ச்சிப் பாட்டின் தங்குதடையற்ற ஓட்டம் சற்றே குறைந்திருந்தாலும் அவர் பாடல்களில் இன்னோசைப் பாங்கு இருக்கவே செய்தது. அவர் எதனையும் செறிவாகவும் திட்பமாகவும் பாடும் போக்கினர். அவர் புனைந்த பெரும்பாலான சுலோகங்கள் ஈரடிகளால் அமைந்தனவே; நான்கு சுலோகங்கள் மட்டுமே நாலடிப்பாட்டுகளாக உள்ளன. அவருடைய ஷாபத்துக்களில் நான்கில் மட்டுமே இறைக்காதல் அல்லது உலகவாழ்வின் அநித்தியம் சற்றே விரிவாகப் பேசப்படுகிறது. இசைநயத்தை உணர்ந்து போற்றும் நுட்பமான செவி அவருக்கு இருந்தது; இசை உடலின் நாடிநரம்புகளை மெல்ல இயக்கி அமைதியில் செலுத்துவதுபோல் அவர் உணர்ந்தார். ஆனால், அவரது சுலோகங்கள் ஈரடிப் பாக்களாகவே இருந்தமையால் இன்னோசைக்கு அதிக இடம் தரமுடியவில்லை. சில ஒலிக்கூறுகளைத் திரும்பத்திரும்பச் சொல்வதால் மட்டுமே இன்னோசை தோன்றமுடியும். ஈரடிப் பாட்டில் அதற்கு இடமேது? அவரது சுலோகங்களில் வளமான கருத்துக்கள் சூல்கொண்டுள்ளன. ஒவ்வொன்றும் தன்னளவில் வரையறுத்த பொருட்கூறுகளைக் கொண்டவை. முழுமையான கருத்தமைதி உடையவை அல்லது உணர்வுத் துணுக்காக நிற்பவை. தத்துவச் சிந்தனைகளுக்கு

உணர்ச்சிச் செழுமையை ஊட்டி, நல்ல நல்ல உவமைகளைப் பயன்படுத்தி கல்லார்க்கும் புரியும் வண்ணம் அவர் கனிந்துருகப் பாடினார்; எனினும் இச்சுலோகங்கள் தம்மளவில் தனித்தனிக் கூறுகளாக நின்றமையால் அவை தத்துவக் கோட்பாடுகளாகவன்றி வெறும் கருத்துத் துணுக்குகளாகவே கருதப்பட்டன. அவர்பால் பெருங்கருணை ஊற்றெடுத்த அளவுக்கு உணர்வு வீச்சு இல்லை; எனவே, அவர் கவிஞராகத் தெரிந்ததைவிட ஒரு சமய குருவாகவே காட்சியளித்தார். ஆனந்தக்களிப்பில் பாடல் பாடுவதில் அவருக்கு ஆர்வமில்லை; உபதேசம் செய்வதிலும் பயிற்றுவிப்பதிலுமே அவர் ஆர்வம் கொண்டிருந்தார். இயற்கையழகினாலோ வாழ்வின் உன்னதமான தருணங்களாலோ அவர் ஒருபோதும் ஈர்க்கப்பட்டதில்லை. வாழ்க்கையை அணுகிய முறையே அவரது தலைக்கு நறுமணம் ஊட்டிற்று. வாழ்வின் நிலையாமை, உலகத்தில் நிலைபேறற்ற தன்மை, பாவத்தின் காரணமாக விளையும் சிக்கல், மரணத்தின் உண்மை, பாவிகளுக்கு வழங்கப்படவிருக்கும் தண்டனை, இவைபற்றியே அவர் திரும்பத் திரும்ப எண்ணினார். அந்நினைவுகளே அவரது உணர்வை ஆட்கொண்டு நின்றன. இக்கருத்துப் போக்கமைந்த பாடல்கள் உபதேச மொழிகளாகவே நின்றன. மானிடக்காதலைக் குறியீடாகக்கொண்டு தெய்வீகக்காதலை விளக்க முனைந்த நாயக—நாயகி பாவப் பாடல்களிலேயே அவரது கவித்துவத்தையும் தன்னுணர்ச்சிப் பாடல்களின் வீறுமைதியையும் நாம் காண்கிறோம்.

அவர் கிராமியச் சூழலில் அமைந்த படிமங்களையும் உவமைகளையும் பயன்படுத்தினார். வாழ்க்கையை மணமகளாகவும் மரணத்தை மாப்பிள்ளையாகவும் வருணிக்கிறார். கடவுளை நாயகனாகவும் சில வேளைகளில் நாயகியாகவும் காட்டுகிறார். அவர் நம்முடைய கவனத்தையெல்லாம் மைபூசப்பெற்ற மாதரின் விழிகள், சுனைகள், குடிசைகள், படகுகள், ஆறுகள், கரும்பு, எட்டி மரங்கள், பிஜவுர் நகரத்து திராட்சைக் குலைகள், தேன் முதலியவற்றின் பக்கம் திருப்புகிறார். ஆன்மாவை அன்னத்தோடும், மரணத்தைக் கொள்ளைக்காரனோடும் ஒப்பிடுகிறார். மறைந்த உயிரை நாரையோடு ஒப்பிடுகிறார். மனிதனுக்கு வழங்கப்படும் தண்டனையை மணி, பருத்தி, தாள், கரும்புத்துண்டு, கரித்துண்டு முதலியவற்றோடு இணைத்துப் பேசுகிறார். குருதி வற்றிய உடலைக் கொத்தித் தின்னும் காகங்களையும், குருவிகளையும் பற்றிப் பேசுகிறார். ஏரியில் வந்து தங்கும் அன்னப் பறவையையும்,

ஏரியோரத்தில் கூடுகட்டி வாழும் பறவைகளையும், அவை சிறகடித்துப் பறந்துபோகும் அழகையும் வருணிக்கிறார். வாழ்க்கையை நீர்நிரம்பிய வாளியாகவும், மூச்சுக் காற்றினைக் கயிறாகவும் குறிப்பிடுகிறார். திருமணம் செய்துகொள்ளக் கனவு காணும் கன்னியர்களையும் வாழ்வின் சுமைகளைத் தாங்கியலுத்த மகளிரையும் பாடுகிறார். அவர் வாழ்ந்த இடம் எத்தகைய சூழலுடையது என்று நாம் உணரும் வகையில் பள்ளத்தாக்குகள், குன்றுகள், பரந்த சமவெளிகள் முதலியவற்றைக் குறிப்பிடுகிறார். அவரது பாடல்களில் கருங்கைக் கொல்லர்கள், கரி, மாவு, உப்பு, உலர்ந்த ரொட்டித் துண்டுகள், நீண்ட பஞ்சசயனங்கள், வழிபாட்டு விரிப்புகள், அகத்தே கறுத்து புறத்தே வெளுத்த ஆஷாடபூதிகள், அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையோடு வாழ்ந்து கடைசியில் அனாதைகளாகப் புதைக்கப்படுகிற செல்வக் குடிமக்கள் பற்றியெல்லாம் குறிப்புகள் காணப்படுகின்றன. இரவு முழுதும் கத்திக் கத்தி காதல் தீயில் கருகிய காட்டுக் குயில்களை அவர் பாட்டில் காண்கிறோம். அவர் கருப்புநிற மேலங்கியையும் பனித்துகிலையும் எள்ளி நகையாடுகிறார். ஏனெனில் பலர் அந்த அங்கியில் தம்மை மறைத்துக்கொண்டே நாடகமாடுகிறார்கள். அவரது படைப்புகளில் பல இடங்களில் ஆண்—பெண் வாழ்வு பற்றிய குறிப்புகள் வருகின்றன. தன் அன்பிற்குரிய கணவனோடு உடன் துயிலாமல் பசலை பூத்து மெலியும் பெண், கணவன்மார்களால் கை விடப்பட்ட மகளிர், அன்புக் காதலின் மறந்தநிலையில் உறங்கும் மாதர், தன்னை ஆட்கொண்ட காதலனையன்றி வேறு யாரையும் வேண்டாத பெண் முதலியோர் அவர் படைப்புகளில் இடம்பெறுகின்றனர். மேலும், பரீது தம் பாடல்களில் ஆங்காங்கே பருவங்களின் மாறுதல்களைப் பாடுகிறார். சோவெனப் பெய்யும் மழை, இலையுதிர்க்கும் மரங்கள், இவையெல்லாம் பேசப்படுகின்றன. வாழ்வின் உயிர்ப்பு அவரது செய்யுட்களில் உயிரோவியமாக்கப்பட்டுள்ளன. பரீது அவர் காலத்து மக்களை எங்ஙனம் நேசித்தார்; அவர்களுக்காக எங்ஙனம் கவலைகொண்டார் என்பதை அவரது செய்யுட்கள் வாயிலாக அறிகிறோம். அவரது படைப்புக்கள் கிராமிய வாழ்வின் பேரழகினை ஒளிப்படமாகத் தீட்டிக் காட்டுகின்றன.

அவர் எழுத்துக்களில் புலனுகர்வுக்குரிய படிமங்கள் நிறைந்து காணப்படுகிறன. சொற்களும் சொற்றொடர்களும் மிக நேர்த்தியுடன் எந்த முயற்சியும் இல்லாமல் தாமாகவே அந்தந்த இடங்களில் வந்து

விழுகின்றன. அப்படங்கள் கட்புலனுக்கு மட்டுமே விருந்தாவன என்று சொல்லமுடியாது; கற்போனின் கற்பனையையும் முழுவீச்சோடு தூண்டிவிடவல்லன. பெரும்பாலான சொல்லோவியங்கள் குரூரமாகவும் அச்சுறுத்தும் தன்மை உடையதாகவும் உள்ளன. சில மென்மையானதாகவும் விருப்பத்திற்குரியனவாகவும் விளங்குகின்றன. முதற் சுலோகத்திலேயே ஒரு மரண நிகழ்ச்சி கோரமாகக் காட்டப்படுகிறது. மரணம் குறிப்பிட்ட நாளன்று ஆன்மாவை மணந்துகொள்ள ஒரு மாப்பிள்ளைபோல் வருகிறது. கேள்வி மாத்திரையான் மட்டுமே அறியப்பட்ட, யாரும் பார்த்திராத மரணமென்னும் மாப்பிள்ளை உயிர்ப்பெண்ணைக் கவர்ந்துபோக வருகிறானாம். மென்மையான உடலின் எலும்புகளை உடைத்தெறிந்துவிட்டு அவன் ஆன்மாவை எடுத்துப் போகிறான். பரிதாபத்திற்குரிய ஆன்மா மயிரிழையினும் மெல்லிய பாலத்தைக் கடக்க வேண்டியிருக்கிறது. பாட்டில் மேலும் உணர்வழுத்தத்தைக் கொணர்வதற்காக மயிர்ப்பாலம் பற்றி மக்கள் கேள்விப்பட்டிருப்பதை நினைவூட்டுகிறார். ஆனால், அதைப்பற்றியெல்லாம் மக்கள் நினைப்பதில்லையே! வேறென்ன? கூற்றுவனிடமிருந்து அழைப்பு வந்துவிட்டால் அந்த அழைப்பை யார் தட்டமுடியும்? கொடுமையும் சித்திரவதையும், சாவின் தவிர்க்கவியலாத தன்மையும் கவிஞரால் பகட்டான வண்ணங்களில் குரூரமாகச் சித்திரிக்கப்படுகிறது. சாவு என்பது ஒரு போர்வீரன் போலவும் அவன் உயிர் என்னும் கோட்டையைச் சின்னாபின்னமாக்குவது போலவும் மற்றொரு படிமத்தைக் காண்கிறோம். இரு விளக்குகள் [இரு கண்கள்] ஒளியோடு எரிந்துகொண்டிருக்கும்போதே அவன் தன் படை முகாமுக்குள் நுழைகிறான்; கோட்டையைக் [உடம்பினை] கைப்பற்றுகிறான். அதன் மீது உட்கார்ந்து உள்ளே இருக்கும் உயிரைத் தேடிக் கொள்ளையடிக்கிறான். பின்னர் விரைந்து திரும்புகிறான். இப்படிமம் நம்மை மிகவும் திடுக்கிட வைப்பதாக உள்ளது; நேரே நடப்பதுபோன்ற உணர்வைத் தோற்றுவிக்கிறது. பரீது சில சொற்களையே பயன்படுத்துகிறார்; அவற்றை மிகக் கவனத்தோடு தேர்ந்தெடுக்கிறார். போர் வீரனே கூற்றுவன்; கோட்டையே உடல்; எரியும் விளக்குகளே கண்கள்; முகாமை அழிப்பதென்பது உடலையழித்து உயிரை வவ்வுதல். பாட்டில் வரும் சொற்கள் படிப்போர் மனத்தில் அச்ச அனுபவத்தைத் தோற்றுவிக்கின்றன. மற்றொரு சுலோகத்தில் மரணத்தை வேட்டைப் பருந்தாகப் பரீது காண்கிறார்; ஆற்றின் கரையில் தன்னை மறந்து துள்ளும் மீனை வேட்டைப்பருந்து திடுமெனக் கொத்திச்செல்கிறது.

மரணத்தின் திடீர்வருகையையும், அது விரைந்து செயல்படும் நிலையையும் அது உடலின் மீது ஆழச்செலுத்தும் திகிலையும் காட்டுகிறது. வாழ்வின் தவிர்க்கவியலாத முடிவுபற்றியும், மரணத்திற்குப் பின் மனிதனுக்காகக் காத்திருப்பது யாதென்பது பற்றியும் பேசமுற்படும்போதெல்லாம் பரீது வன்கண்ணராகிவிடுகிறார். மற்றொரு சுலோகத்தில் கரைகளை இடித்துத் தகர்த்துக்கொண்டு ஓடும் ஒரு பேராறாக மரணத்தைச் சித்திரிக்கிறார். வாழ்க்கைக்கு அப்பால் நரகம் என்னும் பெருந்தீ கொழுந்துவிட்டு எரிகிறது. பாவிகள் அதன் வெப்பம் பெறாமல் அலறித் துடிக்கிறார்கள். இவ்வாறு சித்திரிப்பதன் வாயிலாகக் கவிஞர் படிப்போர் நெஞ்சில் அதிர்ச்சியையும் அதைத் தொடர்ந்து நனவுநிலையில் விழிப்பையும் உருவாக்க நினைக்கிறார். இங்கேதான் ஒரு மார்க்கஞானி கையில் பிரம்போடு நிற்பதுபோல் நாம் உணர்கிறோம். மனித யாக்கைக்குள் மரணம் புகுதல், கதவுகளை உடைத்து நொறுக்குதல், உற்றார் உறவினரின் கண்முன்னேயே அம்மனிதனைச் சிறைக்கைதியாக அழைத்துச் செல்லுதல் அனைத்தையும் காட்டும் படிமம் ஒன்றையும் கடைசியாகப் பார்க்கிறோம். மனிதன் இந்த உலகத்திற்கு வருகிறபோது பெரும் நம்பிக்கைகளோடுதான் வருகிறான். போகும்போதோ நான்குபேர் சுமந்துசெல்ல வெறுங்கையோடும் தன்னந்தனியாகவுமே செல்கிறான். எல்லாவற்றையும் கூட்டிக்கழித்துக் கணக்குப்போட்டால் மனிதன் செய்யும் நல்வினைகள் மட்டுமே கணக்கில் வைக்கப்படுகின்றன; வேறு எதுவும் மிஞ்சுவதில்லை. நீதிக்கருத்துக்கள் ஒருபுறம் இருக்கட்டும்; சங்கிலிகளால் தளைக்கப்பட்ட ஆன்மாவின் திரும்பிப்போகும் பயணமல்லவா இவ்வளவு இரக்கத்திற்கு உரியதாக இங்குக் காட்டப்படுகிறது.

பரீதின் பாடல்களில் வேறுபல சின்னஞ்சிறு காட்சிகளையும் நாம் காணலாம். உலகியல் என்னும் மூட்டைகளைத் தலையில் சுமந்துகொண்டுபோகும் தார்வேசர்கள்; நெஞ்சில் கபடநினைவுகளையும் உடம்பில் கம்பளி உடையையும், வழிபாட்டு விரிப்புகளையும் சுமந்து போகிறவர்கள்; பாவங்களை நெஞ்சிலும் கருப்பு அங்கியை மேனியிலும் தாங்கிநிற்கும் தார்வேசராக அவரையே சித்திரித்துக்கொள்ளும் நிலை; எனினும் தார்வேசர்களைப் பற்றிய பரீதின் சொல்லோவியங்களில் மிக அருமையானது உலக இன்பங்களைத் துறந்து கானகத்தில்

வாழ்வதே. அவர்கள் நெஞ்சில் இறைவனின் திருவருட்பெருக்கு ஆறாக ஓடிக்கொண்டிருந்தும் அவர்கள் சொல்லொணாத துன்பங்களைத் தாங்கிக்கொள்வதுபோல் காட்டப்படும் சொல்லோவியமே அது.

காதலர்களின் வருகைக்காக ஏங்கிக் காத்திருக்கும் இவர் மகளிர் பற்றிய சொல்லோவியங்களும் அவர் பாடல்களில் உண்டு. ராக சுகியில் ஓர் அருமையான காட்சி. பரீதின் படைப்புகளில் மிகக் குறிப்பிடத்தக்கது அது. வேதனையில் சிக்கித் தவிக்கும் ஆன்மாவைப் பற்றிய அச்சொல்லோவியம் ஆழ்ந்த கடுந்துயரும் அவலமும் நிறைந்த காட்சியாக விளங்குகிறது. காதலுக்குரியோரைப் பிரிவதால் ஏற்படும் ஆற்றாமை ஆங்கே வெளிப்படுகிறது. பிரிவின் வெப்பத்தால் கருகிய ஒருத்தி கைபிசைந்து நிற்கும் கையற்றநிலையை அச்சொல்லோவியம் காட்டுகிறது. காதலனைத் தேடி அப்பெண் பித்தியாகிறாள். தன் காதலனைப் பார்த்து, 'என்னைப் புறக்கணித்துவிட்டாயே' என்று அவள் குற்றம்சாட்டத் துணியவில்லை. ஏனெனில், அவள்தான் அவனது காதலின் தகுதிப்பாட்டை உணரவில்லை. அவள் அழகை இழந்துவிட்டாள்; அவளது வறிய வாழ்வில் இது இழப்புக்குரியதாகிவிட்டது. பிரிவுத் தீயில் தன்னைக் கருக்கிக்கொண்ட குயிலாக அவள் நிற்கிறாள். காதலனின் பிரிவின்போது யாரும் உவகையோடு இருத்தல் இயலாது என்பதை அவள் உடன்படுகிறாள். இறைவனின் திருவருளாலும் பெருங்கருணையாலுமே அவனோடு பக்தன் ஒன்று கலக்க முடியும். அவனருளால்தான் அவன்தாள் வணங்க முடியும்.

ஆனால், அவளுக்கு ஏற்பட்ட முரண்பாடு யாது? அவள் மிகவும் பயங்கரமான கிணற்றில் விழுந்துவிட்டாள்; அவளுக்குத் துணையாக யாருமே இல்லை. வேறு வார்த்தையில் கூறினால், துயரம் நிறைந்த இவ்வுலகில் தனிமையுணர்வு அவளை ஒரேயடியாய் ஆழத்தில் மூழ்கடித்துவிட்டது. காதலனின் கருணைமட்டுமே அவளது ஒரே நம்பிக்கையாக உள்ளது. அவள் இன்னும் நரகத்தைத் தாண்டிச்செல்லவில்லை. அந்நரகம் இருபுறமும் கூர்மைகொண்ட மெல்லிய வாளாக விளங்குகிறது. வாள்மேல் நடக்கும் பயணத்திற்காக அவள் உலகவாழ்வின் போரில் தன்னைத் தகுதிப்படுத்திக்கொள்ள வேண்டும். தனிமையில் உழலும் ஆன்மாவின் துயரத்தைப் பரீது மிகவும் மென்மையாகவும் உணர்ச்சி பூர்வமாகவும் தீட்டுகிறார்.

நுட்பநயமும் விரும்பத்தக்கதுமான மற்றொரு சொல்லோவியம் சேறும் சகதியும் நிறைந்த பெருவழியில், கொட்டும் மழையில், நனைந்தவாறே செல்லும் ஒரு காதலியைப் பற்றியது. ஆடையை நனைந்துபோகாமற் காப்பதா, காதலனை அடைவதா என்பதே அவள் முன் எழும் பிரச்சனை; ஏதாவது ஒன்றைத்தான் அவள் தேர்ந்தெடுக்க முடியும். அவள் பின்னையதையே இயல்பாகத் தேர்ந்தெடுக்கிறாள். இவ்விரு பாட்டுக்களிலும் உணர்ச்சியின் வீறமதியைக் கொண்டு வருவதில் பரீது தேர்ந்த திறன் படைத்தவராக விளங்குகிறார்.

மற்ற சூஃபிக் கவிஞர்கள் போலவே பக்தியுணர்வை விளக்க பரீதும் நாயக—நாயகி என்னும் குறியீட்டு உத்தியைக் கையாளுகிறார். மணாளன் — மணாட்டி என்னும் படிமம் மரணத்தைக் குறிக்கும்போது பயன்படுத்தப்படுகிறது. முன்னை படிமத்தில் அன்பும் காதலும், பின்னையதில் அச்சமும் பயங்கரமும் இடம்பெறுகின்றன. இவ்விரு அடிக்கருத்துக்களும் — இறைநயம், மரணத்தின் கொடுமை ஆகிய இரு கருத்துக்களும் — பரீதின் படைப்புகளில் அடிக்கடி பயின்று வருவனமட்டுமல்ல — வாழ்வின் சிக்கல்களை அவர் எங்ஙனம் புரிந்து கொண்டவர் என்பதையும் அவரது கலைநுணுக்கத் திறன் வெளிப்பாட்டினையும் காட்டுவதாக உள்ளன. இவ்விரு கூறுகளின் வாயிலாகத்தான் வாழ்வின் அர்த்தமும் அது பற்றிய தத்துவமும் படிப்போர்க்கு உணர்த்தப்படுகின்றன. இக்குறியீடு தெய்வீகக் காதலின் உணர்வை வெளிப்படுத்தக் கவிஞரால் நன்கு பயன்படுத்தப்படுகிறது.

பரீதின் வேறு ஈரடிப் பாடல்களும் பேரழகுடையனவாக விளங்குகின்றன. ஒவ்வொன்றும் பட்டைதீட்டப்பட்ட வைரங்களாக ஒளிசிந்துகின்றன. ஒவ்வொன்றும் தன்னளவில் முழுமை பெற்ற — கலைத்திறனும் இழுமென் ஓசையும் உடைய — வாழ்க்கைபற்றிய யாதானுமொரு தத்துவத்தை வெளிப்படுத்துகிற பாடல்களாக உள்ளன. பரீது ஒரு மார்க்க ஞானியாக இருந்து உபதேச மொழிகளைப் புகன்றாலும் அங்கும் அவரது கலைமனமும் இனிய சொல்லாட்சிகளும் புலனாகவே செய்கின்றன. பேராசையும் காதலும் ஒருங்கே இணைந்துபோக முடியுமா? சினத்தையும் செருக்கையும் விட்டொழி; உன் உடல் துன்பம் உன்னைவிட்டு நீங்கும்; உன் வாழ்வும் அமைதிபெறும். யாராவது ஒருவன் உன்னைக் கைநீட்டி அடித்தால் அவன் காலடிகளை முத்தமிடு. இவ்வுலகில் பணப்பெருமையால்

செருக்குறுவோர் வரும் பிறவியில் தண்டனைக்கு ஆளாவர். கூழாக இருந்தாலும் கிடைத்ததைக் கொண்டு நிறைவடை; பேராசை பெரு நட்டமாகும். வித்தியது எட்டியாக இருக்கும்போது விளைவது திராட்சையாகுமா? நூற்பது கம்பளியாயின் நெய்யப்படுவது பட்டாகவா ஆகும்? இந்த ஈரடிப் பாடல்களிலேயெல்லாம் வெளிப்படையாக நீதிக் கருத்துக்களைக் கூறும்போக்கு இருப்பது மட்டுமன்றி, மனிதநேயம், சமநீதி, அன்பு என்னும் விழுமங்களும் உள்ளுறையாக இழையோடுவதை நாம் உணர்கிறோம். இவ்வாறே அவர் முதுமைப்பருவம், மரணம், தண்டனை, சுவர்க்கம், நரகம், அழகின் நிலையின்மை, செல்வச் செருக்கு, வாழ்வின் நிலையாமை பற்றியும் அவர் திட்பமும் நுட்பமும் பொருந்தப் பாடிச் செல்கிறார். எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான நிலைபேறான உண்மைகளையே பாடுகிறார். இனிய சொல்லாட்சியும் இன்னோசை நயமும் அக்கருத்துக்களைப் பொதிந்து நிற்கும் நிலையில் அவை அவற்றுக்கேயுரிய கவர்ச்சியோடு பொலிகின்றன. பாடல்கள் வெளிப்படுத்தும் உண்மைகள் பளிங்குபோல் தெளிந்தவை; அவற்றை வாய்விட்டுப் பாடப்பாட அவற்றின் இனிய மொழிநடையில் நாம் நம்மை இழக்கிறோம். பரீது ஒப்பற்ற மனித நேயக் கலைஞர்.

பரீது உலக வாழ்க்கை பற்றிச் சோகமயமான நோக்கைக் கொண்டிருந்தாரென்றே சொல்லத் தோன்றுகிறது. மனித வாழ்வின் இருண்ட பகுதிகளையும் அவரது செய்யுட்கள் உள்ளீடாகக் கொண்டுள்ளன. இவ்வுலகமே கண்ணீர்க் கடலாகச் சொல்லப்படுகிறது. உலக அழகுகளும் வாழ்வின் இன்பமும் அவர் படைப்புகளில் பேசப்படவில்லை. பெரும்பாலும் அவர் முதுமைப்பருவத்தைப் பற்றி எழுதினார். சாவைப் பற்றி எழுதினார்; வாழ்வின் நிலையின்மைப் பற்றி எழுதினார்; எனினும் இறையுணர்வுபற்றி அவர் சுவைசொட்டச் சொட்ட எழுதினார் என்பதை யாரும் மறுத்தற்கில்லை. அவரது பக்தியும் ஈடுபாடும் தன்னையே முழுமையாக ஒப்படைத்துக்கொள்ளும் சரணாகதி போன்றது. ஞானியாகவும் கவிஞராகவும் விளங்கிய அவர், தத்துவம் கலை ஆகிய இருதுறைகளிலுமே சிறந்து விளங்கினார். அவருக்குப் பின்வந்த அவரது சீடர்கள் பல நூற்றாண்டுக் காலம் அவரை ஏற்றுப் போற்றினர். அவரது வாழ்க்கையைக் கூர்ந்து காணுகிறபோதும், அவரது படைப்புகளை ஆழமாகப் பயிலும்போதும் அவரைப் பற்றி நாம் அறிவன யாவை? அவர் ஒரு இனமரபின் மூப்பர்; மரியாதைக்குரிய செய்கு; இனிய இதயமுடைய கடுமையான

ஒழுக்கவியல்வாதி; ஒரு பேரறிஞர்; அன்புமயமான சமயகுரு. அவர் இந்த உலக வாழ்வை ஊடுருவிக் கண்டு, இவ்வாழ்வின் பகட்டும் கவர்ச்சியும் நிழலைப்போல் விரைவில் நீங்கிவிடும் என்று கண்டவர்; ஒரு ஆதர்சமான தார்வேசர்; பெருமிதத்திற்குரிய பெருங்கவிஞர்; அழியாத அழகுடைய சொற்களால் தனியாத கடவுட்காதலை இனிக்க இனிக்கப் பாடியஜீவன் முக்தர். எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் முத்திநிலை கண்டவர்; கண்டவர் மட்டுமன்று, மற்றவர்க்கும் விண்டவர்.

பாபா பரீது என்று பலராலும் அழைக்கப்பட்ட செய்கு பரீது உத்—தீன் கஞ்சி ஷாகர் முதல் பஞ்சாபி சூஃபிக் கவிஞராவார். அவர் கடுந்துறவை மேற்கொண்டு தியானத்தில் ஈடுபட்டவர். அராபியம், பாரசிகம், பஞ்சாபி மற்றும் பல மொழிகளில் அவர் செய்யுட்களை எழுதினார். பஞ்சாபி மொழிகளில் அவர் எழுதிய பாடல்களைக் கற்று வியந்த குருநானக் எதிர்காலச் சந்ததியினர்க்காக அவற்றைப் பேணிக்காக்கும் முயற்சியை மேற்கொண்டார். சீக்கியர்களின் புனித நூலாகிய குருகிரந்த சாகிப்பில் பரீதின் பாடல்களும் இணைக்கப்பட்டுள்ளன. அறிவு ஆழமும் உணர்ச்சிப் பின்னலும் செறிந்தவை அவை.

திரு பாலவந்தசிங் ஆனந்து சுவைமிக்க இச்சிறு நூலில் குரு கிரந்தசாகிபில் இடம் பெற்றுள்ள பரீதின் பாடல்களில் பொதிந்து கிடக்கும் கவிதை மதிப்புகளை நன்கு ஆராய்ந்து மதிப்பிடுகிறார். மேலும் அராபியா, பாரசீகம் முதலிய நாடுகளில் தோன்றி வளர்ந்த சூஃபிசத் தத்துவம் சில்சிலா வடிவில் இந்தியாவுக்கு வந்தமை பற்றியும் சுருக்கமான அளவில் சில விவரங்களைத் தந்துள்ளார்.

இந்நூலைத் தமிழாக்கம் செய்துள்ள பேராசிரியர் மா. இராமலிங்கம் ["எழில் முதல்வன்"] மிகச் சிறந்த திறனாய்வாளரும் படைப்பாளரும் ஆவர். சாகித்திய அக்காதெமி பரிசையும் [1981], தமிழக அரசின் நல்லாசிரியர் விருதையும் [1984], பாவேந்தர் பாரதிதாசன் விருதினையும் [1990] பெற்றவர். இப்போது இவர் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தமிழியல் துறையின் தலைவராகப் பணியாற்றி வருகிறார்.

**Baba Farid (Tamil)** **Rs 15**

ISBN 81-7201-518-6